# அப்பர் தேவார அமுது

140



கி.வா. ஜகந்நாதன்






பூரவி பதிப்பகம்

# அப்பர் தேவார அமுது

(விளக்கக் கட்டுரைகள்)

கி. வா. ஜகந்நாதன்




பூரவி பதிப்பகம்
65, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை
சென்னை—600 005

# முன்னுரை

தமிழ்நாட்டில் கோயில்கள் மிகுதி. சிவபெருமானுடைய திருக்கோயில்களும், திருமால் திருக்கோயில்களும் பல. "கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்றும், "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்றும் ஆன்றோர்கள் அறிவுரை கூறிய நாடு இந்த நாடு. சிற்பச்சிறப்பாலும் புராண வரலாற்றாலும் சிறப்பை உடையவை திருக்கோயில்கள். அவற்றில் தேவார திருவாசகங்களாலும்,திவ்வியப் பிரபந்தத்தாலும் பெருமை பெற்ற தலங்கள் பல. பாடல் பெற்ற தலங்களுக்கு ஏனைய தலங்களைவிடச் சிறப்பு மிகுதி. திருஞானசம்பந்தரும், அப்பர் சுவாமிகளும், சுந்தரமூர்த்தி நாயனாரும் பல தலங்களுக்குச்சென்று தரிசித்துப் பல பதிகங்கள் பாடியிருக்கிறார்கள். கற்கோயில்களாகிய அவற்றின் பெருமையைச் சொற்கோயில்களாகிய அருளாளர் திருப்பாடல்கள் சிறப்பிக்கின்றன. எல்லாக் காலத்திலும் எவ்விடத்திலும் அந்தப் பாசுரங்களை ஓதி இன்பம் காணலாம்.

அத்தகைய திருப்பாடல்களை வேதத்துக்குச் சமானமாக வைத்துப் போற்றுவார்கள், தமிழர்கள். அந்தப் பாடல்கள் இறைவனுடைய பெருமையை எடுத்து உரைப்பதோடு பல அரிய உபதேச உரைகளையும் கொண்டிருக்கின்றன. செந்தமிழ்ப் பாவாக அமைந்திருப்பதால் அவற்றில் தமிழ் நயமும் செறிந்திருக்குமாதலால் பக்தி உணர்ச்சிஉடையார் அவற்றை ஓதுவதோடு, தமிழ் நயம் தேர்பவர்களும் அவற்றைப் படித்து இன்புறுகிறார்கள்.

அருளாளர்கள் தம்முடைய அநுபவத்தை அந்தப் பாடல்களில் கொட்டி வைத்திருக்கிறார்கள். இறைவன் திருவருளைப் பெற்றுப் பாடியவை ஆதலின் அவை ஆன்மாவுக்கு நலம் பயப்பவையாக உள்ளன.

கோயிலில் வழிபாடு நடக்கும்பொது அவற்றை ஓதுவது வழக்கம். மற்ற நேரங்களிலும் அவற்றில் சிந்தையைச் செலுத்தி ஆழ்ந்து பயின்று நலம் பெறுவார் பலர். அப்பர் சுவாமிகளுடைய திருப்பாடல்கள் மனத்தை உருக்கும் தன்மை வாய்ந்தவை. சமண சமயத்தில் சில காலம் இருந்து பிறகு இறைவன் திருவருளால் மீண்டும் சைவ சமயத்தை நாடி வந்தவர் அவர். சில காலம் தாயைப் பிரிந்திருந்து பிறகு அவளை அடைந்த குழந்தை எவ்வளவு ஆர்வத்தோடு தாயுடன் ஒட்டி உறவாடுமோ அந்த வகையில் அன்பு செய்த பெரியார் அவர். அவருடைய பாடல்களில் கழிவிரக்கமும் இறைவனுடைய பெருங்கருணைத் திறமும் ஒலிக்கும். பல இடங்கள் நமக்காகவே பாடி வைத்தவை போல் தோன்றும். நாமாக நம் உணர்ச்சிகளை வாய்விட்டுச் சொல்லத் தெரியாத ஊமைகளாக இருக்கும்போது, அந்தப் பெருமான் நம் குறைகளையே தாம் கொண்டவர்போலப் பாடுகையில், அவை நமக்கு உணர்ச்சியைத் தருகின்றன. நாமும் அவற்றினூடே இணைந்து உருகுகிறோம்.

அத்தகைய பாடல்களில் சிலவற்றைச் சிந்தித்து விரிவு படுத்தி எழுதிய கட்டுரைகள் இவை. **"திருமுறை மலர்கள்"** என்ற பெயரில் சைவத் திருமுறைகளில் உள்ள சில பாடல்களுக்குரிய விளக்கக் கட்டுரைகளை முன்பு எழுதியிருக்கின்றேன். அந்த முறையில் இந்தக் கட்டுரைகளையும் எழுதினேன். பொருட்செறிவுள்ள பாடல்களாதலின் நம் அறிவுக்குத் தெளிவாகப் புலப்படும் வகையில் இவற்றை விரித்து எழுதும் வாய்ப்பு இருக்கிறது. அதனால் இந்த விரிவு அமைந்தது.

கட்டுரைகளைப் படித்து முடித்த பிறகு பாடல்கள் நம் மனத்தில் நன்றாகப் பதியும்; சொல்லின் பொருளும் நயமும் அழுந்தும்.

தேவாரத்தின் பொருட் செறிவையும் இனிமையையும் இந்தக்கட்டுரைகளால் உணரலாகும். அருளுடைய சான்றோர்

களின் திருவாக்கின் பெருமையை அறிய இந்த விளக்கங்கள் ஓரளவு உதவுமென்று நம்புகிறேன்.

வேத சாத்திரங்களை நன்கு பயின்றார் இவற்றின் கருத்தை விளக்கப் புகுந்தால் இன்னும் நன்றாக விளக்கக் கூடும். என்றாலும் என் அறிவளவுக்குப் புலப்பட்டவற்றை இந்தக் கட்டுரைகளில் சொல்லியிருக்கிறேன்.

தமிழுலகம் ஏற்கும் என்ற நம்பிக்கையுடன் இவற்றை எழுதினேன்.

தேவாரத்தைப் பல நாள் பாராயணம் செய்து அதில் உள்ள திருப்பாடல்களில் ஆழங்காற்பட்டு இன்புற்றவர்கள் என்னுடைய ஆசிரியப் பெருந்தகையாகிய **மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதையரவர்கள்.** அவற்றைப் பாராயணம் பண்ணுகையில் கண்ணீர் மல்க இருப்பார்கள். அவர்களுடைய திருவடி நிழலில் இருந்து தமிழ் கற்ற எளியேனுக்கும் ஓரளவு அந்தப் பழக்கம் அமைந்தது. அதன் பயனாகவே இந்தக் கட்டுரைகளை எழுதும் முயற்சியை மேற்கொண்டேன்.

முருகன் திருவருளும் என் ஆசிரியப் பெருமானுடைய ஆசியும் இந்த முயற்சிக்கு உரம் தந்தன. உயிருக்கு நலம் செய்கிற அமுதைப் போல உதவும் இப்பாடல்கள் சிந்தையில் வைப்பதற்குரியவை; பலகாலும் சிந்தித்துச் சிந்தித்து ஆய்வதற்கு ஏற்றவை; நம் வாழ்க்கையில் பக்தி உணர்வையும் நன்னெறியிற் செல்லும் முறையையும் தெரிவிப்பவை.

அப்பர் சுவாமிகள் திருநாமம் வாழ்க!

'காந்தமலை'
சென்னை-28
15—10—1980

**கி. வா. ஜகந்நாதன்**

# எங்களுரை

எங்கள் பதிப்பகத்தினின்றும் தமிழ் மக்களுக்குக் காணிக்கையாகப் படைக்கப் பெறும் நான்காம் வெளியீடு இந்நூல். இறைபக்தி நலிந்து வரும் இந்நாட்களில், அவ் வுணர்ச்சியை மக்களிடையே தூண்டி இறைவனிடம் நாட்டம் கொள்ளச் செய்யும் சிறு முயற்சியே இது.

ஆசிரியர் திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் தமிழுலகத் திற்கு நன்கு அறிமுகமான பெருந்தகையார். தமிழ் எங்கெல் லாம் பரவியுள்ளதோ அங்கெல்லாம் அவர்களுடைய பெயரும் பரவியுள்ளது. அவர்களுடைய இலக்கியப் பணியும், இறை பக்தியை மக்களிடையே பரப்பும் பெரும் பணியும் மக்கள் நன்கு அறிவர். இந்நூலில் அவர்களுடைய எழுத்து எளிமை யாகவும் எளியவரும் புரிந்து கொள்ளும் வகையிலும் அமைந்திருப்பது தெளிவு. இதைப் படிக்கும்போது, "அவற்றைப் பாராயணம் பண்ணும்போது கண்ணீர் மல்க இருப்பார்கள்......" என்று தம் முன்னுரையில் அன்னாரது ஆசிரியப் பெருந்தகை டாக்டர் உ. வே. சாமிநாதையரவர் களைப்பற்றிக் கூறியிருப்பதற்கிணங்க, வாசகர்கள் இதைப் படித்துக் கண்ணீர் மல்க நிற்பார்கள் என்பதில் ஐயமில்லை.

அப்பர் சுவாமிகள் போன்ற பல அருளாளர்கள் பாடிய பாடல்களுக்கு விளக்கக் கட்டுரைகள் வெளியிட உத்தேசித் துள்ளோம். இறைபக்தி மிகுந்த மக்கள் இதற்கு நல்லாதரவு கொடுத்து எங்களை ஊக்குவிப்பார்கள் என நம்புகிறோம்.

**பதிப்பகத்தார்**

# பொருளடக்கம்

# அப்பர் தேவார அமுது

## 1. அச்சம் இல்லை

**ம**னிதன் அறிவுப்பலம் உடையவனே அன்றி உடற்பலம்இல்லாதவன். யானை, காண்டாமிருகம், சிங்கம் முதலிய விலங்குகள் மனிதனை விட அதிக உடல் வலிமை உடையவை. ஆனாலும் அவை மனிதனால் அடக்கப்பெற்று அவன் ஏவும்படியெல்லாம் செய்கின்றன.

மனிதர்கள் யாவரும் ஒரே மாதிரி இருப்பதில்லை. உடல் வலிமையிலும் சரி, அறிவுத் திறத்திலும் சரி, ஒருவருக்கொருவர் வேறுபட்டே இருக்கிறார்கள். பலம் இல்லாதவன் பலம் உள்ளவர்களை நண்பர்களாக்கிக் கொண்டு அவர்களால் நலம் பெறுகிறான். அறிவில் தாழ்ந்தவன் அறிவுடையவர்களைச் சேர்ந்து விளக்கம் அடைகிறான்.

சார்பினால் வலிமைபெறும் தந்திரத்தை மனிதன் கற்றுக் கொண்டிருக்கிறான். அவனால் மிக வேகமாக ஓட முடியாது. ஆனால் வேகமாக ஓடும் குதிரையின்மேல் ஏறி வேகமாகச் செல்கிறான். ஐம்பெரும் பூதங்களையே தன் அறிவு வன்மையினால் செயற்படுத்திப் பெரிய செயல்களைச் செய்கிறான்.

தன்னுடைய அறிவுவன்மையால் மனிதன் செய்து வரும் அற்புதங்கள் நாளுக்கு நாள் அதிகமாகி வருகின்றன. அவனால் பறக்க முடியாது. ஆனாலும் ஆகாய விமானத்தை அறிவுத் திறத்தினால் அமைத்துக் கொண்டு பறக்கிறான். கடல் மூழ்கிக் கப்பலில் ஏறிக் கடலின் ஆழத்தில் பயணம் செய்கிறான். இயல்பாகத் தன்னால் செய்ய முடியாமல் இருப்பினும் மற்றவற்றை இயக்கி வியக்கத்தக்க செயல்களைச் செய்கிறான்.

இவ்வாறு தன்னினும் ஆற்றல் மிக்க பொருள்களைச் செயல்படுத்தக் கற்றுக் கொண்டதனால் பெரிய பெரிய காரியங்

களைச் சாதிக்கிறான். மண்ணை வசப்படுத்தினவனைவிட நீரை வசப்படுத்தினவன் அதிக ஆற்றல் பெறுகிறான். இப்படியே பஞ்சபூதங்களையும் வசப்படுத்தியவன் பேராற்றல் பெற்றுப் பல பல செயற்கரும் செயல்களைச் செய்கிறான்.

உலகில் உள்ள பஞ்ச பூதங்களை வசப்படுத்துவதனால் இவ்வளவு அரிய செயல்களைச் செய்யும் ஆற்றல் பெற்றவன், மிக்க வலிமை பெறுகிறான். எல்லாப் பொருள்களையும் தன்வசப்படுத்தி ஆளும் வகை தெரிந்த மனிதன் உலகில் மற்ற எல்லாப் பிராணிகளைவிடவும் சிறந்தவனாக விளங்குகிறான். சாமான்ய மனிதனைவிட அறிவு மிக்கவன் அந்த அறிவாற்றலால் அவனை விடச் சிறந்த செயல்களைச் செய்ய முடிகிறது.

இப்படிப் பூதங்களையும் பிற பொருள்களையும் வசப்படுத்தி அற்புதங்களை ஆற்றும் மனிதன் இவற்றை விடப் பெரிய அற்புதத்தைச் செய்யும் இயல்பும் பெற்றிருக்கிறான். ஆனால் அந்தத் துறையில் பெரும்பாலோர் ஈடுபடுவதில்லை.

எல்லாப் பொருள்களையும்விடச் சிறந்த பொருள் எதுவோ அதற்குப் பரம்பொருள் என்று பெயர். பரப்பிரமம், கடவுள், தெய்வம் என்று பொதுவகையாகவும், சிவபெருமான், திருமால், அன்னை பராசக்தி, முருகன் என்று சிறப்பு வகையாகவும் அந்தப் பரம்பொருளைக் கூறுவார்கள்.

அந்த மேலான பொருளோடு தம்முடைய முயற்சியால் தொடர்பு பெற்றவர்கள் எல்லாவற்றையும் விடப் பெரிய அற்புதத்தைச் செய்ய வல்லவராகிறார்கள்,

எவ்வளவு வல்லமை பெற்றவராக இருந்தாலும் இந்த வாழ்வின் இறுதியில் இறந்து போகிறார்கள். அற்புதங்களைச் சாதித்த விஞ்ஞானியும் மரணத்தை வெல்ல முடிவதில்லை. மரணத்தை எண்ணும்போது யாவருமே அஞ்சுகிறார்கள்.

பணத்தைப் பெற்றவன் வறுமைக்கு அஞ்சுவதில்லை. அறிவை உடையவன் அறியாமைக்கு அஞ்சுவதில்லை. உடல்

வலிமையை உடையவன் மெலிவுடையவர்களுக்கு அஞ்சுவ தில்லை. ஆனால் இத்தனை பேர்களும் மரணத்துக்கு அஞ்சுவார் கள்.

"சாதலின் இன்னாத தில்லை"

என்பது வள்ளுவர் வாக்கு.

அந்த மரணத்தையும் வெல்லும் ஆற்றலை மனிதன் பெற லாம். அதற்குரிய உபாயத்தை அறிந்து செயல் செய்தால் மரணமிலாப் பெருவாழ்வைப் பெறலாம்.

இந்த உடம்போடே என்றும் வாழ்வது மரணம் இலாப் பெருவாழ்வு ஆகாது. இனிப் பிறந்து இறந்து வாழ்வதை எவன் போக்கிக் கொள்கிறானோ அவனே மரணம் இலாப் பெரு வாழ்வை அடைகிறான். அத்தகையவன் இந்த உடம்பை விட்ட பிறகு இனி என்றும் பிறவாத மேல்நிலையை அடைகி றான். மற்றவர்களே மீண்டும் பிறக்கிறார்கள்; 'பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றார்கள்.'

மரணபயம் இல்லாமல் வாழ முடியுமா ?

"மரணப்ர மாதம் நமக்கு இல்லையாம்"

என்பது அருணகிரியார் திருவாக்கு. உடம்பைப் பெற்றவன் மரணம் அடைவது இயற்கை. அவ்வாறு இந்த உடம்பை நீத்து மரணம் அடைந்த உயிர் இனிப் பிறவாத தன்மையை எய்தினால் மரணமிலாப் பெரு வாழ்வில் என்றும் நிலைத்து நின்று இன்பம் அடைகிறது.

அவ்வாறுள்ள நிலைமையை அடைந்தவர்கள் மரணத் துக்கு அஞ்சுவதில்லை.

"சந்ததமும் வேதமொழி யாதொன் று
பற்றினது தான்வந்து முற்று மெனலால்
சகமீ திருந்தாலும் மரணம்உண் டென்பதைச்
சதாநிஷ்டர் நினைவ தில்லை"

என்று தாயுமானவர் சொல்கிறார். மரணத்திற்கே அஞ்சாதவர் கள் வேறு எதற்கு அஞ்சுவார்கள்?

அச்சம் இல்லாத அந்த நிலையைப் பெற்றவர்கள் யார்? யார் பிறப்பு இறப்பின்றி உள்ளானே அந்தப் பரம் பொருளின் சார்பு பெற்று, அவனேடு ஒட்டி உறவாடி இணைந்து, அருள் வலிமை பெற்றவர்கள் எதற்கும் அஞ்சாத நிலையை அடைவார்கள்.

அப்பர் சுவாமிகள் அவ்வாறு அச்சத்தைத் தவிர்த்த பெரு வீரர். மரணம் இல்லாதவனைச் சார்ந்ததையால் அந்த வீரம் அவருக்கு உண்டாயிற்று. அதை அவர் சொல்கிருர்.

திருவதிகை வீரட்டானம் என்னும் திருத்தலத்தில் சிவ பெருமானை வழிபட்டு அவனுடைய அருள் வலிமையைப் பெற்றவர் அவர்; அவனுடைய தமர்களாகிய அடியார் கூட்டத்தில் ஒருவராகி விட்டவர். ஆகவே, அவர் எதற்கும் அஞ்சாத திண்ணிய நெஞ்சம் உடையவரானுர். அவர் சொல்வதைக் கேட்கலாம்.

"நாம் ஒப்பற்ற ஒருவருடைய தமருள் ஒருவராகி விட்டோம். ஆதலால் நாம் எதற்கும் அஞ்சமாட்டோம். நாம் அஞ்சும்படி இனி வரப் போகிறது யாதும் இல்லை" என்கிருர். "மரணம் வருமே! அதற்கு அஞ்ச மாட்டீர்களோ?" என்று கேட்டால், "நாம் அஞ்சும்படி வரப் போகிறது யாதும் இல்லை" என்று மிடுக்கோடு சொல்கிருர்.

"அந்த ஒருவர் யார்?" என்று நாம் கேட்கிருேம்

"சொல்கிருேம். நிதானமாகக் கேளுங்கள். நீங்களும் அவரை அடைந்து இந்த நிலையை அடையலாம். அதனுல் விளக்கமாக அங்க அடையாளங்களுடன் அவரைப் பற்றிச் சொல்கிருேம். கேளுங்கள்" என்கிருர்.

"இப்படி யார் சொல்லப் போகிருர்கள்? தயை செய்து சொல்லுங்கள்; கேட்கலாம்" என்கிருேம்.

"அவர் நீங்கள் கண்டு தரிசிக்கும் படியான திருக் கோலத்தோடு எழுந்தருளியிருக்கிருர். அந்தக் கோலத்தைச் சொல்லட்டுமா?"

"சொல்லுங்கள். கேட்டுப் பயன் பெறுகிறோம்" என்று பவ்யமாகச் சொல்கிறோம்.

அவர் விளக்கமாகச் சொல்லப் புகுகிறார்.

* * *

செல்வர்கள் மார்பில் சந்தனம் பூசிக்கொள்வார்கள். அவர் திருநீற்றையே வெண்மையான சந்தனக் குழம்பாகப் பூசியிருக்கிறார்.

**சுண்ணவெண் சந்தனச் சாந்தும்.**

அவரை இனம் கண்டு கொள்வது எளிது. அவர் தம் திருமுடிமேல் சுடர்விடும் சந்திரனைச் சூடியிருக்கிறார். அரிய இரத்தினங்களைச் செல்வர்கள் சூளாமணியாக அணிவார்கள். அந்தச் செல்வரோ சுடர்த் திங்கட் சூளாமணியை உடையவர்.

**சுடர்த்திங்கட் சூளா மணியும்.**

எல்லாரும் பட்டும் பீதாம்பரமும் அணிவார்கள். அவற்றையெல்லாம் மற்றச் செல்வர்கள் உடுக்கட்டும் என்று வழங்கிவிட்டு அவர் தோலையே தம் உடையாகப் புனைந்திருக்கிறார். இடையில் யானைத் தோலையும் மேலே புலித் தோலையும் உடையாக உடையவர் அவர்.

**வண்ண உரிவை உடையும்.**

இந்தத் தோல்களைக் கொண்டு, "இவர் என்ன, இப்படித் தோலாண்டியாக இருக்கிறாரே! இவருக்கு வேறு உடை இல்லையா? ஒருகால் தம்முடைய அழகற்ற உருவத்தை மறைக்க இவற்றைப் பயன்படுத்துகிறாரோ?" என்று எண்ணக் கூடாது. அவர் வண்ணம் பவள வண்ணம். பார்க்கப் பார்க்க எழில் மிகுந்து வளர்ந்து தோன்றும் பவள நிறம் அது.

**வளரும் பவள நிறமும்.**

மற்றச் செல்வர்களைப் போல அவரும் வாகனத்தில் வருவார். மற்றவர்கள் குதிரையும் யானையும் வாகனமாகக் கொண்டு வருவார்கள். அவர் காளைமாட்டையே தம் வாகன

மாகக் கொண்டவர்; தருமத்தையே விடையாகக் கொண்டு ஊர்பவர். அது மிக்க பெருமையையும், வலிமையையும் உடையது; அவரை நம்பினவர்களுக்கு அரணாக நிற்பது.

**அண்ணல் அரண் முரண் ஏறும்.**

அவர் அணியும் அணிகலன் எது தெரியுமா? பொன்னும் நவமணிகளும் பிறர் பூணக் கொடுத்துவிட்டு நஞ்சுமிழும் நாகத்தையே தம் திருமார்பில் அணிந்திருக்கிறார், படையும் நடுங்கும் பாம்பு அவர் திருமார்பில் அடங்கி ஒடுங்கி அணி கலனாகப் பளபளக்கிறது.

**அகலம் வளாய அரவும்.**

இத்தகைய பெருமானே அடியவர்களுக்கு அருள் செய்யும் பொருட்டுக் கெடில ஆற்றின் கரையில் திருவதிகையில் எழுந் தருளியிருக்கிறார். திண்ணிய நல்ல கெடிலப் புனலைத் தமக் குரிய அபிடேக நீராகக் கொண்டவர் அவர்.

**திண்ணன் கெடிலப் புனலும் உடையார்,**

"அத்தகைய பெருமானுக்கு உறவானவர் யாம், ஆதலால் நாம் அஞ்சும் பொருள் யாதும் இல்லை. இனிமேல் அஞ்சும்படி வரத்தக்க பொருள் ஒன்றும் இல்லை" என்று உறுதியோடு சொல்கிறார்.

**உடையார் ஒருவர் தமர்நாம்;**
**அஞ்சுவது யாதொன்றும் இல்லை;**
**அஞ்ச வருவதும் இல்லை.**

உலகிலுள்ள வலிய பொருள்களின் சார்பு பெற்றவர்கள் பலவற்றுக்கு அஞ்சுவதில்லை. எல்லாம் வல்ல எம்பெருமானு டைய துணையைப் பெற்றவர்களுக்கு நிகழ்காலத்திலும் அச்சம் இல்லை; வரும் காலத்திலும் அச்சம் இராது. அவர்கள் அஞ்சும் படி வரத்தக்கது யாதுமே இல்லை.

இந்தத் திண்ணிய நிலை எல்லோருக்கும் வருமா? அதற் குரிய வகையில் முயன்றால் நிச்சயமாக வரும்.

**கண்ணவெண் சந்தனச் சாந்தும்**
**சுடர்த்திங்கட் சூளா மணியும்**
**வண்ண உரிவை உடையும்**
**வளரும் பவள நிறமும்**
**அண்ணல் அரண்முரண் ஏறும்**
**அகலம் வளாய அரவும்**
**திண்ணன் கெடிலப் புனலும்**
**உடையார் ஒருவர் தமர்நாம்;**
**அஞ்சுவதி யாதொன்றும் இல்லை;**
**அஞ்ச வருவதும் இல்லை.**

* திருநீருகிய வெண்மையான சந்தனப்பூச்சையும், ஒளியை யுடைய சந்திரனுகிய முடியில் அணியும் மணியையும், நிறம் பெற்ற தோலாகிய உடையையும், பார்க்கப் பார்க்கப் புதிய தாகத் தோற்றி வளரும் பவளத் திருமேனியையும், பெருமை யையும் அன்பர்களுக்குப் பாதுகாப்பாகிய இயல்பையும் வலிமையையும் உடைய இடப வாகனத்தையும், திருமார்பில் அணிகலனுகத் தோன்றும் பாம்பையும், திண்மையும் நன்மை யும் உடைய கெடில ஆற்றையும் உடையவராகிய சிவபெரு மானுடைய அடியார் யாம்; ஆதலால் நாம் அஞ்சும் பொருள் யாது ஒன்றும் இல்லை; இனி அஞ்சும்படி வரப்போவது யாதொன்றும் இல்லை.*

[சுண்ணம்—திருநீறு; சூர்ணம் என்பதன் திரிபு. சந்தனச் சாந்தும் - சந்தனம்போலப் பூசும் பூச்சும்; சாந்து - பூசப்படும் பொருள். சூளாமணி - முடியில் அணியும் மணி; சூடாமணி என்பதன் திரிபு. யானைத் தோலும் புலித்தோலும் வெவ்வேறு வண்ணம் உடையன. உரிவை - தோல். சிவபெருமானுடைய திருமேனி ஒருகாலைக்கொருகால் அழகுமிக்குத்தோன்றுதலால், 'வளரும் பவள நிறமும்' என்ருர். அண்ணல்-பெருமை. அரண், பாதுகாப்பு. முரண் - வலிமை. அகலம் - திருமார்பு. வளாய - சேர்ந்த. கெடிலத்திற்குத் திண்மை கரையாலும் நன்மை

புனலாலும் அமைந்தன. தமர் - அடியார்; பத்திமையால் உறவு பூண்டவர்.

அஞ்சவதியாதொன்றும்: அஞ்சுவது என்பதிலுள்ள குற்றுகரம் யகரம் வரத் திரிந்து குற்றியலிகரம் ஆயிற்று. இது வரைக்கும் அஞ்சும்படி உள்ள ஏதும் இல்லை; இனிமேலும் வரத் தக்கதில்லை என்றார். முக்காலங்களிலும் அச்சமே அறியாத வாழ்வு அவர் வாழ்வு.]

இறைவன் அடியார்களுக்கு எதனாலும் அச்சம் இல்லை என்பது கருத்து.

நான்காம் திருமுறையில் இரண்டாவது திருப்பதிகத்தில் வரும் முதற்பாட்டு இது.

# 2. காதற் கனல்

இறைவனைத் தொழுது வணங்கி வழிபடும் முறைகள் பல உண்டு. கைகூப்பித் தொழுதல், தொழுத கை தலைமேல் ஏறக் கூப்பி வணங்குதல், பஞ்சாங்க நமஸ்காரம், சாஷ்டாங்க நமஸ்காரம் என்பவை அவற்றில் சில. தொண்டர்கள் அழுதும் தொழுதும் புனலால் திருமஞ்சனம் செய்தும் அருச்சித்தும் அலங்காரம் பண்ணியும் பல வகையில் இறைவனிடம் ஈடுபடுவார்கள். இவ்வாறு செய்யும் வழிபாட்டு முறைகளில் எளிதாக இருப்பது கைகூப்பி வணங்குதல்.

"தொழுதகை துன்பம் துடைப்பாய் போற்றி"

என்று கைகூப்பித் தொழுவதை மணிவாசகர் எடுத்துரைப்பார். கைகளை இணைத்துக் கூப்பி நின்று மனம் ஒன்றி நினைப்பவர்களுக்கு அவன் அருள் பாலிப்பான்; அவர்களுக்குக் காட்சியளித்து அருள் செய்வான்.

**தொழற்கு அங்கை துன்னி நின்றார்க்குத்**
**தோன்றி அருள வல்லானும்.**

இறைவனிடத்தில் பக்தி கொண்டு மலர் தூவி வழிபடுபவர்களிடம் உள்ள பேரன்பைக் காதல் என்றும் சொல்வதுண்டு.

"காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி"

என்று சொல்வார்கள். அந்தக் காதலும் காமத்தைப்போன்றது தான். இறைவனுடைய காதலை உடையவர்களுக்கு வேறு எந்த உணர்வும் இராது. அது ஒரு வகைக் கனல். அது உள்ளத்தில் தோன்றிவிட்டால் கனலைப்போல எழுந்து மற்ற உணர்வுகளையெல்லாம் அழித்துவிட்டு மீதூர்ந்து நிற்கும்

தம்முடைய கரங்களில் பல வகை வண்ணமும் மணமும் கொண்ட மலர்களைக் கொண்டு இறைவன் கழலைத் தொழுப வர்கள் உள்ளத்தில் அந்தப் பக்திக்கனல் சுடர்விட்டு எரியும். கையிலே தண்மையான மலரை ஏந்தி இறைவனை அருச்சிப் பவர்கள் கருத்தில் அந்தப் பக்திக் கனல் மூண்டு, பொய்யான எண்ணங்களையும் ஆசையையும் எரித்துச் சுடர்விட்டு நிற்கும். அத்தகைய காதல் தீயை உள்ளத்தில் வைத்து அது கனலாக நின்று எரிய வழிபடுபவர்களுக்கு முன்னால் இறைவன் வந்து நிற்பான்.

**கழற்கு அங்கை பன்மலர் கொண்டு**
**காதல் கனற்ற நின்றானும்.**

''தானம் குலம் கல்வி'' முதலிய பத்தையும் எரித்துத் போக்கிப் பசி என்னும் தீ எழுந்து வருத்தும் என்று சொல் வார்கள். அதுபோல இறைவன்பால் கொண்ட காதல்என்னும் தீ உள்ளத்தில் கொழுந்து விட்டு எரியுமானால் அங்கே உள்ள மற்றத் தீய எண்ணங்கள் யாவும் அந்தக் கனலில் எரிந்து சாம்பலாகிப் போய்விடும்.அந்தக் காதல் ஒன்றே தனிச்சுடராக நின்று ஒளிரும். அவர்களுக்குப் பரஞ்சுடராகிய ஆண்டவன் தன் திருக்கோலத்தைக் காட்டியருளுவான்.

அன்பர்களின் உள்ளத்தில் எழும் பக்திக்கனலை உகந்து அருள்புரியும் அப்பெருமான் தன் திருமுடியில் தண்மையான கங்கையை வைத்துள்ளான். கங்கையென்னும் நீர்மகளைத் தன் அழகிய சடாபாரத்தில் மறைத்துவைத்திருக்கிறான். உமாதேவி கண்டால் ஊடல் கொள்வாள் என்ற எண்ணமோ?

**குழற் கங்கையாளை உள் வைத்துக்**
**கோலச் சடைக் கரந்தானும்.**

கங்கையென்னும் மகளுக்கும் கூந்தல் உண்டு, கருமணல் ஆற்றில் விரவியிருக்கும். அது கூந்தலைப்போலக் காட்சி தரும். அன்றிப் பெண் உருவத்தில் இறைவன் திருமுடியில் உள்ள

கங்காதேவிக்கும் கூந்தல் இருக்கத்தான்இருக்கும். அத்தகைய கூந்தல் உடையவளைத் தன் சடாபாரத்தில் மறைத்து வைத்திருக்கிருன் இறைவன்.

திருமுடியிலே குளிர்ந்த கங்கையை வைத்துள்ள பெருமான் தன் திருக்கரத்திலே வெம்மையான அக்கினியை ஏந்திக் கொண்டு கோலம் காட்டுகிருன். ஒன்றுக்கு ஒன்று மாறுபட்ட பொருள்கள் பல அவனிடத்தில் வேறுபாடின்றி விளங்குகின்றன. தண்மையான பொருளாகவும்வெம்மையான பொருளாகவும் இருப்பவன் அவன். அவனிடம் இப்படி மாறுபட்ட பொருள்கள் தெய்வத் தன்மை பெற்று விளங்குகின்றன. திருமுடியில் உள்ள தண்மையான கங்கையும் திருக்கரத்தி லுள்ள வெம்மையான அழலும் இந்த உண்மையைப் புலப்படுத்துகின்றன.

**அழற்கு அங்கை ஏந்த வல்லானும்.**

இவ்வாறு காட்சி அளிக்கும் பெருமானைத் திருவாரூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைக் காண்கிருர் அப்பர் சுவாமிகள்.

**குழற்கங்கையாளை உள் வைத்துக்**
**கோலச் சடைக் கரந்தானும்**
**அழற்கங்கை ஏந்த வல்லானும்**
**ஆரூர் அமர்ந்த அம்மானே.**

இயல்பாக மாருன தன்மையுள்ள பொருள்கள் இறைவனைச் சார்ந்த பிறகு யாவும் சிவமயமாகின்றன. உலகியலில் ஈடுபட்டு வெவ்வேறு நுகர்ச்சிகளைப் பெறும் பொறிகளும் கணத்துக்குக் கணம் எங்கெங்கோ ஓடித் திரியும் மனமும் இறைவனுடைய தொடர்பு பெற்றுவிட்டால் யாவும் இறைமயமான உணர்விலே ஒன்றி நிற்கும். இதைப் பசுகரணங்கள் பதி கரணங்களாக மாறுவது என்று சாத்திரங்கள் கூறும்.

ஆரூரில் எழுந்தருளியிருக்கும் தனித்தலைவனுகிய எம்பெருமானிடத்தில் ஈடுபட்ட பொறிகளும் மனமும் தம் இயல்புகள்

மாறி யாவும் அவனுடைய தொடர்பினல் அவன் மயமாக நின்று இன்ப வாழ்க்கையைப் பெறத் துணையாக நிற்கும். பிறரைப் பலவிதமாக அலைத்துத் துன்புறுத்தும் பேயை வசப் படுத்திவிட்டால், பிறகு அது நாம் இட்ட ஏவல்களை யெல்லாம் செய்யும் என்று சொல்வார்கள். அவ்வாறு உடம்பாலும் உள்ளத்தாலும் இறைவனை வழிபடும் அன்பர்களுக்கு, முன்பு உலகியலில் அவர்களை ஈர்த்து அலைத்த பொறிகளும் மனமும் அடங்கி அவர் ஏவல் வழி நிற்கும். ஆரூர் அமர்ந்த அம்மான் இத்தகைய அற்புதத்தை அடியார்களிடம் நிகழும்படி செய்ய வல்லவன். இவற்றையெல்லாம் எண்ணி இன்புறும்படி பாடுகிருர் திருநாவுக்கரசர்.

**தொழற்குஅங்கை துன்னிநின் ருர்க்குத்**
**தோன்றி அருளவல் லானும்**
**கழற்குஅங்கை பன்மலர் கொண்டு**
**காதல் கனற்றநின் ருனும்**
**குழற்கங்கை யாளைஉள் வைத்துக்**
**கோலச் சடைக்கரந் தானும்**
**அழற்குஅங்கை ஏந்தவல் லானும்**
**ஆரூர் அமர்ந்தஅம் மானே.**

*திருவாரூரில் எழுந்தருளிய தலைவனுகிய சிவபெருமான், தொழும்பொருட்டுத் தம் அழகிய கைகளை இணைத்து நின்று அன்பு செய்ய வல்லவர்களுக்குத் தன் தோற்றத்தைக் காட்டி அருளவல்லவனும், தன் திருவடியை அருச்சிக்கும் பொருட்டு வடிவாலும் வண்ணத்தாலும் நறுமணத்தாலும் பல வகையாக உள்ள மலர்களைக் கையிற் கொண்டு, உள்ளத்திலே இடையருத பக்திக்கனல் பிற மாசுகளை எரித்து நின்று கொழுந்துவிட நிற்பவர்களின்முன் கோலம் காட்டி நின்றவனும், தன் அழகிய சடாபாரத்தில் கூந்தலையுடைய கங்காதேவியை உள்ளே வைத்து மறைத்திருப்பவனும், கனலைத் தன் அழகிய உள்ளங் கையில் ஏந்த வல்லவனும் ஆவான்.*

[தொழுதல் கையின் செயல். அங்கை - அழகிய கை. கைக்குத் தானம் செய்வது அழகு; 'என் செயலாவதுயாதொன்றும் இல்லை. எல்லாம் நின் செயலே' என்பதைக் காட்டச் செயவிழந்து கையை இணைத்துக் கூப்பி நிற்பது எல்லாவற்றையும் விட அழகு. அதனால் தொழுவார் கைகள் அழகிய கைகள் ஆயின. கழற்கு-திருவடியை அருச்சிப்பதற்கு. அங்கையில் பல மலரைக் கொண்டு. காதல்–பிறவற்றிலே உள்ளம் செல்லாமல் இறைவனையே எண்ணி நிற்கும் இயல்பு. கனற்ற– எரிய. பக்தியென்னும் உணர்வு எழுந்தவர் உள்ளத்தில் காமம் முதலிய மாசுகள் அழிந்து விடும், நெருப்பிலே எல்லாம் வெந்து ஒழிய அதுமட்டும் கொழுந்துவிட்டு நிற்பது போல; பக்தியுணர்வு ஓங்கிநின்றால் பிற மாசுகளெல்லாம் அழிந்தொழியும். நின்றான் —அவ்வாறுள்ள பக்திக் கனலை உடையவர்முன் எழுந்தருளிக் கோலம் காட்டி நின்றவன்.

உள்வைத்து – சடைக்குள்ளே வைத்து. கோலம் – அழகு. அழற்கு–அழலை; உருபுமயக்கம். அழலை அங்கையில் ஏந்த வல்லான்; அங்கை–உள்ளங்கை; அழகிய கை எனலும் ஆம். ஆரூர்அமர்ந்த அம்மான்;எழுவாய்.ஆவான் என்று ஒருசொல்லை வருவித்துக் கூட்டி முடிக்க. அம்மானே: ஏகாரம், அசைநிலை; தேற்றமும் ஆம். ஆரூரில் அமர்ந்தான் என்றது தியாகராசப் பெருமான் இருந்த கோலத்தில் எழுந்தருளியிருப்பதை எண்ணி.]

இறைவன் அடியவர்களுக்கு முன்வந்து காட்சியளிப்பவன் என்பதும், மாறுபட்ட பொருள்களையும் இணைத்து வைக்கும் ஆற்றலுள்ளவன் என்பதும் இந்தத் திருப்பாட்டால் புலனாகின்றன.

இது நான்காம் திருமுறையில் 4–ஆம் திருப்பதிகத்தில் உள்ள ஏழாவது பாட்டு.

# ௩. இறைவன் வடிவங்களும் திருநாமங்களும்

இறைவன் எத்தகையவன் என்ற கேள்விக்கு உலகத்தி லுள்ள சமயங்கள் பல பல விதமாக விடை அளிக்கின்றன. அவன் உருவம் உடையவன் என்றும் உருவம் இல்லாதவன் என்றும் சொல்லும் சமயங்கள் இருக்கின்றன. உருவம் உடை யவன் என்பவர்கள் தத்தமக்கு ஏற்றபடி அந்த உருவத்தை வருணிக்கிருர்கள். உருவம் இல்லாதவன் என்றே பல சமயங் கள் சொல்கின்றன.

இந்து சமயம் இரண்டையும் சொல்கிறது. உருவம் உடை யவன் என்றும் உருவம் இல்லாத அருவம் உடையவன் என்றும் சொல்கின்றது. இது முரண்பாடாகத் தோன்றுகிறது அல்லவா?

ஆனல் அந்த முரண்பாட்டைத் தெளிவாக்க என்ன செய்வது?

அவன் இயல்பாகத் தனக்கென்று உருவம் உடையவன் அன்லன்; ஆனல் கருணையினல் வடிவங்களை எடுத்துக் கொள் கிறவன். அவன் தானே விரும்பி உருவத்தை எடுத்துக் கொள் கிறவனுதலின் வெவ்வேறு உருவங்களை எடுத்துக்கொள்கிருன். காலத்திற்கும் இடத்திற்கும் அன்பர்களின் இயல்புக்கும் ஏற்ற படி அவன் மூர்த்தீகரித்து எழுந்தருளுகிருன். அதனல் அவன் மேற்கொள்ளும் வடிவம் ஒன்றல்ல; பல.

"அருவமும் உருவும் ஆகி
அநாதியாய்ப் பலவாய் ஒன்ருய்"

என்று **கந்த புராணம்** சொல்கிறது. இந்த அடியிலும் முரண் பாடு இருப்பதுபோலத் தோன்றுகிறது. அவன் அருவம் உடை

யவன்; ஆனால் பல உருவங்களை எடுப்பவன். அவன் ஒன்றாக இருப்பவன்; ஆனால் புதிய பல தோற்றங்களை அவ்வப்போது எடுத்துக் கொள்கிறவன். ஆனாலும் அவன் ஒருவன்தான். ''ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி'' என்று வேதம் சொல்கிறது. ''உண்மைப் பொருள் ஒன்றே; ஆனால் அதை அறிந்தவர்கள் பலவாகச் சொல்கிறார்கள்'' என்பது பொருள். ஆகவே, அவனுடைய பலவகைத் தோற்றங்களுக்குக் காரணம் அவனை வழிபட்டுப் பக்தி செய்பவர்களின் மனநிலையே என்று சொல்லி விடலாம்.

சிலருக்கு இறைவனைக் குழந்தையாகப் பார்ப்பதில் விருப்பம் மிகுதி. அவர்களுக்கு அவன் குழந்தைக் கண்ணனாக, இளமுருகனாகக் காட்சி அளிக்கிறான். சிலருக்குத் துறவியாக, ஞானமூர்த்தியாக எண்ணும் இயல்புஇருக்கிறது. அவர்களுக்கு அவன் தட்சிணாமூர்த்தியாகக் கோலம் காட்டுகிறான். சிலர் அவனை அன்னையாக எண்ணி அன்பு செய்கிறார்கள். அவர்களுக்கு அவன் தாயாக, அன்னை பராசக்தியாகத் தரிசனம் தருகிறான்.

இவ்வாறு அன்பர்களின் விருப்பப்படி வடிவங்கொள்ளும் அவனை எப்படி வருணிப்பது? அவனுக்கு எத்தனை திருவடிகள் என்று சொல்வது? இரண்டு திருவடி என்றால் ஏக பாத மூர்த்தி என்று சிவபெருமானுடைய கோலங்களில் ஒன்று ஒற்றைக் காலோடு காட்சிஅளிக்கிறது. இரண்டுகால்களுக்குமேல் இல்லை என்றால் வேதம் அவனுக்கு ஆயிரங்கண், ஆயிரம் பாதங்கள் (ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ர பாத்) என்று கூறுகிறது.

இவற்றையெல்லாம் பார்க்கும்போது அவனுடைய வடிவத்தில் காணும் உறுப்புக்களுக்குக் கணக்கு வழக்கே இல்லையென்று தோன்றுகிறது. பக்தர்களுடைய கணக்கை வரையறுக்க முடிந்தால் அவன் வடிவத்தையும் வரையறுக்கலாம். இரண்டையும் வரையறுப்பது என்பது இயலாத காரியம்.

அவனுடைய வடிவங்கள் பல, உறுப்புகள் பல என்று சொல்லிவிட்டால் எல்லாம் அடங்கிவிடும். இத்தனை என்ற வரையறை தெரியாதபோது பல என்று சொல்வதுதான் பொருத்தமாகத் தோன்றுகிறது.

ஆயிரம் என்று சில சமயங்களில் சொல்கிறோம். அது வரையறையாக ஆயிரம் என்ற எண்ணைக் குறிப்பதல்ல, பலபல என்ற பொருளையே தரும். "ஆயிரம் வகையில் பிழைக்கலாம்" என்றால் ஏதோ கணக்கெடுத்துத் திட்டமாக ஆயிரம் என்ற எண்ணுக்குள் அடக்கிச் சொல்வதாகக் கொள்ளக்கூடாது. பல பல வகை என்பதையே ஆயிரம்வகை என்று சொல்வது வழக்கில் இருக்கிறது.

இறைவனுக்கு எத்தனை திருவடிகள்? ஒன்று என்றும் பல வென்றும் சொல்லலாம். பலவென்பதே பொருந்தும். பல என்பதையே ஆயிரம் என்று சொல்வது வழக்கு என்று பார்த்தோம். அந்த வகையில் அப்பர் சுவாமிகள் இறைவனை வருணிக்கப் புகுகிறார்.

அவனுக்குப் பல பல திருவடிகள் உண்டு. அவை யாவும் தாமரை போலச் சிவந்து தண்மையை உடையனவாய் விரிந்து நிற்கும்.

**ஆயிரம்தாமரை போலும்**
**ஆயிரம் சேவடி யானும்.**

இறைவனுடைய வடிவத்தை நினைக்கப் புகுந்த மெய்யன்பர்களுக்கு அவனுடைய திருவடி நினைவே முதலில் தோன்றும், அவனுடைய அருட்பெருவடிவம் எவ்வளவு பெரிதாக இருந்தாலும், தன் அன்பர்களுக்குத் திருவருள் பாலிக்க அவன் திருவடியை நிலம் பதித்து நடந்து வருகிறான்; அதை எளிதில் அன்பர்கள் பற்றிக் கொள்ளும்படி காட்சி அளிக்கிறான். ஆகவே இறைவன் வடிவத்தைச் சொல்லப் புகுந்த அப்பர் சுவாமிகள் அவனுடைய திருவடிகளையே முதலில் நினைக்கிறார்.

**ஆயிரம் தாமரை போலும்**
**ஆயிரம் சேவடியானும்.**

இப்போது அப்பர் சுவாமிகள் தம் கண்களை நிமிர்த்திப் பார்க்கிறார். இறைவனுடைய திருத்தோள்கள் காட்சிஅளிக்கின்றன. அவை பொன்னிறம் பெற்றுப் பொலிந்து தோன்றுகின்றன; பொன்மலையே தோளாக வடிவெடுத்து அமைந்ததோ என்று எண்ணும்படி திண்மையனவாகவும் அழகுடையனவாகவும் இலங்குகின்றன.

**ஆயிரம் பொன்வரை போலும்**
**ஆயிரம் தோள் உடையானும்.**

தாளும் தோளும் கண்ட திருநாவுக்கரசர் இப்போது அவனுடைய முடிகளைக் காண்கிறார். அடி, நடு, முடிவு என்ற முறையில் அவர் உண்முகப் பார்வை செல்கிறது. சேவடியாகிய அடிநிலையையும் தோள்களாகிய இடைநிலையையும் தரிசித்தவர் இப்போது முடிநிலையாகிய திருமுடிகளில் தம் கண்களைப் பதிக்கிறார். திருமுடியைக் கண்டாலும் அதன் எல்லையைக் காண முடிவதில்லை. தலையின்மேல் அணிந்திருத்தலால் முடி தெரிகிறது.ஆனல் அதை முடியக் காணலாம் என்று முயன்றாலோ அது நீண்டு கொண்டே போகிறது. சூரியனைப்போல ஒளி வீசும் அந்த முடியின் முடிவைக் காண யாரால் முடியும் ?

"போதார் புனைமுடியும் எல்லாப்
பொருள்முடிவே"

என்பது **திருவாசகம்.** கதிரவனைப்போல ஒளிவிட்டு விளங்கினாலும் அதை முற்றும் காண முடிவதில்லை. அப்பாலுக்கு அப்பாலாக இருக்கும் முடிகள் அவை. அவன் ஆயிரம் திருவடிகளும் ஆயிரம் திருத்தோள்களும் கொண்டது போல ஆயிரம் தலைகளும் உடையவனாக இருக்கிறான்; ஆயிரம் முடிகளை அணிந்திருக்கிறான்.

**ஆயிரம் ஞாயிறு போலும்**
**ஆயிரம் நீள் முடியானும்.**

அடி, தோள், முடி என்று அவனுடைய திருவுருவத்தின் மூன்று எல்லைகளைப் பற்றிச் சொன்ன சுவாமிகள் இப்போது

அவன் திருநாமங்களை எண்ணிப் பார்க்கிறார். ஒரு வடிவம் உடையவனே பல பெயர்களுடன் உலவுவதை உலகில் பார்க்கிறோம். அளவுக்கு அகப்படாத வடிவமுடையவனுக்கு நாமங்களும் அளவுக்கு அகப்படாமல் உள்ளன. உருவம் பல எடுத்துக் கொண்டருளுவதைப் போலவே திருநாமங்கள் பலவற்றையும் அவன் ஏற்றுக்கொண் டிருக்கிறான்; இன்னும் புதிய புதிய திருநாமங்களை அன்பர்கள் படைத்துச் சொன்னாலும் அவற்றையும் ஏற்றுக்கொள்கிறான். தனக்கென்று ஒரு வடிவம் இல்லாமையால் பல வடிவங்களை மேற்கொள்வதைப் போல, தனக்கென்று ஒரு நாமம் இல்லாமையால் பல பல திருநாமங்களை ஏற்றுக்கொள்கிறான்.

"ஒருநாமம் ஓருருவம்
ஒன்றும்இலாற்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாம்
தெள்ளேணம் கொட்டாமோ"

என்று பாடுவார் **மணிவாசகர்.**

இறைவனுக்கு அருச்சனை செய்யும்போது அஷ்டோத்தரம் என்றும் சகசிரநாமம் என்றும் அருச்சனை செய்வதுண்டு. ஒவ்வொரு மூர்த்திக்கும் தனித்தனியே சகசிரநாமம் இருக்கிறது. ஒரே மூர்த்திக்கு வெவ்வேறு சகசிரநாமங்களும் உண்டு. பெரிய தலங்களில் எழுந்தருளியுள்ள மூர்த்திகளுக்குத் தனித் தனிச் சகசிரநாமங்கள் வழங்குகின்றன. கணபதிக்குப் பொதுவாக ஒரு சகசிரநாமம் உண்டு; அதையல்லாமல் ககார சகசிரநாமம் என்று ஒன்று தனியே இருக்கிறது. இப்படி உள்ளவற்றைப் பார்த்தால் பல சகசிரநாமங்கள் இருப்பது தெரியவரும். அவற்றையெல்லாம் இறைவன் ஏற்றுக்கொள்கிறான்.

**ஆயிரம் பேர் உகந்தானும்.**

இவ்வாறெல்லாம் இறைவனுடைய பல அங்கங்களையும் பல திருநாமங்களையும் எண்ணி வியந்து நிற்கும் நிலை அப்பர் சுவாமிகளுக்குத்திருவாரூரில் உள்ள தியாகராசப் பெருமானைத்

தரிசித்தபோது உண்டாகிறது. அங்கே அப்பெருமான் அமர்ந்த படி காட்சியளிக்கிறான். இருந்தபடியே நடனமாடுவதால் அவனுக்கு இருந்தாடழகன் என்ற திருநாமம் அமைந்தது. அவ்வாறு ஆரூரில் அமர்ந்த அம்மானைத் தரிசிக்கும்போது எம்பெருமானுடைய பல திருவுருவங்களையும் பல திருநாமங்களையும் எண்ணி, "இவ்வாறெல்லாம் அளவு காண முடியாத எம்பெருமான், தன் அளவற்ற திருக்கருணையினால் அடியார்கள் தரிசித்து இன்புறும்படி, இங்கே அமர்ந்த திருக்கோலத்தில் எழுந்தருளியிருக்கிறானே!" என்று வியந்து பாராட்டுகிறார்.

**ஆயிரம் தாமரை போலும்**
**ஆயிரம் சேவடி யானும்**
**ஆயிரம் பொன்வரை போலும்**
**ஆயிரம் தோள்உடை யானும்**
**ஆயிரம் ஞாயிறு போலும்**
**ஆயிரம் நீள்முடி யானும்**
**ஆயிரம் பேர்உகந் தானும்**
**ஆரூர் அமர்ந்தஅம் மானே**

*திருவாரூரில் இருந்த கோலத்தில் எழுந்தருளியிருக்கும் இந்தப் பெருமானே, ஆயிரம் தாமரை மலர்களைப் போன்ற ஆயிரம் சிவந்த திருவடிகளை உடையவனும், ஆயிரம் பொன் மலைகளைப் போன்ற ஆயிரம் திருத்தோள்களை உடையவனும், ஆயிரம் கதிரவர்களைப்போல ஆயிரமாக உயர்ந்த திருமுடிகளை உடையவனும், ஆயிரம் திருநாமங்களை உவந்து ஏற்றுக் கொண்டவனும் ஆவான்.*

[ஆயிரம், பல என்பதைக் குறித்த வாசகம்; இதை அனந்த வாசி என்பர். தாமரை தண்மை, எழில், செம்மை, தேனுடைமை ஆகியவற்றைப் பெற்றிருப்பது போல, இறைவன் திருவடி தன்பால் புக்கவர்களின் தாபங்களைப் போக்கிக் குளிரவைக்கும் தண்மையும், பேரெழிலும், செவ்வண்ணமும், அருளென்னும் தேனும் உடையது. பொன்வரை-மேரு; திண்மையும் பொலிவும் மதிப்பும் உடைமையால் பொன்வரை உவமையாயிற்று

இறைவன் திருமேனி செம்பொன் வண்ணம் உடையதாதலின் திருத்தோளும் அவ்வண்ணம் உடையதாயிற்று, "பொன்வண் ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி பொலிந்திலங்கும்" என்பது **பொன்வண்ணத்தந்தாதி**.

நீண்ட முடியின் ஒளிக்கு ஞாயிறு உவமை. ஆரூர் அமர்ந்த அம்மான் சேவடியானும், தோளுடையானும், நீள்முடி யானும் ஆவான் என்று முடிக்க.]

நான்காம் திருமுறையில் நான்காம் பதிகத்தில் எட்டா வது பாட்டு இது.

# 4. எம்பெருமான் அழகைக் கண்ட பெண்

அந்தப் பெண் ஒருநாள் திருக்கழிப்பாலை என்ற தலத்துக்குச் சென்றாள். அங்கே எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைத் தரிசித்தாள். ஒரு முறை கண்டதோடு நிற்கவில்லை; பன்முறையும் கண்டு கண்டு அவனுடைய திருவுருவத்தைக் கண் வழியே வாங்கித் தன் காதல் உள்ளத்தில் புதைத்துக்கொண்டாள். இப்போது அவள் தன் கண்களை மூடினால் அவள் உளக் கண்ணில் சிவபெருமானுடைய எழில் உருவம் நிற்கிறது.

அவள் ஊர் வந்து சேர்ந்தாள். அதுவரையில் பெண்களுக்குரிய இயல்பின்படி எதை எதையோ பேசிக்கொண்டிருந்தாள்; இப்போது அவள் பேச்சே அடியோடு மாறிவிட்டது. எப்போதும் சிவபெருமானைப் பற்றியே பேசினாள். எதைக் கண்டாலும் அவளுக்கு அவனுடைய நினைவே எழுந்தது.

அவள் தன் முன்னை நிலையினின்றும் மாறுபட்டிருப்பதை அவள் தாய் பார்த்தாள். எப்போதும் அவள் கழிப்பாலைப் பெருமானைப் பற்றிப் பேசுவதையே கேட்டாள்.

"உன் மகள் என்ன, ஒரு விதமாக இருக்கிறாள்? மற்றப் பெண்களைப் போல அவள் பேசவில்லையே! என்ன காரணம்?" என்று அயல் வீட்டுக்காரி அந்தத் தாயிடம் கேட்டாள்.

"நானுந்தான் கவனிக்கிறேன். அவள் பேச்செல்லாம் மாறிவிட்டது. அவள் தன்னுடைய அழகிய பவளம் போன்ற வாயைத் திறந்து பேசினால் கிளி கொஞ்சும். இப்போதும் அந்த இனிமைக்குக் குறைவில்லை. ஆனால் பேச்செல்லாம் கழிப்பாலைப் பெருமானைப் பற்றியே பேசுகிறாள்.

"அவள் 'வானவர்களுக்கெல்லாம் நல் வாழ்வைத் தானம் செய்கிறவனே' என்று சொன்னதை நான் கேட்டேன். இந்த

இளம் பெண்ணுக்கு எம்பெருமானைப் பற்றிய புகழ் எப்படித் தெரிந்தது?

**வளபவள வாய் திறந்து வானவர்க்கும்**
**தானவனே என்கின்றாளால்.**

"அதுமட்டுமா? அவள் அவனைத் தரிசித்து அவன் உருவத்தைத் தன் உள்ளத்தில் படம் பிடித்தல்லவா வைத்திருக்கிறாள்? அவளுக்கு அவன் தோளை அணைய வேண்டும் என்ற எண்ணம் தோன்றியிருக்கிறது போலும்! அந்தத் தோள்களின் திண்மையைப் பாராட்டுகிறாள். பவளம் போலச் செக்கச் செவேலென்ற திருத்தோளில் பெருமான் தன் சின்னமாகிய திருநீற்றைப் பூசியிருக்கிறான். அந்த வெண்ணீற்றையும் அதை அணிந்த தோள்களையும் சொல்லிச் சொல்லிப் பூரித்துப் போகிறாள்."

**சின பவளத் திண்தோள்மேல் சேர்ந்திலங்கு**
**வெண்ணீற்றன் என்கின்றாளால்.**

"ஆம்! சிவப்பான திண்ணிய தோளில் வெண்மையான நீறு விளங்குகிறது. அதைக் கூர்ந்து கவனித்திருக்கிறாள். திருநீற்றுப் பூச்சினூடே அவனுடைய செவ்வண்ணத் திருமேனியைக் கண்டு களித்திருக்கிறாள்."

"அவன் பெண்களுக்கு இனியவன் என்பதையும் அல்லவா அறிந்திருக்கிறாள்? அவன் பவள மேகலையை அணிந்த உமாதேவியோடு எழுந்தருளியிருப்பதைக் கண்டிருக்கிறாள். தனக்கும் அப்படி ஒரு நிலை கிடைக்குமா என்ற ஏக்கம் அவள் உள்ளத்தில் எழுந்திருக்க வேண்டும்.

**அன பவள மேகலையோடு.**

"ஆனாலும் அவன் யாவருக்கும் எளியவன் அல்லன் என்பதையும் உணர்ந்திருக்கிறாள். ஐம்பூதங்களுக்கும் அப்பாலே, ஐம்பொறிகளுக்கும் அப்பாலே, மனத்துக்கும் அப்பாலே, மனத்துக்கும் எட்டாத அப்பாலைக்கும் அப்பாலே இருப்பவன் அவன் என்பதையும் உணர்ந்து சொல்கிறாள்.

பவளமேகலை அணிந்த உமா தேவியோடு இருக்கிறான் என்ற போது தனக்கும் அந்த நிலை கிடைக்கலாம் என்ற எண்ணம் எழுகிறது. ஆனால் அடுத்த கணமே அவன் எல்லாவற்றையும் கடந்து அப்பால் இருப்பவன் என்ற எண்ணம் வரவே பெருமூச் செறிகிறாள்.

**அன பவள மேகலையோடு**
**அப்பாலைக்கு அப்பாலன் என்கின்றாளால்.**

"இப்படியெல்லாம் வருணிக்கிறாளே; இந்த வருணனை களுக்கு உரியவன் யார் என்று யோசித்துப் பார்த்தேன். எல்லாம் சிவபெருமானுடைய அடையாளங்களாக இருக் கின்றன. 'இந்த அடையாளங்களோடு விளங்கும் அப்பெரு மானைப்பற்றிச் சொல்கிறாளே; இவளுக்கு இவை எப்படித் தெரிந்தன?' என்று ஆராய்ந்தேன். 'முன்பெல்லாம் இப்படிப் பேசவில்லையே! இப்போது திடீரென்று இந்த மாற்றம் ஏன் வந்தது. என்று யோசித்தேன் உண்மையை உணர்ந்தேன்."

"எதை உணர்ந்தாய்?"

"இவள் தன் தோழிமாரோடு திருக்கழிப்பாலைக்குப் போனாள். வேடிக்கையாகப் போய் அங்குள்ள காட்சிகளையெல்லாம் கண்டு வரட்டுமே என்று அவள் போவதற்கு இசைந்தேன். போய் வந்த பிறகு அவள் இந்த ஊரில் இருப்பவளாகவே தோன்றவில்லை. இன்னும் திருக்கழிப்பாலையில் சிவபெரு மான் திருமுன் நின்று அவனைக் கண்ட கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருப்பவளைப் போலவே பேசுகிறாள். திருக் கழிப்பாலையில் கடல் இருக்கிறது. அங்கே பவளங்களை அலைகள் மோதிக்கொண்டு வந்து கரையில் சிந்துகின்றன. அவற்றை அவள் பார்க்கவில்லை. கருணைக் கடலாகிய சிவ பெருமானை மட்டும் பார்த்திருக்கிறாள். கடலில் உள்ள பவளத் தைப் பார்க்கவில்லை. சிவபெருமானுடைய பவளத் திருத் தோளைப் பார்த்திருக்கிறாள். அதனால்தான் இப்படிப் பேசுகிறாள். திருக்கழிப்பாலைச் சிவபெருமானைக் கண்டிருக்க வேண்டும். அப்படித்தான் எனக்குத் தோன்றுகிறது."

**கனபவளம் சிந்தும் கழிப்பாலைச்**
**சேர்வானைக் கண்டாள் கொல்லோ?**

இவ்வாறு ஒரு பெண்ணைப் பெற்ற தாய் சொல்வதாக அப்பர் சுவாமிகள் பாடுகிருர்.

**வனபவள வாய்திறந்து வானவர்க்கும்**
**தானவனே என்கின் ருளால்;**
**சினபவளத் திண்தோள்மேல் சேர்ந்திலங்கு**
**வெண்ணீற்றன் என்கின் ருளால்;**
**அனபவள மேகலையோடு அப்பாலைக்கு**
**அப்பாலான் என்கின் ருளால்;**
**கனபவளம் சிந்தும் கழிப்பாலைச்**
**சேர்வானைக் கண்டாள் கொல்லோ?**

[ இந்தப் பெண் தன் அழகிய பவளம் போன்ற வாயைத் திறந்து, தேவர்களுக்கெல்லாம் அவரவர்களுக்குரிய பதவிகளையும் போகங்களையும் தானம் செய்பவனே என்கின்ருள்; தன்னுடைய திண்ணிய தோள்களின்மேல் தனக்குரிய அடையாளமாகச் சேர்ந்து விளங்குகின்ற வெண்மையான திருநீற்றை உடையவன் என்கின்ருள்; இன்னவாறு உள்ளவனென்று அறிய முடியாத அத்தகைய, பவளமேகலையை அணிந்த உமாதேவியோடு அப்பாலைக்கும் அப்பாலாக இருப்பவன் என்கின்ருள்; கனமான பவளங்களை அலைகள் கொண்டு வந்து கரையிலே சிந்தும் திருக்கழிப்பாலையைச் சேர்ந்து நித்தியவாசம் செய்யும் சிவபெருமானைத் தரிசித்தாளோ?*

*வனபவளம்—அழகையுடைய பவளம்; செவ்வண்ணத்தையுடைய பவளம் எனலும் ஆம். அவள் வாயைத் திறக்கும் போதே அதன் வண்ண எழில் தெரிகிறது. பிறகு சொல்லினிமை தோன்றுகிறது. தானவன்-தானம் செய்பவன்; இறைவன் மும்மூர்த்திகளுக்கும் தேவர்களுக்கும் உரிய பதவிகளை அளித்துத் தம் தொழில்களை ஆற்றும்படி செய்பவன். சின்னம் என்பது சினம் என்று நின்றது. அது வெண்ணீற்றுக்கு அடை. சினப் பவளம் என்பது எதுகை நோக்கிச் சினபவளம் என வந்தது.

இறைவன் வீரம் செறிந்த தோளையுடையவன்; அதனால் திண்டோளாயிற்று. அவன் வீரத்தைப் புலப்படுத்தும் எட்டுத் தலங்கள் அட்ட வீரட்டானங்கள். பெண்களுக்கு ஆடவரின் ஆண்மைக்கு இடமாகிய தோளின்மேல் விருப்பம் உண்டாவது இயல்பு; "மங்கையர்கள், தம்மனத்தை வாங்கும் தடந்தோளான்" என்பது **நளவெண்பா**. செந்நிற முள்ள திருத் தோளில் சேர்ந்தமையால் திருநீறு பின்னும் விட்டு விளங்கு கிறது. அன—அன்ன; நெஞ்சறி சுட்டு; இத்தகையவளென்று சொல்ல இயலாமல் உணர்ச்சியினால் உணரப்படுபவளாதலின் இவ்வாறு சொன்னாள். பவள மேகலை—பவளத்தாலான மேக லையை அணிந்த உமாதேவி; அன்மொழித்தொகை. பவளம் சிந்தும் கழிப்பாலையில் உள்ளவளாதலின் பவள மேகலை அணிவது எளிதாயிற்று. அப்பாலைக்கு — கருத்துக்கும் எட்டாத அத்தகைய பகுதிகளுக்கும்; அப்பாலைக்கும் என்ற உம்மை தொக்கது. கன பவளம் — நன்கு முதிர்ந்து திரண்டு கனம் பெற்ற பவளம். சிந்தும்–எளிதிலே கிடைக்கும்படி கரை யிலே சிந்தும். மகளிர் அணிகலமாக அணியும் பவளம் எளிதிலே கிடைக்கும் இடத்தை அடைந்தாளேனும் அந்தப் பெண்ணுக்கு அதன்மேல் ஆசை தோன்றாமல் எம்பெருமான் மேல் காதல் பிறந்தது என்பது குறிப்பு.

கண்ணாற் கண்டு உள்ளத்திலே பதித்ததை வாய் அடிக்கடி சொல்வது மனித இயல்பு. வயிறு நிறை உண்டாருக்கு ஏப்பம் வருவது போலக் கருத்து நிறைய உண்டாருக்கு இப்படிப் பேச்சு வரும்.]

அப்பர் சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய நான்காம் திருமுறையில் ஆறும் திருப்பதிகத்தில் உள்ள முதல் பாட்டு இது.

# 5. மனத்தே வைத்தேன்

**நாம்** நம் மனத்தில் எத்தனையோ ஆசைகளை வைத்திருக்கிறோம். காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் ஆகிய தீய குணங்கள் அதில் நிரம்பியுள்ளன. குப்பை போன்ற இந்தத் தீய குணங்கள் நிரம்பிய குப்பைத் தொட்டியாக இருக்கிறது, நம் மனம். குப்பை நிறைந்த இடத்தை யார் அணுகுவார்கள்? அதில் மேலும் மேலும் குப்பையைத்தான் கொட்டுவார்கள். அந்தக் குப்பைத் தொட்டியில் நல்ல பொருள் ஏதும் இருக்க இடம் இல்லை.

பிறருக்கு நம்மிடத்தில் உள்ளதைக் கொடுப்பது நல்ல பண்பு. நல்லவர்களுக்கு நம் வீட்டில் இடம் கொடுத்துத் தங்கச் செய்வதால் அவர்களுடைய ஆசி நமக்குக் கிடைக்கும். அப்படியின்றி உள்ளதை ஒளித்து வைத்துக்கொண்டு யாரேனும் ஏதாவது கேட்டால் இல்லையென்னும் வஞ்சகர்கள் உள்ளம் உலோபம் நிரம்பியது. அத்தகைய வஞ்ச நெஞ்சத்தில் நல்ல பொருள் இராது. எங்கும் இருக்கும் இறைவன் அவர்களுடைய நெஞ்சத்தில் இருந்தாலும் அவர்கள் காணமுடியாதபடி ஒளிந்து நிற்பான்; அவர்கள் உள்ளத்தில் இருந்துகொண்டே அவர்களுக்கு அரியவனாக இருப்பான்.

**கரவாடும் வன்னெஞ்சர்க்கு அரியானை.**

அவ்வாறு இன்றித் தம்மிடம் உள்ளவற்றை ஈபவர்கள் தாராள புத்தி உள்ளவர்கள். அத்தகையவர்கள், ''இன்னும் கொடுக்க நம்மிடம் பொருள் இல்லையே!'' என்று வருந்துவார்கள். ''நம்மிடம் கொடுப்பதற்கு இன்னும் என்ன இருக்கிறது?'' என்று எண்ணி எண்ணிக் கிடைத்ததைக் கொடுப்பார்கள். அவர்களை,

''உள்ளி உள்ளஎல் லாம்உவந்து ஈயும்அவ்
வள்ளியோர்''

என்று **கம்பர்** பாடுவார். அவ்வாறு ஒளித்து வைக்காமல் கொடுக்க எண்ணும் உள்ளம் விரிந்த உள்ளம். அங்கே இறைவன் தங்கி விரவி நிற்பான்.

**கரவார்பால் விரவாடும் பெருமானை.**

இவ்வாறு உள்ள பெருமான் யார்? அவனை அடையாளம் காட்டுகிறார் அப்பர் சுவாமிகள். அவன் தர்மத்தையே இடப வாகனமாகக் கொண்டு ஏறி அடியார்களுக்கு அருள் செய்ய வருகிறவன்; எல்லாம் அறிந்த வித்தகன். தர்மம் இறைவனால் காப்பாற்றப்படுகிறது. தன்னை ஓம்பிப் பேணும் அவ்விறைவனுக்குத் தானே வாகனமாக அந்தத் தர்மம் இருக்கிறது. தன்னைத் தாங்கிப் போற்றும் பெருமானைத் தான் வாகனமாக இருந்து தாங்குகிறது. அதன்மேல் அவன் ஊர்ந்து வருகிறான்.

**விடை ஏறும் வித்தகனை.**

விடையாகிய எருது வயல்களை உழுது பயிரிட உதவி செய்கிறது. அதனால் நெல் விளைகிறது. அவ்வாறு விளைந்த நெல்லை மனிதர்கள் உண்ண வழங்கிவிட்டுத் தான் எஞ்சிய வைக்கோலைத் தின்கிறது.

"உழுதநோன் பகடு அழிதின் றாங்கு"

என்று பரோபகாரிகளுக்கு உவமை கூறுவர். தம்மிடம் உள்ளவற்றைப் பிறருக்கு அளித்து எஞ்சியதை நுகரும் பெருந்தகையாளரைப் போல இருக்கிறது அந்த இடபம். கரவார்பால் விரவாடும் பெருமான், தன் ஆற்றலைக் கரவாமல் பிறர் பயன் படுத்திக்கொள்ளும்படி செய்யும் விடையையே வாகனமாகப் பெற்றிருக்கிறான்.

அவன் நள்ளிரவில் நட்டம் ஆடுகிறவன். உயிர்களெல்லாம் உழைத்துக் களைத்து உறங்கும் அந்த வேளையில், அந்த உயிர்கள் கவலைகளை மறந்து உறங்குவதைக் கண்டு மகிழ்ந்து அவன் ஆடுகிறான். குழந்தைகளுக்கு உணவளித்து உறங்கப் பண்ணிய பிறகு தான் தூங்காமல் தன் குழந்தைகள் உறங்கும் அமைதியைக் கண்டு மகிழும் தாய்போல அவன் இருக்கிறான்.

அவன் ஆடும்போது அவன் அணிந்துள்ள ஆபரணமாகிய பாம்புகள் ஆடுகின்றன. அவனுடைய சடைகள் தொங்கி ஆடுகின்றன. தன் கையில் அனலை ஏந்திக்கொண்டு அவன் ஆடுகிறான். எல்லாவற்றையும் தூய்மைப்படுத்துவது அனல். அதனை அவன் கையில் வைத்திருக்கிறான். அதனோடு அவன் ஆடுகிறான்.

**அரவு ஆடச் சடை தாழ**
**அங்கையினில் அனல் ஏந்தி**
**இரவு ஆடும் பெருமானை.**

இரவில் அவன் ஆடும்போது அவன் கையில் அனல் சுடர்விடுகிறது. ஆதலின் அந்த நள்ளிருளிலும் அவன் ஆடுவது நன்றாகத் தெரிகிறது. "நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே" என்பது **திருவாசகம்.**

இரவிலே அனல் ஏந்தி ஆடும் பெருமானை அப்பர் சுவாமிகள் தம் உள்ளத்தே வைத்துக்கொண்டாராம். நம்முடைய மனத்தில் இருள் செறிந்து கிடக்கிறது; அறியாமை என்னும் இருள் அடர்ந்திருக்கிறது. இருள் செறிந்த இடத்தில் எந்தப் பொருளும் தெரியாது. அறியாமை இருள் செறிந்த நம் மனத்திற்கு மெய்ப்பொருள் இன்னதென்று தெரியாது. அங்கே ஒளி புகுந்தால்தான் பொருளின் நிலை கண்டு தெளிவு பிறக்கும்.

அப்பர் சுவாமிகள் இரவில் அனல் ஏந்தி ஆடும்-பெருமானைத் தம் மனத்தில் வைத்துக் கொண்டார். மற்றவர் மனத்தில் சிறைப்பட்டுக் கிடப்பவனைப் போல் உள்ள பெருமான் அன்பர்கள் உள்ளத்தில் தனக்கு வாய்ப்பான இடம் கிடைத்ததே என்று மகிழ்ந்து ஆனந்தக் கூத்தாடுகிறான். அவன் அனலேந்தி ஆடுவதனால் அவ்விடத்தில் இருள் இருப்பதில்லை. குப்பைகள் எரிந்து சாம்பலாகி விடுகின்றன. குப்பைத் தொட்டியில் நெருப்பைப் போட்டால் அது குப்பையை எரித்து விட்டுச் சுடர்விடும். நாமோர் குப்பைத் தொட்டியில் மேலும் குப்பைகளைக் கொட்டுகிறோம். அப்பர் சுவாமிகளைப் போன்றவர்களோ அனலேந்தும் பெருமானை

வைக்கிறுர்கள். குப்பைக்குத் தீ வைத்தது போல அந்தச் செயல் அமைகிறது. அனலேந்தும் பெருமானை வைத்த மனம் மாசு நீங்கித் தூய்மை பெறுகிறது. கள்ளியும் முள்ளியும் முள்மரமும் படர்ந்த காட்டிலே தீயை வைத்தால் எல்லாம் எரிந்து போக, அவ்விடம் சுத்தமாகிவிடுகிறது. செறிவான காட்டிலே பயிர் செய்ய விரும்புகிறவர்கள் அந்தக் காட்டை எரித்துவிட்டு உணவுப் பயிரை விளைவிப்பார்கள். கரவாடும் வன்னெஞ்சர் மனம் அந்தக் காடு போன்றது. பிறர் பறிக்க முடியாமல் முள் அடர்ந்த ஈச்சமரக் காடு போன்றது என்று கூடச் சொல்லலாம்.

இறைவனை உள்ளத்தே வைத்தவர் திருநாவுக்கரசர்.

**இரவாடும் பெருமானை என் மனத்தே வைத்தேனே!**

அதனுல் அவர் மனத்தில் குப்பை இல்லை. சுத்த வெளியாகிவிட்ட அங்கே ஆண்டவன் களிக்கூத்தாடுகிருன். குப்பைக் காடாக இருந்த அந்த உள்ளம் இப்போது இறைவன் ஆடும் நடன அரங்கு ஆகிவிட்டது.

**கரவாடும் வன்னெஞ்சர்க்கு அரியானைக் கரவார்பால்**
**விரவாடும் பெருமானை விடைஏறும் வித்தகனை**
**அரவாடச் சடைதாழ அங்கையினில் அனல்ஏந்தி**
**இரவாடும் பெருமானை என்மனத்தே வைத்தேனே!**

*தம்மிடம் உள்ளதைப் பிறருக்கு ஈய விருப்பமின்றி ஒளிந்தலைச் செய்யும் வன்மையான நெஞ்சை உடையவர்களுக்கு அறிவதற்கு அரியவனும், அவ்வாறு கரக்காமல் உள்ளதை வழங்கும் உத்தமர்களிடம் விரவுதலைச் செய்யும் பெருமானும், இடபத்தில் ஏறிவரும் சர்வக்ஞனும், தான் அணிந்த பாம்புகள் ஆடவும் சடை தொங்கி ஆடவும் அகங்கையில் அனலை ஏந்திக் கொண்டு நள்ளிரவில் நடனம் செய்யும் பெருமானுமாகிய

சிவபிரானை என் மனத்துள் வைத்தேன். (இனி எனக்கு யாதொரு குறையும் இல்லை.)*

[கரவு-ஒளித்தல், ஆடும்-செய்யும், "கரப்பவர் தங்கட் கெல்லாம் கடுநர கங்கள் வைத்தார்" என்று பிறிதோரிடத்தில் பாடுவார் திருநாவுக்கரசர். பிறருடைய வறுமை கண்டு நெஞ்சம் இளகுதல் நல்லோர் இயல்பு. கொடிய வறுமையால் அல்லற்படுவோரை நேரே கண்டும், அவர் கேட்டபோது கொடாமல் உள்ளதைக் கரந்து நிற்பவர் மனம் இரக்க மில்லாத மனம். அதனால் அவர்களை வன்னெஞ்சர் என்றார். விரவு ஆடும்-விரவுதலைச் செய்யும்; அவர்களோடு கலசி அருள் பாலிக்கும். விடை-இடபம். வித்தகன்-சகலகலைகளையும் உணர்ந்த சர்வக்ஞன். அங்கை-உள்ளங்கை; அழகிய கை என்றும் கொள்ளலாம். இருட்டில் ஆடுவான், அந்த நேரத்தில் வருவார் தன்னை அடையாளம் கண்டுகொள்ளும்படி அனல் ஏந்தி ஆடுகிறான். இரவில் ஆடும்.

தம் மனத்தே வேறு எதையும் வைக்காமல் பெருமானையே வைத்து, வறியவன் பெற்ற செல்வத்தைப் போலவும் மலடி பெற்ற மகவைப் போலவும் பாதுகாக்கிறவர் அப்பரடிகள். பெருமானையே என்ற பிரிநிலை ஏகாரம் தொக்கது. வைத் தேனே : ஏகாரம், ஈற்றசை.

இறைவனை என் மனத்தில் வைத்துக் கொண்டமையால் எனக்கு ஒரு குறையும் இல்லை என்பது குறிப்பு. எண்ணினேன், நினைத்தேன் என்று சொல்லாமல் வைத்தேனே என்றார், அந் தப் பெருமானைப் பெருஞ்செல்வமாக வைத்துப் போற்றுதலை எண்ணி. வைப்பு என்பது சேமித்து வைக்கும் பொருளுக்குப் பெயர். பொருளைச் சேமித்து வைத்தவருக்கு அதனை ஈட்ட இயலாத எய்ப்பு வரும்போது ஈட்டி வைத்த செல்வம் உதவும். அதனால் அதனை எய்ப்பினில் வைப்பு என்று சொல்வது மரபு. இறைவனை மனத்தில் வைப்பாகக்

கொண்டிருத்தலால் எய்ப்பு வந்தாலும், அல்லற்படாமல் அந்த வைப்புப் பயன்படும் என்பது குறிப்பு. "எய்ப்பென்னை வந்து நலியும்போது அங்கு ஏதும் நான் உன்னை நினைக்க மாட்டேன், அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன் அரங்கத் தரவணைப் பள்ளியானே" (**பெரியாழ்வார் திருமொழி**) என்பது போன்றது இது.]

தேவாரத்தில் நான்காம் திருமுறையில் ஏழாம் திருப்பதிகத்தில் உள்ள முதற்பாட்டு இது.

## 6. இதுதான் இவர்க்கு இயல்போ ?

**சி**வபெருமானிடம் அன்பு கொண்டவர்கள் அவனைப் பல படியாகப் புகழ்ந்து துதிப்பார்கள்; தம்முடைய குறைகளைச் சொல்லி இரங்குவார்கள்; சில சமயங்களில் மிகவும் நெருக்க மாக நின்று ஏசுவது போலப் பேசுவார்கள். இவை யாவும் பக்தி உணர்வால் உண்டாகும் விசித்திரங்கள். சுந்தரமூர்த்தி நாயனுர் இறைவனேடு தோழமை கொண்டு இப்படி அடிக் கடி பாடுவார். மற்றவர்களும் சில சமயங்களில் இப்படிப் பாடுவதுண்டு. அப்பர் சுவாமிகள் அவ்வாறு பாடுவார், சில இடங்களில்.

வளமான வாழ்க்கை உடையவர்கள் தம்மை அணிகளா லும் ஆடை வகைகளாலும் அலங்கரித்துக்கொள்வார்கள். சிவபிரான் எத்தகையவர்? மார்பு நிறையச் சந்தனம் பூசிக் கொள்கிருரா? எல்லோருடைய உடம்பும் தேய்ந்து மாய்ந்து எரிந்த வெள்ளைப் பொடியை அவர் பூசிக் கொள்கிருர். நல்ல வண்ணமும் மணமும் உடைய பொடியைச் செல்வர்கள் பூசிக் கொள்வது போலத் தேயும் வெண் பொடியைப் பூசிக் கொள் கிருர். அதில் என்ன அழகு இருக்கிறது? அதுமட்டுமா? நெற்றியிலே அழகும் மணமும் உள்ள சந்தனப் பொட்டை இட்டுக் கொள்வது வள வாழ்வுடையவர்களின் வழக்கம். அவரோ பிறைச்சந்திரனை நுதலில் திலகமாக வைத்துள்ளார். திலகம் இட்டால் நடு நெற்றியில் இட்டுக் கொள்வார்கள். அவர் அதையும் சரியாக இட்டுக் கொள்ளாமல் நெற்றியின் மேலே பதித்துக் கொண்டிருக்கிருர். அது ஓர் அழகா?

**தேய் பொடி வெள்ளை பூசி அதன்மேல் ஓர் திங்கள்**
**திலகம் பதித்த நுதலர்.**

நெற்றி இருக்கட்டும். அவர் கழுத்தைப் பார்க்கலாம். நவமணி மாலைகளையும் முத்துமாலைகளையும் கழுத்தில் அணியும் செல்வர்களைப் பார்த்திருக்கிறோம். அவரோ நஞ்சைக் கழுத்தில் வைத்திருக்கிறார். கடலிலே முத்தும் பவளமும் தோன்றுகின்றனவே; அவற்றை அணியக் கூடாது? அந்த நஞ்சைக் கண்டாலே பயமாக இருக்கிறது. அதன் ஒளியே வெப்பத்தைத் தருகிறது; காயும் கதிரை வீசுகிறது. அதுவும் கடலில் தோன்றியதுதான். இதுதானா அவருக்கு அங்கே கிடைத்தது?

**காய் கதிர் வேலை நீல ஒளிமா மிடற்றர்.**

அதுதான் போகட்டும், செல்வர்கள் பெரிய மாளிகைகளைக் கட்டிக் கொண்டு வாழ்வார்கள், அவர் நினைத்தால் ஒரு பெரிய அரண்மனையையே கட்டிக் கொள்ளலாம். ஆனால் அவர் எங்கே வாழ்கிறார்? பிணங்களை சுட்டுக் கரியாக்கும் சுடுகாட்டில் வாழ்கிறார்.

**கரிகாடர்.**

இரண்டு கால்களிலும் நல்ல சிலம்புகளை அணிந்து அழகாக நடனமிடலாம். அவர் ஒரு காலில் வீரக்கழலைக் கட்டிக் கொண்டு இருக்கிறார். அவர் பல வீரச்செயல்களைப் புரிந்தவராம். அந்தச் செயல்களை நினைத்தாலே பயமாக இருக்கிறது. அவருடன் மூங்கிலைப் போன்ற அழகிய தோளையுடைய உமாதேவி இருக்கிறாள். அவள் எப்படித்தான் அவருடன் காலம் கடத்துகிறாளோ தெரியவில்லை. ஒரு சமயம் கஜாசுரன் என்பவன் யானை உருவத்தில் வந்தான். அவனை அழிக்க புகுந்தார். பக்கத்தில் அந்த மெல்லியல் இருக்கிறாளே, அவ அஞ்சுவாள். ஆகையால் அவளை அந்தப்புரத்தில் வைத் விட்டு அந்த யானையை அழித்திருக்கலாமே! அவர் என் செய்தார் தெரியுமா? அந்தத் தேவி பார்த்து அஞ்சும்ப அவள் பக்கத்தில் இருக்கும்பொழுதே தம் கையிலுள் மழுவை வீசி அந்த யானையைக் கொன்றார். அதோடு நின்றார

அதை உரித்து அந்தத் தோலைப் போர்த்துக் கொண்டார். பூவேலை செய்த பட்டும் பீதாம்பரமும் அவருக்குக் கிடைக்கவில்லையா? யானையைக் கொன்றது போகட்டும். இரத்தம் சிந்தும் அதன் தோலைப் போர்த்துக் கொள்ள வேண்டுமா? அது பார்க்க எவ்வளவு பயங்கரமாக இருக்கிறது!

**கால் ஓர் கழலர் ;**
**வேயுடன் ஆடு தோளியவள் விம்ம வெய்ய மழு**
**வீசி வேழ உரி போர்த்து.**

இந்த லட்சணத்தோடு அவர் ஆடுகிறார். ஆடும்போது அவருடைய திருமேனியில் அழகான பொருள் ஒன்றேனும் தோற்றுகிறதா? அவர்தாம் ஆடுகிறாரே; அவருடைய தேவியாகிய உமாதேவி அதைப் பார்த்துக் கொண்டு நிற்கிறாள். "இந்தக்கோலத்தோடு நீங்கள் ஆடவேண்டாம். நல்ல கோலம் புனைந்து ஆடுங்கள்" என்று அவள் சொல்லக் கூடாதோ? அவளும் அந்த ஆட்டத்தைக் கண்டு மகிழ்கிறாள் போலும்! ஏ! இது என்ன அழகு?

கணவர் அப்படி இருந்தால் அவரைத் திருத்தி நல்லபடி அணிகளை அணிந்து கொள்ளும்படி செய்யக் கூடாதோ? அவர் ஆடுகிறார். அவள் கண்டு களிக்கிறாள். இதுதான் இந்தத் தம்பதிகளுக்கு இயல்போ? நன்றாக இருக்கிறது இந்தக் கோலமும் ஆட்டமும்! அதைப் பார்த்து நாலு பேர் சிரிப்பார்களே என்று அவளாவது எண்ணித் தடுக்கவில்லை. "நான் ஆடுகிறேன். நீ பார்த்து மகிழ்" என்று பேசிக் கொண்டிருக்கிறார்கள் போலும்! இவர்கள் இயல்பே இதுதானோ?

**ஏ இவர் ஆடுமாறும் இவள் காணுமாறும் !**
**இதுதான் இவர்க்கு ஓர் இயல்பே ?**

தம் கணவர் அணியும் ஆடையும் பூண்டு அழகுடன் விளங்க அவர் அருகில் தாமும் அணிகளோடும் ஆடைகளோடும் அலங்காரமாக நின்று களிப்பது உலகப்பெண்களின்

இயல்பு. ஆனால் இந்தக் கணவன் மனைவியரின் இயல்பே வேருக, பார்த்தால் வேடிக்கையாக, பரிகாசத்துக்கு உரியதாக இருக்கிறது. நல்ல ஆட்டம் !

**தேய்பொடி வெள்ளை பூசிஅதன் மேல்ஓர் திங்கள்**
**திலகம் பதித்த நுதலர்,**
**காய்கதிர் வேலை நீலஒளி மாமிடற்றர், கரி**
**காடர், காலொர் கழலர்,**
**வேயுடன் ஆடு தோளியவள் விம்ம வெய்யமழு**
**வீசி வேழஉரி போர்த்து**
**ஏ ! இவர் ஆடு மாறும்இவள் காணு மாறும்இது**
**தான்இவர்க்குஓர் இயல்பே !**

* தேய்ந்த வெள்ளையாகிய பொடியைப் பூசிச்சந்திரனகிய திலகத்தைத் தம் நெற்றியின் மேலே பதித்திருக்கிறவராய்; கடலில் தோன்றிய வெம்மை வீசுகின்ற விடத்தின் நீல ஒளியை உடைய கரிய கழுத்தை உடையவராய், பிணங்கள் கரியாகும் சுடுகாட்டில் வசிப்பவராய், காலில் ஒற்றைக் கழலை உடையவராய், மூங்கிலோடு ஒப்புச் சொல்லும் தோளையுடைய உமாதேவி அஞ்சி விம்மும்படியாகத் தம் மழுவாயுதத்தை வீசி யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்துக் கொண்டு இவர் ஆடும் விதமும் அதை இந்த உமாதேவி காணும் விதமும் ஏ! என்ன பரிகாசத்துக்குரியனவாக உள்ளன! இதுதான் இந்த இருவர்களுக்கும் உரிய இயல்பு போலும்! (அவர் பைத்தியத்தைப் போல ஆடுகிருர் ; இவள் மற்ருெரு பைத்தியத்தைப் போல அந்த ஆட்டத்தைக் கண்டு களித்துக் கொண்டு நிற்கிருள் !)*

[கட்டி தட்டாமல் தேய்ந்ததுபோல இருத்தலின் தேய் பொடி என்ருர். பொடி வெள்ளை-வெள்ளைப் பொடி ; முன்பின் மாறி நின்றன. நெற்றியிலே திருநீறு பூசியதை இங்கே குறித்தார் ; பின்னே திலகத்தைச் சொல்வதனல் அவ்வாறு கொள்ள

வேண்டும். காய் கதிர் நீல ஒளி, வேலை நீல ஒளி ; நீலம்- நீல நிறம் பெற்ற ஆலகால விடத்தின் நிறம். மாமிடற்றர்-நஞ்சை உண்டதனால் கரியதாகத் தோற்றும் கழுத்தைஉடையவர்; மா- கரிய, கரிகாடு-உடம்பெல்லாம் சுட்டுக் கரியாகும் காடு ; சுடு காடு. வேய் உடன் ஆடு-வேயை ஒப்பாக உடன் சொல்லும். அவருடைய தோற்றத்துக்கும் அவளுடைய அழகுக்கும் பொருத்தம் இல்லை என்பது குறிப்பு. தோளி அவள் : அவள், பகுதிப்பொருள் விகுதி. விம்ம-அச்சத்தால் நடுங்கிப் புலம்ப. வீசி-யானையைக் கொன்று; அதன் உரியைப் போர்த்து என்று இசையெச்சத்தால் வேண்டிய சொற்களைப் பெய்து பொருள் கொள்ள வேண்டும். ஏ : பரிகாசக் குறிப்ப. ஆடுமாறும் காணு மாறும் எத்தகைய பரிகாசத்துக்குரியவை என்று கொள்க. என்னே என்ற சொல்லை அவாய் நிலையால் கொண்டு பொருள் செய்ய வேண்டும். இயல்பே-இயல்பா; ஏகாரம், வினா.

இறைவன் யாவரும் இறந்துபட்ட மயானத்துச் சாம்பலைப் பூசிக் கொண்டு நிற்பது, அவன் நித்தியன் என்பதைக் காட்டு வது. அவன் நெற்றியின்மேல் உள்ள சந்திரன் திலகம் இட்டது போலத் தேயாமல் வளராமல் இருப்பதனால் அவனைச் சார்ந்தவர்கள் இடரின்றி வாழ்வதைக் குறிக்கும். திலகம் என்பது எந்த வடிவத்திலும் இருக்கும்; சிலர் பிறைச் சந்திர னைப் போலச் சந்தனத்தை இட்டுக் கொள்வது வழக்கம். தேவர் களெல்லாம் அஞ்சி மயங்கும்படி செய்த நஞ்சை உண்டதனால் இறைவன் எதனாலும் இறவாதவன் என்பதும், கருணை யினால் பிறர் இடர்ப்பாடுகளை நீக்குபவன் என்பதும் புலனாகும். அவன் பல வீரச் செயல்களைப் புரிந்ததற்கு அடையாளமாகக் கழலை அணிந்திருக்கிறான். அந்தச் செயல்கள் யாவும் தேவரும் பிறரும் பெற்ற இன்னல்களைப் போக்குவதற்காகச் செய்தருளி யவை. கஜாசுரனை அழித்து அவன் தோலைப் போர்த்தது, தன் அடியார்களுக்கு வரும் இன்னலைப் போக்கி அருள் புரிவதை அன்பர்கள் என்றும் நினைக்கும்படியான அடையாளமாகக் கொண்டபடி.

இதுதான் இவர்க்கு இயல்போ?

இவ்வாறுள்ள அருட்கோலத்தையும் அருட்செயல்களையும் எள்ளல் குறிப்புத் தொனிக்கும்படி பாடினார் அப்பர் சுவாமிகள், பக்தியால் உண்டான நெருக்கத்தால் இவ்வாறு பாடினார்.]

நான்காம் திருமுறையில் எட்டாம் திருப்பதிகத்தில் மூன்றாவது திருப்பாட்டாக அமைந்தது இது.

# 7. மங்கையோடிருக்கும் யோகி

இறைவனுடைய அடியவர்கள் எல்லார்க்கும் இனியவர் களாக இருப்பார்கள்; இறைவனை எண்ணி எண்ணி உருகு வார்கள். நாமாக இறைவன் திருமுன் நின்றால் நமக்கு உருக்கம் உண்டாவதில்லை. ஆனால் அன்பர்கள் அங்கே உருகி அழுதால் அப்போது நமக்கு உருக்கம் உண்டாகிறது. இது மனித இயல்பு. வெயில் காயும் போது நாம் வீதியிலே நடக் கிறோம். அதன் வெம்மை நம்மைத் துன்புறுத்துவதில்லை. ஆனால் வெயிலினால் சூடு ஏறிய மணலில் நடந்தால் நம் கால் சுடுகிறது. நடக்க முடிவதில்லை. வெயிலினால் உண்டாகாத உறைப்பு அதை ஏற்ற மணலால் உண்டாகிறது. அவ்வாறே இறைவன் திருமுன் நாம் மட்டும் இருந்தால் உண்டாகாத உருக்கம் அடியவர்கள் உருகி நிற்கும்போது நமக்கும் உண்டாகிறது.

ஆகவே, நாம் இறைவன்முன் சென்று தனியே வணங்கு வதைவிட அடியார் குழுவோடு சென்று வணங்கினால் அவர் களுடைய சார்பினால் நம்மிடமும் பக்தி உணர்ச்சி எழும். "அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால், இன்ப நிலை தானேவந்து எய்தும் பராபரமே" என்பர் **தாயுமானவர்.**

இறைவனைத்தொழுவதைவிட அடியாரைத்தொழுவதனால் இந்த நலம் கிடைப்பது காரணமாக அடியார்களைப்பலர் நாடித் தொழுவார்கள். பழங்காலத்தில் திருஞான சம்பந்தரோடும் திருநாவுக்கரசரோடும் கூட்டம் கூட்டமாகத் தொண்டர்கள் சென்றார்கள் என்று **பெரியபுராணத்**தால் தெரிய வருகிறது. ஆகவே உண்மையான அடியார்களைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டு பல நல்லவர்கள், இறைவன் அருளைப் பெற ஆசை கொண்டவர்கள், இருப்பார்கள்; அவர்களைத் தொழுவார்கள் காலில் விழுந்து தொழுது எழுவார்கள்.

**குழுவினர் தொழுது எழும் அடியர்.**

அத்தகைய அடியார்கள் தூய சிந்தையும் மொழியும் செயலும் உடையவர்களாக இருப்பார்கள். அவர்களைப் பாவங்கள் அண்டுவதில்லை. அப்படி ஏதேனும் பாவம் அவரைப் பற்றி அலைக்காமல் விடமாட்டேன் என்று வந்தாலும் அதை இறைவன் உடனே போக்கிவிடுவான்.

**அடியர் மேல்வினை தழுவின கழுவுவர்.**

மற்றவர்களைப் பாவங்கள் வந்து தாக்கி அலைத்துக் கொடுமைப் படுத்தும். அடியவர்களையோ, எப்படியாவது இவர்களைக் கெடுத்து விடவேண்டுமென்று சங்கற்பம் செய்துகொண்டு மெல்ல வந்து தழுவுமாம். அப்படித் தழுவ வரும்போது அவற்றைப் போக்கிவிடுவான் ஆண்டவன். உடம்பிலே உள்ள உறுப்புக் குறைபோலவும், நோய் போலவும் பாவங்கள் பிறரோடு ஒட்டி இணைந்து நிற்கின்றன. அடியவர்களை அவை நெருங்க அஞ்சுகின்றன. அப்படி நெருங்கினாலும் அலைப்பவை போலச் செல்லாமல் தழுவுபவை போல வந்து இணைய முயல்கின்றன. அவற்றை இறைவன் போக்கிவிடுவான்.

இவ்வாறு அடியாரை அணுகும் பாவங்களைக் கழுவும் பெருமான் எப்படி இருக்கிறான்? செக்கச் செவேலென்று பவள வண்ணம் பெற்று விளங்குகிறான்.

**பவள மேனியர்.**

தன் அடியாருக்கு வரும் இடர்ப்பாடுகளைப் போக்கஅவன் என்றும் ஆயத்தனாக இருக்கிறான். அதற்கு அடையாளமாகத் தன் திருக்கரங்களில் படைக்கலன்களை வைத்திருக்கிறான்.

**மழுவினர்.**

அவனை எதிர்த்து நின்றவர்கள் யாரும் வென்றதில்லை, அசுரர்கள் மட்டும் அல்ல. கர்மமே முக்தியை அளிக்கும் என்று சிறிதும் பக்தியில்லாமல் இருந்த தாருகாவனத்து முனிவர்கள் தீய யாகம் செய்து பல பொருள்களை உண்டாக்கி இறைவனை அழிக்க ஏவினர். அவன் அவற்ருல் எந்த இன்னலும் அடையவில்லை. அப்படி வந்தவற்றை யெல்லாம் எளிதில் திருக்கரத்தில் வாங்கி ஏந்திக்கொண்டான். தமக்குப் பூமாலை போட வரும்போது சிலர் அதைக் கழுத்தில் போடுவதற்கு முன்பே கையில் வாங்கிக் கொள்வார்கள். சங்கராசாரிய சுவாமிகள் இவ்வாறு செய்வதைப் பார்த்திருக்கலாம். இறைவனும் தன்னை மோதவரும் பொருள்களை யெல்லாம் அவ்வாறு வாங்கி வைத்துக் கொண்டான். அப்படி வந்தவற்றில் ஒன்று மான்குட்டி. மான் குட்டியானாலும் மந்திர வலிமையினால் சிங்கக் குட்டிபோல வீறி எழுந்து வந்தது. அதை இறைவன் ஏற்றுத் தன் திருக்கரத்தில் ஏந்திக் கொண்டான். இப்போது அது மானுக்குரிய இயல்போடு அங்கே இருக்கிறது. ஆண்டவனை அடைந்தவர்கள் கோப தாபம் நீங்கி இருப்பார்கள் என்பதைக் காட்டிக் கொண்டு அது விளங்குகிறது.

**மான் மறிக் கையர்.**

சிவபெருமான் தவத்திருக் கோலத்தோடு இருப்பவன். அவனை யோகேசுவரன் என்று சொல்வார்கள். சடையும் தோலாடையும் அவனைத் தவக்கோலம் உடையவனாகக் காட்டுகின்றன. யோகியாக இருக்கும் அவன் துறவியா? அல்லது மணந்து கொண்டு பிறகு அந்த மனைவியைத் துறந்து வந்தவனா? அப்படி இல்லை. இன்றும் அவன் ஒரு மங்கையோடு, உமாதேவியோடு இணைந்தே, வாழ்கிருன்.

“மங்கையோ டிருந்தே யோகுசெய் வானை”

என்று பாடுவார் **சுந்தரர்**. மங்கையோடு சேர்ந்திருந்தாலும் அவனுடைய யோகத்துக்குக் குறை உண்டாகவில்லை. அவனை அறிந்தவர்கள் அவனை யோகியாகவே போற்றுகிருர்கள்.

இராமகிருஷ்ண பரமஹம்ஸர் சாரதா தேவியை மணந்து கொண்டார். திருமணத்தால் கணவன் மனைவியராக இருந்தாலும் அவர்களிடையே உடலுறவு இல்லை. மங்கையோடிருந்தே யோகு செய்த பெருமான் அவர். மனிதர்களிலேயே இப்படி இருப்பது சாத்தியமானல், இறைவன் இருப்பதில் என்ன ஆச்சரியம்? மங்கையரிடையே வாழ்ந்தாலும் தவவாழ்வு வாழமுடியும் என்பதை அவன் காட்டுகிருன். பதினருயிரம் கோபிமாரோடு வாழ்ந்தாலும் கண்ணன் பிரம்மசாரியாகவே இருந்தான்.

இப்படி உள்ள பெருமானைத் திருக்கடிலநதிக் கரையிலுள்ள திருவதிகை வீரட்டானத்தில் தரிசித்து அவனருளுக்கு ஆட் பட்டவர் அப்பர் சுவாமிகள். அந்தக் கெடில வாணனைப் பற்றி இப்படியெல்லாம் பாடுகிருர்.

**குழுவினர் தொழுதுஎழும் அடியர் மேல்வினை**
**தழுவின கழுவுவர்; பவள மேனியர்;**
**மழுவினர்: மான்மறிக் கையர்; மங்கையைக்**
**கெழுவின யோகினர், கெடில வாணரே.**

* கெடிலநதிக் கரையில் திருவதிகை வீரட்டானத்தில் நித்திய வாசம் செய்யும் எம்பெருமான், நல்லவர்களின் கூட்டம் அடியில் விழுந்து வணங்கி எழும் பெருமை பெற்ற தம் அடியார்களின்மேல் வந்து தழுவினவைகளாகிய பாவங்களைப் போக்குபவர்; பவளம் போன்ற செவ்வண்ணத் திருமேனியை உடையவர்; திருக்கரத்தில் மழுவை ஏந்தினவர்; மான்குட்டியை உடையவர்; மங்கையாகிய உமா தேவியைப் பொருந்தி நின்ற யோகத்தை உடையவர்.*

[குழுவினர்—அடியார்களை வழிபட்டுப் பக்தியுணர்வைப் பெறலாம் என்று வரும் கூட்டத்தினர். தொழுது என்பது பெரும்பாலும் கையால் தொழுவதைக் குறித்தாலும், இங்கே

கீழ் விழுந்து அடி தொழுவதைக் குறித்தது; எழும் என்ற குறிப்பினல் இதனை உணரலாம், தழுவினவாகிய வினைகளை. கழுவுவர்—எளிதிற் போக்குவார். மான்மறி—மான்குட்டி. கெழுவின—பொருந்திய; இணைந்த கெடிலவாணர் என்று ஆற்றை மட்டும் சொன்னலும் அந்த நதிக்கரையில் உள்ள திருவதிகை வீரட்டானப் பெருமானையே அது குறித்து நின்றது. ஏகாரம்: ஈற்றசை.]

நான்காந் திருமுறையில் பத்தாவது பதிகத்தில் வரும் ஐந்தாவது திருப்பாட்டு இது.

# 8. கைவிட முடியுமா?

நம்முடைய மனத்தில் எத்தனையோ ஆசைகள் இருக்கின்றன. சில ஆசைகள் அடிக்கடி கிளர்ந்து எழுகின்றன. சில ஆசைகள் உள்மனத்தே அடங்கியிருக்கின்றன. அந்த ஆசைகள் எப்போதாவது வெளிப்படும். உறங்கும்போது, அவை எழுந்து கனவிலே தலைநீட்டுகின்றன. நாம் எதற்காக ஏங்குகிறோமோ, அது கனவில் வந்து நிற்கும். எதிலே அதிகமாகப் பயின்று மனத்தைப் பதித்து வாழ்கிறோமோ, அதுவும் நம் கனவிலே வந்து எதிர்ப்படும். நனவிலே நல்ல எண்ணங்களை நினைத்துக் கொண்டிருந்தாலும் கனவிலே தீய எண்ணங்களும் அநுபவங்களும் மேலே மிதந்து வந்து நிற்கின்றன. ஆழமாக ஒன்றை நினைத்திருந்தால் அது நனவிலும் கனவிலும் வரும்.

பெரும்பாலும் நனவில் வரும் நிகழ்ச்சிகளுக்கும் கனவில் வரும் நிகழ்ச்சிகளுக்கும் தொடர்பே இருப்பதில்லை. நனவில் கோவையாக எண்ணம் இடுகிறோம். கனவில் அப்படி இருப்பதில்லை. மலைமேல் நடப்பதாகக் கனவு கண்டு கொண்டிருக்கும்போது திடீரென்று அந்தக் காட்சி மாறி ஆற்றங்கரையில் இருப்பதாகத் தோன்றும். கைநிறையப் பொன்னை வைத்திருக்கும் காட்சி தோன்றும்; உடனே ஒரு பாம்பு நம் முன் படம் எடுத்து ஆடுவது போன்ற காட்சி வரும். தொடர்பற்ற சிறு சிறு நிகழ்ச்சிகளே பெரும்பாலும் கனவில் வரும். நனவிலும் கனவிலும் ஒரு குறிப்பிட்ட எண்ணம் தோன்றுமாயின் அந்த எண்ணம் நம் உள்ளத்திலும் அடிமனத்திலும் வேரூன்றி இருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம்.

காம வயப்பட்டவர்கள் நனவிலே அந்த உணர்ச்சியோடு இருப்பார்கள். கனவிலே மங்கையரோடு கூடி மகிழ்வார்கள். அவர்களுடைய உள்ளத்தில் அந்த உணர்ச்சி பதிந்து நிற்கிறது என்பதற்கு இது அடையாளம்.

இறைவனிடம் ஈடுபட்டு அவன் சரண் அல்லால் சரண் இல்லை என்று நம்பி மனத்தாலே இறுகப் பற்றிய மெய்யன்பர்களுக்கு நனவிலும் அந்தப் பிடிப்புத் தளராமல் இருக்கும்; கனவிலும் அந்த உணர்வு எழும். மற்றவர்கள் ஜாக்கிராவஸ்தையில் இறைவனைப் பாடியும் தொழுதும் வழிபட்டு நின்றாலும், கனவில் அந்தக் காட்சிகள் வராமல் காமம், குரோதம் ஆகிய பேய்கள் தலையெடுத்துக் கூத்தாடும்.

அப்பர் சுவாமிகள் நனவிலும் கனவிலும் இறைவனையே எண்ணி வாழ்கிறவர். அவன்பால் கொண்ட காதல் அவர் உள்ளத்தில் ஆழமாக வேரூன்றி நிற்கிறது. துயிலும்பொழுதும் அந்த உணர்வு மாறுவதில்லை. அப்போதும் அவனையே காண்கிறார். இறைவனிடம் காதல் கொண்டு எப்போதும் அவனையே நினைந்து வாழும் மங்கையாகத் தம்மை ஆக்கிக் கொண்ட இந்த அநுபவத்தைச் சொல்கிறார்.

இறைவன் எல்லோருக்கும் நலம் பாலிப்பவன். தன்னைச் சரணாக அடைந்தவர்கள் எத்தகையவர்களானாலும் அவருடைய மனத்தினுள்ளே நின்று நிலைபெற்றுக் காட்சி தருபவன். அவனையன்றிப்பாசத்தினின்றும் துன்பங்களினின்றும் விடுதலை பெற்று வாழ்வது அரிது.

மண்ணுலகத்தில் பொருந்தி வாழும் மக்கள் அவனைத் தியானித்து வாழ்வார்களானால் அவன் அவர்களுக்குப் பிறப்பு இறப்புக்களினின்றும் விடுதலை அளித்துப் பெறற்கரும் பேற்றை வழங்குவான். அந்த வீடுபேறு வேறு அன்று. அவனே அந்தப் பேரானந்தமாக விளங்குகிறான்.

**மண் பொருந்தி வாழ்பவர்க்கும்**
**வீடுபேறாய் நின்றான்.**

வேதம் ஓதி வேள்வி புரிந்து தூய்மையே வடிவாக நிற்கும் வேதியர்கள் வேதத்தின் பொருளாகவும் வேள்வியின் பயனாகவும் இருப்பவன் இறைவனே என்று உணர்ந்தவர்கள்.

எத்தனை வேதம் ஓதினாலும் வேள்விகளைச் செய்தாலும் இறைவனிடம் அன்பு பெறாதவர்கள் வீட்டைப் பெறுவதில்லை. தாருகாவனத்து முனிவர்கள் வேதம் ஓதி வேள்விகளைப் புரிந்தார்கள். ஆனால் ஆண்டவனிடம் பக்தி செய்யவில்லை. அவனுடைய திருவருள் இல்லாமலே வேதமும் வேள்வியுமே அவர்களுக்கு இறுதியிலா இன்பத்தை நல்கும் என்று இருந்தார்கள். ஆண்டவன் அவர்கள் அகந்தையைப் போக்கி உண்மையை உணர்த்தினான். அவர்கள் வேதம் ஓதும் வேதியர்களாக இருந்தார்கள்; ஆனால் மெய்ப்பொருள் இன்னதென்று தெரிந்து கொள்ளவில்லை. மெய்யை உணரும் அகத்தூய்மை அவர்களிடம் இல்லை. அதனால் அவர்கள் வீடு பெற முடியவில்லை.

ஆனால் வேதம் ஓதி வேள்வி புரிந்து இறைவனாகிய மெய்ப்பொருளை உணர்ந்து அன்பு செய்து மனம் தூய்மையான வேதியர்களுக்கு அவன் வீடுபேறாய் நிற்பான். முடிந்த முடிபாக அடையவேண்டிய பொருள் அவனே என்பதை நன்கு உணர்ந்து தெளிந்து பக்திநெறியிலே நிற்பவர்கள் அவர்கள்.

**மாதீர்த்த வேதியர்க்கும்**
**வீடுபேறாய் நின்றானை.**

வானத்தில் பதவிகளை வகிக்கும் தேவர்கள் மக்கள் தம்மை வணங்கி நலம் பெறுவனாதல் தாமே உயர்ந்தவர்கள் என்றும் தம்மினும் சிறந்த பொருள் யாது ஒன்றும் இல்லையென்றும் எண்ணி இறுமாந்திருப்பார்கள். ஆனால் அவர்களுக்கு இடுக்கண் வரும்போது, தம் வலிமையின்மையை உணர்வார்கள். அசுரர்களின் கை ஓங்கித் தேவர்கள் நலியும்போது அந்தத் தேவர்களுக்குத் தாம் எல்லாம் வல்லவர்கள் என்று எண்ணிய எண்ணம் தவறு என்பது புலனாகும். அப்போது தம்மினும் பெரிய பரம்பொருளாகிய இறைவனிடம் ஓடிவந்து ஓலமிடுவார்கள். இறைவன் அவர்களுக்கு அபயம் தந்து அவர்களுக்கு வந்த இடுக்கண்களை நீக்குவான். அப்போதுதான் இறைவன் ஒருவனே இடும்பைகளினின்றும் தம்மை விடுவிப்பவன் என்ற

உணர்வு தோன்றும். பதவி மோகமும் வளவாழ்வில் உண்டாகிய அகந்தையும் அப்போது அடங்கி, "இவை யாவும் எம் மாத்திரம்! இறைவன் துணை இல்லாவிட்டால் நம்முடைய வாழ்வு நில்லாது" என்று உணர்வார்கள். அத்தகையவர்களுக்குத் துன்பத்தினின்றும் அவர்களை விடுவிக்கும் பெரும்பேறும் இருக்கிறான் இறைவன்.

**விண் பொருந்து தேவர்க்கும்**
**வீடுபேறாய் நின்றானை.**

மண்ணவர்க்கும் புனிதமான வேதியர்க்கும் தேவர்க்கும் வீடுபேறாய் நின்றானைப் பற்றிக் கொண்டவள் அப்பராகிய நாயகி; அவன் எழுந்தருளியிருக்கும் தலங்களுக்குச் சென்று ஆராக் காதலோடு தரிசனம் செய்து இன்புறுகிறவள்.

திருப்பழனம் என்னும் திருத்தலத்துக்கு வந்தாள் நாவுக்கரசு நாயகி, அங்கே அடியவர்கள் இறைவனைப் பாடி ஆடிக் களித்துக்கொண்டிருந்தார்கள்; பண்ணைப் பொருத்தமாக இசைத்து இறைவனுடைய இசையைப் பாடினார்கள். அவனைத் தரிசித்து அப்பருடைய கண்கள் களித்தன. கருத்தில் இன்பம் பொங்கியது. அகத்தின் அந்தரங்கத்திலே அவனுடைய திருவுருவம் பதிந்தது.

**பண் பொருந்த இசைபாடும்**
**பழனம் சேர் அப்பனை.**

பிறகு எப்போதும் அவனுடைய நினைவுதான். எங்கே பார்த்தாலும் எதைப் பார்த்தாலும் அவனுடைய கோலமே தோன்றியது, எந்தப் பணி செய்தாலும் மனத்தில் அந்தக் கோலம் சுருதிபோட்டுக் கொண்டிருந்தது. இசைவாணர்கள் எந்த ராகம் பாடினாலும், ஆரோகண அவரோகணகதியில் இசைத்தாலும், கீர்த்தனங்களைப் பாடினாலும் எல்லாம் சுருதியோடே ஒட்டிவரும். அது மாறினால் அபஸ்வரம் வந்துவிடும். மூக்கால் முனகி ராகம் பாடினாலும் வாக்கால் வெளிப்படப் பாட்டை இசைத்தாலும் எல்லாம் சுருதியோடு இழைந்தே

நிற்கும், அவ்வாறே அப்பருடைய உடம்பு எத்தொழிலைச் செய்தாலும் எவ்விடத்தில் இருந்தாலும் எந்தக் காலமாக இருந்தாலும் அவருடைய உள்ளத்தில் இறைவனுடைய நினைவு நீங்காமல் நின்றது.

பண்பொருத்தும் இசையிலே சுருதி என்றும் நில்லாமல் தொடர்ந்து இசைக்க வேண்டும். வாய்ப்பாட்டுக்காரர் பாடினாலும், பக்கவாத்தியக்காரர்கள் தனி ஆவர்த்தனம் வாசித்தாலும், யாவரும் சிறிது நேரம் சும்மா இருந்தாலும் அந்தச் சுருதி நில்லாமல் இசைத்துக் கொண்டே இருக்கும்.

திருநாவுக்கரசு நாயகிக்கு எத்தொழிலைச் செய்தாலும் ஏதவஸ்தைப்பட்டாலும் எவ்விடத்தும் எக்காலத்தும் இறையுணர்வாகிய சுருதி நிற்பதே இல்லை. அவள் கண்களை மூடி உறங்கும் பொழுதும் அது இடைவிடாமல் இருக்கும்.

**என்**
**கண் பொருந்தும் போதத்தும்**
**கைவிட நான் கடவேனோ?**

இறையுணர்வு ஒருவருக்கு உண்டாவது மிக அருமை. அது உண்டாகி வலிமை பெறப் பெற மற்ற உணர்வுகள் மெல்ல மெல்ல நழுவிவிடும். அந்த உணர்வே மீதூர்ந்து நிற்கும். அதன் முழுவலிமையையும் உடையவர்கள் பின்பு அதை விட நினைத்தாலும் விட முடியாது.

கெட்ட பழக்கம் உடையவர்கள்கூட இப்படித்தான் இருக்கிறார்கள். குடிக்கப் பழகிக் கொண்டவன் மனிதனாகையினால் அவன் அதனால் உண்டாகும் தீங்குகளை நன்கு உணர்கிறான். பழியும் பாவமும் வந்து சேர்வது அவனுக்குத் தெரிகிறது. ஆனாலும் அந்தப் பழக்கம் அவனை இறுகப் பற்றிக்கொண்டு, அவன் விட நினைத்தாலும் விடுவதில்லை. நல்ல பழக்கமும் இப்படியே இருக்கும். உறங்கும் போதாவது இறைவனை

மறந்து உறங்கலாம் என்று நினைத்தாலும், இறையுணர்வில் ஊறியவர்களுக்கு அவ்வாறு செய்ய இயலாது.

"நற்ற வாஉனை நான்ம றக்கினும்
சொல்லும்நா நமச்சி வாயவே"

என்ற **சுந்தரர்** திருவாக்கு இந்தப் பழக்கத்தின் வலிமையைக் காட்டுகிதது. நாவுக்கரசு நாயகிக்கு இது தெரிகிறது. "நான் உறங்கும்போதுகூட என் அப்பனை விட்டுவிடும் வலிமை எனக்கு உண்டா?" என்கிருள். 'கடவேனே' என்ற சொல் இந்த இயல்பை உணர்த்துகிறது.

**மண்பொருந்தி வாழ்பவர்க்கும்**
**மாதீர்த்த வேதியர்க்கும்**
**விண்பொருந்து தேவர்க்கும்**
**வீடுபேருய் நின்ருனைப்**
**பண்பொருந்த இசைபாடும்**
**பழனம்சேர் அப்பனைஎன்**
**கண்பெருந்தும் போதத்தும்**
**கைவிடநான் கடவேனே?**

*நிலவுலகத்தில் பொருந்தி வாழும் மக்களுக்கும் பெரிய தூய்மையை உடைய வேதியர்களுக்கும் வானுலகத்திலே பொருந்தி வாழும் தேவர்களுக்கும் முறையே பாசத்தினின் றும் துன்பத்தினின்றும் விடுதலைபெற்று அடையும் இன்பப் பேற்றின் வடிவாக நிலைபெற்று நிற்கும் பெருமானும், பண்கள் பொருந்தப் பக்தர்கள் இசைப்பாடல்களைப் பாடி இறைவனை ஏத்தும் திருப்பழனம் என்னும் திருத்தலத்தை அடைந்து நித்திய வாசம் செய்யும் பரமபிதாவுமாகிய சிவ பெருமானை அடியேன் கண்கள் பொருந்தி உறங்கும்போதும் விட்டுவிட்டு மறந்து நிற்க வலிமையுள்ளனவா?*

[மண் - மண்ணுலகம். பொருந்தி-இணைந்து. மா தீர்த்தம்-மிக்க புனிதம்; உள்ளத்தே உண்மையுணர்வாலும் புறத்தே நீரில் மூழ்குவதாலும் பெற்ற தூய்மை.

''புறந்தூய்மை நீரான் அமையும்; அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும்''

என்றபடி இருவகைத் தூய்மையையும் பெற்றவர்களாதலின், 'மாதீர்த்த வேதியர்' என்றார்.

நிலவுலகத்தில் வாழ்பவர்களுக்கும் வேதியர்களுக்கும் வீடு பேறுகிய முத்தியாக இருப்பவன் இறைவன். தேவர்களுக்கு அவர்கள் அடையும் இன்னல்களினின்றும் விடுதலை பெறும் சரணாலயமாக இருப்பவன். வீடுபேறு என்பதற்கு விடுதலை பெறுதல் என்பது பொருள். உலக மக்கள் இறைவனை வழி பட்டு முத்தி அடைவார்கள். தேவர்கள் மக்களாகப் பிறந்து வழிபட்டுத்தான் அதை அடைய வேண்டும். ஆகவே அவர் களுக்குரிய வீடுபேறாவது, அவர்கள் தம் இன்னல்களினின்றும் விடுபட்டு நிற்கும் நிலை.

இசை-இசைப் பாடல். பண்ணும் பாடலும் பொருந்தி நிற்க, அன்பர்கள் ஆண்டவனைப் பாடுகிறார்கள்.

''பண்என்னும் பாடற் கியைபின்றேல்''

என்று பாடுவார் **திருவள்ளுவர்.**

அத்தகைய திருப்பழனத்தில் இறைவன் திருவுள்ளம் உகந்து சேர்ந்து நித்திய வாசம் செய்கிறான். அவன் யாவர்க்கும் அப்பனாக இருப்பவன். ஒவ்வொரு பிறவியிலும் ஒவ்வொரு தந்தை இருப்பார். அவர்கள் உடம்புக்குத் தந்தைகள். இறைவனோ உயிருக்கே தந்தையாக இருப்பவன். அவனைப் பரமபிதா என்று கூறுவார்கள்.

விழித்திருக்கும்பொழுது எண்ணியிருப்பது பெரிது அன்று. கண்களை மூடி உறக்கத்தில் ஆழும்போதும் உணர்வு மறவாமல்

இருப்பது அரிது. அந்த அரிய அநுபவம் மெய்யன்பர்களுக்குக் கிட்டும். 'உறங்கும் பொழுதும் நான் விட எண்ணினாலும் விட முடியாதபடி ஒட்டிக் கிடக்கிறது, அந்த உறவு' என்கிறார் அப்பர். கடவேனோ என்பது கடமைப்படுவேனோ என்ற பொருள் தராமல், ஆற்றல் உடையவனாக இருப்பேனோ என்ற பொருளைத் தந்தது.

"இறப்பதனுக்கு என் கடவேன்"

என்ற **திருவாசக**த்தில் கடவேன் என்பது, என்ன செய்யும் வலிமையுடையேன் என்று பொருள் கொள்ள நிற்பது போல நின்றது இது.

கைவிடல் என்பது கையின் செயலைக் குறிக்காமல் விடல் என்னும் பொருட்டாய் நின்றது. ஓகாரம், எதிர்மறை; கைவிடும் ஆற்றல் இல்லேன் என்னும் பொருள் தந்தது.]

நான்காம் திருமுறையில் 5-ஆம் திருப்பதிகத்தில் உள்ள ஐந்தாம் திருப்பாட்டு இது.

# 9 அகந்தையைப் போக்கும் திருவடி

இராவணன் தன்னுடைய விமானமாகிய தேர்மீது வானத்தில் பறந்து வந்தான். உலகெங்கும் சுற்றி வந்த அவனுடைய தேர் திருக்கைலாயத்தின்மீது செல்லும் போது அதைக் கடந்து செல்ல முடியாமல் நின்றுவிட்டது. அப்போது தேரை ஓட்டிய பாகன், "இந்தக் கைலாயத்தின்மீது உன் தேர் செல்லாது. நீ எல்லா இடங்களிலும் பறந்து சென்றாய். ஏழுலகத்தையும் கடந்து செல்லும் அதி வீர பராக்கிரமம் உடையவன் நீ. என்றாலும் அந்த வீரம் இந்த இடத்தில் செல்லாது. உன்னுடைய வீரத்தை மற்ற இடங்களில் காட்டலாம். இங்கே அது பயன் தராது. அதை விட்டுவிடு. இதை உணராமல் நீ விரைந்து செல்ல எண்ணுவது முறை அன்று. எல்லா இடங்களையும்போல இதைநினைக்கக்கூடாது" என்று சொன்னான்.

இராவணன் அதைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. தேர்ப்பாகனுக்கு உண்டான அறிவு அவனுக்கு உண்டாகவில்லை. அவனுடைய மிடுக்குத் தளரவில்லை. பாகனை அவன் கோபித்துக் கொண்டான். "என் ஆணையின்படி செய்வதுதானே உன் கடமை? இந்த இடமும் பிரபஞ்சத்தில் அடங்கினதுதானே? இதைக் கடந்து போகாமல் இருந்தால் என் பெருமை என்ன ஆகும்?" என்று கோபித்தான்.

**முடுகிய தேர் செலாது கயிலாய மீது**
**கருதேல்; உன் வீரம் ஒழிநீ;**
**முடுகுவது அன்று தன்மம்; என நின்று**
**பாகன் மொழிவானை நன்று முனியா**
**விடு விடு என்று சென்று விரைவுற்று.**

தேர்ப்பாகன் அவன் சொல்லுக்கு இணங்கி அதைச் செலுத்த முயன்றான். தேர் அந்த இடத்தை விட்டுச் சிறிதளவும் நகரவில்லை. "நான் என் செய்வேன்! இந்த இடத்துக்கு மேல் தேர் அசையவில்லையே! இதிலிருந்து இந்த இடம் நம் ஆற்றலுக்கு அடங்கியதன்று என்று தெரிந்து கொள்ள வேண்டாமா? இதற்கு மேல் விடாமல் திரும்பிச் செல்வதே நன்று" என்று தேர்ப்பாகன் சொன்னான்.

இராவணனுடைய கோபம் அதிகமாயிற்று. "நீ கையாலாகாதவன். இந்த இடம் என்ன அப்படிக் கடக்க முடியாத இடம்? இதை நான் ஒருகை பார்க்கிறேன்" என்று கோபத்தோடு விமானத்தினின்றும் இறங்கினான். விடுவிடுவென்று கைலாயத்தின் அடிக்குச் சென்றான். "என்னுடைய கையால் இந்த மலையைப் பந்து போலத் தூக்கி எறிந்து விடுகிறேன், பார்" என்று வீறு பேசிக்கொண்டு சென்றான். இரண்டு கைகளால் அதை எடுக்க முயன்றான். முடியவில்லை. நாலு கைகளால் பெயர்க்கலுற்றான். கைலைமலை அணுவளவும் அசைய வில்லை. எட்டுக் கைகளால் முயன்று தூக்கலானான். அப்போதும் அந்த மலையை ஒன்றும் செய்ய முடியவில்லை. தன்னுடைய இருபது கைகளையும் மலையின் அடியிலே கொடுத்துத் தூக்க முயன்றான். மலை சிறிது அசைந்தது போல் இருந்தது. "நம்முடைய வலிமைக்கு முன் இது எம்மாத்திரம்?" என்று எண்ணினான். கைலை சிறிது இடம் கொடுக்கவே தன் கைகள் இருபதையும் அதன் அடியில் புகுத்தித் தூக்க எண்ணினான். இருபது கைகளும் கைலைமலையின் அடியிலே புகுந்தன. 'இதோ ஒரு கணத்தில் இதைத் தூக்கி எறிந்து விடுகிறேன்' என்ற மிடுக்கு இராவணனுக்கு உண்டாயிற்று. "இந்த மலை நெகிழ்ந்து விட்டது. இதன் அடியில் கைகளைப் புகுத்தி விட்டேன். இனி இதோ ஒரு கணத்தில் தூக்கி எறிந்து விடுகிறேன்" என்று எண்ணித் தூக்க முயன்றான்.

கைலைமலையின்மேல் பரமசிவனும் பார்வதியும் எழுந்தருளியிருந்தார்கள். அப்போது அம்பிகைக்கு இறைவன்மேல் சற்றே ஊடல் உண்டாயிற்று. அவன் முகத்தைப் பாராமல்

தன் முகத்தைத் திருப்பிக் கொண்டிருந்தாள். அந்தச் சமயத்தில் இராவணன் அந்த மலையின் அடியில் கை கொடுத்துத் தூக்க முயன்றபோது அது அசைந்தது. அதைக் கண்டு நடுங்கிய அம்பிகை ஓடிப்போய் இறைவனைத் தழுவிக்கொண்டாள். பொல்லாத அரக்கன் அகந்தையால் செய்த காரியம் அம்பிகையின் ஊடலைப் போக்க வழி செய்தது. அதற்காகவே இறைவன் இராவணன் செயலைத் தடுக்காமல் இருந்தான். பொல்லாதவர்களின் தீய செயல்களிலும் நல்லதைப் பெறுவார்கள், அருளுடைய பெரியோர்கள் என்ற உண்மை இதனால் தெரிய வருகிறது.

சிறிதளவு சும்மா இருந்த இறைவன், உமாதேவி அஞ்சி ஓடி வந்து தன்னை அணைத்துக் கொண்டவுடன் புன்முறுவல் பூத்தான். அம்பிகையின் ஊடல் தீர்ந்து விட்டது. இனி இராவணனுடைய அகந்தையைப் போக்க வேண்டும்.

தன் கால்விரல் ஒன்றைச் சிறிதே அழுத்தி ஊன்றினன் எம்பெருமான். ''இதோ, இந்த மலை அசைந்து எழும்புகிறது. இதைத் தூக்கி எறிந்து விடுவோம்'' என்ற தருக்கினோடு இருந்த இராவணன் கைகள் இருபதும் மலையின் அடியில் இருந்தன. எம்பெருமான் தன் கால் விரலால் அழுத்திய உடனே கைலைமலை மீண்டும் நிலத்தில் பதிந்து தன் பழைய நிலையை அடைந்தது. 'இதை இனி எடுத்து எறிதல் எளிது' என்று எண்ணியிருந்த இராவணனுடைய கைகள் இருபதும் அதன்கீழே சிக்கிக்கொண்டன. மலையின் பாரம் அந்தக் கைகளை நசுக்கின. தன் வலிமையை எல்லாம் கூட்டிக் கைகளை எடுக்கப் பார்த்தான். மலையை எடுக்காமல் போனாலும் போகட்டும் என்ற எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று.

அப்போது எப்படியாவது கைகளை விடுவித்துக் கொள்ள வேண்டுமென்று தன் தலைகளால் முட்டினன். தோள்களால் உந்தினன். அவைகளும் மலையின்கீழ் அகப்பட்டு நெரிந்தன; நெடுநெடுவென்று நசுங்கின. ஓ என்று ஓலமிட்டான் இராவணன்; பிறகு இறைவனைப் பாடி விடுதலை பெற்றான்.

அவன் கை மலையை எடுத்தபோது அவன் வலிமையையும் அகந்தையையும் அடியோடு ஒழியும்படி செய்தது இறைவனுடைய திருவடி விரல். விரலே பேராற்றலையும் அகந்தையையும் போக்கிவிடும் என்றால் அந்தத் திருவடி எவ்வளவு ஆற்றலுடையதாக இருக்கும்!

இராவணனுக்குப் பத்துத் தலை இருப்பதுபோல நமக்கும் ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும் இருக்கின்றன. ஆணவத்தில் சிக்குண்ட நாம் இந்தக் கருவிகளை நல்ல நெறியிலே பயன்படுத்துவதில்லை. இராவணனுடைய ஆற்றலையும் அகந்தையையும் அழித்த விரலையுடைய திருவடியை நினைத்தால் நம்முடைய இந்திரியங்களின் ஆற்றல் அடங்கும்; ஆணவம் அழியும். இந்திரிய வசப்பட்டு மயங்கி, ஆணவத்தால் அலைப்புண்டு, இறைவன் அருளைப்பெற முடியாமல், பிறந்தும் இறந்தும் அல்லற்படுகிறோம் நாம். நம் இந்திரியங்கள் நம்மைத் தம் வசமாக்கி இழுத்துச் செல்கின்றன. ஆணவ மலம் நம்மை விடாமல் பற்றிக் கொண்டிருக்கிறது.

இறைவனுடைய கால்விரல் ஒன்றே பத்துத்தலை இராவணனுடைய ஆற்றலையும் ஆணவத்தையும் அழித்தது என்றால், அந்தத் திருவடியையே பாதுகாப்பாகக் கொண்டால் நம்முடைய இந்திரியங்களும் மலங்களும் நம்மை என்ன செய்ய முடியும்? அந்த அரக்கனுடைய பத்து முடிகளையும் இருபது தோள்களையும் இற்று விழச் செய்தது இறைவனுடைய திருவடியின் ஒரே விரல். அவனுடைய பாதம் இரண்டையும் பற்றிக் கொண்டால் எந்தப் பகையும் நம்மை அணுகாது. பாசம் கழன்றுவிடும். ஆணவம் அழிந்துவிடும்.

'இதை உணர்ந்து அவனுடைய திருவடியை இடையறாது என் மனம் தியானித்துக் கொண்டிருக்கிறது' என்று அப்பர் சுவாமிகள் சொல்கிறார்.

**அரக்கன் வரை உற்று எடுக்க**
**முடி தோள்**

**நெடுநெடு இற்று வீழ விரல் உற்ற பாதம்**
**நினைவுற்றது என்றன் மனனே.**

பெருவரமும் பேராற்றலும் திக்கு விசயம் செய்து வென்ற செருக்கும் மிடுக்குமுடைய இராவணனுடைய ஆற்றலையும் அகந்தையையும் கால்விரல் ஒன்றே போக்கியது என்பதை உணர்ந்து, அந்தத் திருவடியையே பணிந்து பற்றி மனத்தால் தியானம் பண்ணினால் நம் உயிருக்குப் பகையாகிய எந்த ஆற்றலும் நம்மிடம் பயன்படாதொழியும் என்ற உறுதிப் பாட்டுடன் பாடுகிறார் அப்பர் சுவாமிகள்.

**கடுகிய தேர்செ லாதுகயி லாயமீதுகரு**
**தேல்உன் வீரம் ஒழிநீ;**
**முடுகுவது அன்றுதன்மம் எனநின்று**
**பாகன்மொழி வானைநன்று முனியா,**
**விடுவிடு என்றுசென்று விரைவுற் றரக்கன்வரை**
**உற்றெடுக்க, முடிதோள்**
**நெடுநெடு இற்று வீழவிரல் உற்ற பாதம்நினை**
**வுற்ற தென்றன் மனனே.**

* வேகமாக வானத்தின்மீது சென்ற இராவணனுடைய தேர் மேலே செல்லாமல் நிற்க, 'இந்தத் தேர் கைலாயத்தின் மீது செல்லாது. இதைக் கடக்கக் கருதாதே; உன் வீரத்தை நீ ஒழிவாயாக; இதற்கு மேலும் விரைந்து செல்ல எண்ணுவது முறை அன்று' என்று தேரை நிறுத்திப் பாகன் சொல்ல, அவ்வாறு சொன்னவனுடைய அறிவுரையைக் கேளாமல் அவனைக் கடுமையாகக் கோபித்துக் கொண்டு, "இதை நான் எடுத்து வீசுகிறேன் பார்" என்று அகங்காரத்தோடு விடுவிடுவென்று வேகமாகச் சென்று அவன் அந்தக் கைலையின் கீழே சென்று அதை எடுக்க முயன்ற போது, அவனுடைய பத்துத் தலைகளும் இருபது தோள்களும் நெடுநெடு என்று நசுங்கி வலியிழந்து இற்றுப்போய் விழும்படியாகச் செய்த விரலை உடைய இறைவனுடைய திருவடிகளை அடியேனுடைய மனம் என்றும் நினைந்து தியானித்தது. *

[கடுகிய-வானத்தில் வேகமாகச் சென்ற. 'கடுகிய' என்பது முதல் 'தன்மம்'என்பது வரையில் உள்ளது தேர்ப்பாகனது அறிவுரை.

'கடுகிய தேர் கயிலாய மீது செலாது; (அவ்வாறு செய்யக்) கருதேல்; உன் வீரம் ஒழி; நீ முடுகுவது தன்மம் அன்று' என்று கூட்டுக. நன்று—கடுமையாக. முனியா-கோபித்து. விடுவிடு என்றது வேகத்தைக் குறிக்கும் குறிப்பு. விரைவுற்றுச் சென்று. நெடுநெடு என்றது ஒலிக்குறிப்பு. வீழும்படியாக விரலைக் கொண்ட பாதம். 'ஒரு விரலே இந்தப் பெரிய செயலைச் செய்யுமெனின் இரண்டு திருவடிகளையும் பற்றிக் கொண்ட அடியேனை இந்திரியங்கள் என் செய்யும்? ஆணவம் என் செய்யும்?' என்பது குறிப்பு.]

இறைவன் திருவடிகளைத் தியானம் செய்து பற்றிக் கொண்டவர்களுக்கு இந்திரியங்களாலும் ஆணவத்தாலும் தீங்கு வராது என்பது கருத்து.

இது நான்காம் திருமுறையில் பதினான்காம் பதிகத்தில் உள்ள பதினோராவது திருப்பாட்டு.

# 10. மெய்ந்நின்றவர்க்கு மெய்யர்

இறைவன் என்று ஒருவன் இருக்கிருனு? அப்படி இருந்தால் எல்லோரும் அவனைத் தெரிந்து கொண்டிருக்க வேண்டுமே! எல்லாருக்கும் பொதுவாகத் தோன்றி வெயில் வீசும் கதிரவனைக் காணுதார் யார்? கண் இல்லாதவர்களும் அவனுடைய கிரணங்களின் வெம்மையை உணர்வார்களே! அப்படி இருக்க, எல்லாரினும் மேம்பட்டவனும் எல்லாருக்கும் பொதுவானவனும் எல்லாச் செயல்களுக்கும் காரண பூதனுமாக நிற்பவன் யாவருக்கும் விளங்காதவனுக, சிலரே அவன் இருக்கிருன் என்று சொல்லும் நிலையை உடையவனுக இருப்பது பொருந்துமா?

இயற்கை என்ற நியதி ஒன்று இருக்கின்றது. அதுவே எல்லாச் செயல்களையும் நிகழ்த்துகிறது. மனிதன் பிறப்பதும் வாழ்வதும் சாவதும் அந்த இயற்கையின் நியதியே. வித்திலிருந்து மரம் முளைப்பதும் அந்த மரம் மீண்டும் பல வித்துக்களை உண்டாக்குவதும் இயற்கையின் நியதியே.

இவ்வாறு வாதிப்பவர்கள் பலர் இருக்கிருர்கள். எல்லாரையும் இயக்கும் ஒருவன் யாவருக்கும் புலப்படுபவனுக இருக்கவேண்டும் என்பது அவர்கள் வாதம்.

நம்முடைய உடலில் இரத்த ஓட்டம் நிகழ்கிறது. இதயத்திலிருந்து இரத்தம் எங்கும் பரவுகிறது. சில சமயங்களில் சிலருக்கு இதய நோய் வருகிறது. இதயம் அவருக்கே உரியதானுலும் அதன் செயல் முறைகள் அவருக்குத் தெரிவதில்லை. இதய நோய் வந்தால் மருத்துவரிடம் ஓடுகிருர். அவர் பரிசோதித்து இன்ன குறை என்று சொல்கிருர்.

நம் இதயத்தின் குறையோ, முறையோ நமக்கே தெரிவதில்லை. நம் பெட்டியில் நாம் பல பொருள்களை வைக்கிறேம்;

எடுக்கிறோம். அதில் என்ன வைத்திருக்கிறோம் என்று நமக்கு நன்றாகத் தெரியும். ஆனால் இந்த இதயம் நம்முடையதாக இருக்கும்போது இதன் நிறைகுறைகள் நமக்குத் தெரிவதில்லை. நமக்கே உரிய இதயமாக இருந்தாலும் இதன் செயற்பாடுகளை அறியும் உணர்வு நமக்கு இருப்பதில்லை.

இனி, பொதுவாக எல்லாருக்கும் உரிய சிலவற்றைப் பார்க்கலாம். நாம் குறிப்பிட்ட காலத்தில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் வாழ்கிறோம். அந்தக் காலமும் இடமும் நமக்கு நன்றாகப் புலனாகின்றன. ஆனால் அந்தக் காலம் எப்போது தோன்றிற்று? காலத்தின் முதல் நாள் எது? நமக்குத் தெரிகிறதா? தெரியவில்லை. நாம் வாழும் இடம் விரிந்த பிரபஞ்சத்தில் ஏதோ சிறிய புள்ளி போல இருக்கிறது. நமக்கு அந்த இடத்தின் பரப்பு முழுவதும் தெரிவதில்லை. இப்படி நம் உணர்வுக்கு அகப்படும் காலம், இடம் என்பனவற்றின் எல்லையையே நாம் உணர முடிவதில்லை. நமக்கு உரிய இதயத்தின் இயல்பை உணர முடிவதில்லை. பல சமயங்களில் மருத்துவர்களின் சோதனைக்கும் அகப்படுவதில்லை. ஏதோ ஒன்று இவற்றையெல்லாம் இயக்குகிறது என்பது மட்டும் தெரிகிறது. அந்த நியதியையே இயற்கையென்று சிலர் சொல்கிறார்கள்.

இயற்கை என்றவுடன் எல்லாவற்றையும் இயக்கும் நியதியை மாத்திரமா நாம் எண்ணுகிறோம்? புல், பூண்டு, பறவை, விலங்கு, மனிதன் ஆகிய எல்லாச் சீவவர்க்கங்களும் அந்த நியதியின் வரம்புக்குள் இருந்து தொழிற்படுகின்றன.

எதை இயற்கையென்று சொல்கிறார்களோ, அதன் இயல்பை இன்னதுதான் என்று வரையறுத்துச் சொல்ல முடிவதில்லை. இதுதான் இயற்கை, இப்படித்தான் நடைபெறும் என்று திட்டமாகச் சொல்ல முடிவதில்லை. மனிதன் பிறந்து வாழ்ந்து மூப்படைந்து இறப்பது இயற்கையென்று வைத்துக் கொள்வோம். ஆனால் சில குழந்தைகள் செத்துப் பிறக்கின்றன; சில பிறந்தவுடன் இறக்கின்றன; சில காலம் வாழ்ந்து இறந்து விடுகின்றன. இவை யாவும் இயற்கையின் வேறு

பாடுகள் என்று சொல்லலாம், காலமோ இடமோ இன்ன தன்மையதுதான் என்று சொல்லமுடிவதில்லை. இவ்வாறு நமக்குள் இருக்கும் இதயத்தையும் நமக்குப் புறம்பே இருக்கும் இயற்கையையும் இத்தகையவைதாம் என்று நம்மால் வரையறுக்க முடிவதில்லை. நம் இதயத்திலுள்ள குறைபாடுகளை இதய ஆராய்ச்சி நிபுணரிடம் சென்று காட்டித் தெரிந்துகொள்கிறோம்.

இவ்வாறே, நாம் அறியாத பலவற்றைத் தாம் அறிந்து சொல்லும் நிபுணர்கள் இருக்கிறார்கள். உலக நியதியையும் அதை நிகழ்த்துகின்ற ஒரு மாபெரும் சக்தியையும் அவர்கள் அறிந்துகொண்டிருக்கிறார்கள். அவர்களையே நாம் ஞானிகள் என்று சொல்கிறோம். அவர்கள், இறைவன் என்பவனே எல்லாவற்றையும் இயக்கும் மாபெரும் சக்தி என்று அறிகிறார்கள்; நமக்கும் அறிவிக்கிறார்கள். அவனைப் பற்றிய உணர்வு உண்டாகவேண்டுமானால் அதற்காக முயற்சி செய்ய வேண்டும். நிலையாத பொருள்களே நிரம்பிய உலகத்தில் எது நிலைபெற்றது, எது நிலையற்றது என்று தெரிந்து கொள்ள முயல வேண்டும். இந்த ஆராய்ச்சியில் புகுந்தால் மெல்ல மெல்லப் பொய்யெல்லாம் நழுவிப் போக மெய் புலனாகும்.

அந்த மெய்யான பொருள் பேராற்றல் உடையது; எல்லாவற்றையும் இயக்குவது; தன் அன்பர்களுக்கு வடிவம் காட்டி உள்நின்று ஒளிர்வது.

அந்தப்பொருளையே தம்முடைய சாதனைக்கு ஏற்ப உள்ளே கண்டு உணர்ந்து அநுபவிக்கிறார்கள், மெய்யன்பர்கள். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகையில் அந்தப் பொருள் தோற்றம் அளிக்கிறது. அந்தப் பொருளின் அருள் ஆட்சிக்குள் அகப்பட்டவர்கள் வெவ்வேறு வகையில் சாதனை செய்யப் புகுந்தவர்களானாலும் முடிவில் அடைகின்ற இன்ப அநுபவம் ஒன்றுதான்.

ஆற்றிலுள்ள நீரைக் குடித்தாலும் குளத்திலுள்ள நீரைக் குடித்தாலும் குடத்தில் உள்ளதைப் பருகினாலும் தாகம் தீர்வது என்பது பொதுவான அநுபவம்.

இறைவன் அவ்வாறே வெவ்வேறு அன்பர்களுக்கு வெவ் வேறு நிலையில் தோற்றமளித்து அருள் புரிகிறான். ஒருவருக் குச் சிவபெருமானாக வந்தருளுவான்; மற்றொருவருக்குத் திருமாலாக வந்து அருள்புரிவான்.

ஒரே ஆற்றிலிருந்து பலர் தண்ணீர் கொண்டு வந்து வீட்டில் வைக்கிறார்கள். குடத்திலும் பானையிலும் கூஜாவிலும் கிண்ணத்திலும் அந்த நீரை நிரப்புகிறார்கள். கூஜாத்தண்ணீ ரைக் குடிக்கிறவன் அதைக் கூஜாத் தண்ணீர் என்பான். பானை நீரைப் பருகிறவன் அதைப் பானைத் தண்ணீர் என் பான். இருக்கும் பாத்திரங்கள் வேறுபடுகின்றனவேயன்றி நீர் வேறுபடுவதில்லை. அவ்வாறே சிவபெருமான் என்றாலும் திருமால் என்றாலும் வேறு வகையில் சொன்னாலும் பரம் பொருள் ஒன்றுதான். அதன் வடிவத்தைக் கண்டு, இது வேறு, அது வேறு என்பவர்கள் மெய்ப்பொருளை உணராதவர்கள்.

அப்பர் சுவாமிகள் அந்தப் பரம்பொருளைச் சிவபெரு மானாகக் கண்டு அருள் பெற்றவர். அவருக்குப் பரம்பொருள் என்றால் சிவபெருமானே நினைவுக்கு வருகிறார். பானைத் தண்ணீரைக் குடித்தே பழகியவனுக்குத் தண்ணீரை நினைக் கும்போதெல்லாம் பானையே நினைவுக்கு வருவது போல, உபாசகர்கள் பரம்பொருள் என்றால் தாம் வழிபடும் கடவுள் வடிவத்தையே நினைப்பார்கள்.

திருநாவுக்கரசர் தாம் உணர்ந்த பரம்பொருளின் வடிவத் தைச் சொல்கிறார். அவர் பரம்பொருளைச் சிவபெருமானைக் கண்டவர். பரம்பொருள் எப்படி இருக்கும் என்று அவரைக் கேட்டால் தாம் தரிசித்த வடிவத்தையே அடையாளம் காட்டு கிறார்.

அந்தப் பரம்பொருள் அவருக்கு எவ்வாறு காட்சி அளித்தது? அவர் சொல்வதைக் கேட்கலாம்.

சிவபெருமானுகக் காட்சி அளித்த அந்தப் பரம்பொருள் ஒரே சிவப்பு நிறம் படைத்தது.

**செய்யர்.**

அந்த வடிவத்தின் திருமார்பில் வெண்ணூல் இலங்கு கிறது.

**வெண்ணூலர்.**

அவர் தம் திருக்கரத்தில் கரிய மான்குட்டியை ஏந்தியிருக் கிருர். அது துள்ளிக் கொண்டு காட்சி அளிக்கிறது.

**கருமான் மறி துள்ளும் கையர்.**

வெண்ணூலைச் சொன்னவுடன் அதற்கு மாருகக் கருநிறம் கொண்ட மான்மறி நினைவுக்கு வருகிறது. இரண்டுக்கும் பளிச்சென்று வேறுபாடு தெரியும் அல்லவா?

அந்த வடிவத்தின் கையைப் பார்த்தவர் பிறகு தாம் புகல் புகுவதற்குரிய திருவடியைக் காண்கிருர். பல வீரச் செயல்களைப் புரிந்த அந்தத் திருவடியில் அதற்கு அடையாள மாக ஒலிக்கும் வீரக்கழல் தோன்றுகிறது.

**கனை கழல் கட்டிய காலினர்.**

இப்படித் தோற்றம் அளிக்கிறவர் அந்தத் தோற்றம் மறைந்தால் அவரும் மறைந்து விடுவாரா? மனிதன் உடம்பு போனல் மறைவது போல மறைவாரா? இல்லை. அவர் என்றும் உள்ள பொருள். நாம் காணும் பிரபஞ்சப் பொருள்கள் நிலையில்லாமல் மறைந்து போகின்றன. யாவும் மறைந்து

அழிந்தாலும் அந்தப் பரம்பொருளாகிய சிவபெருமான் மறைவதில்லை, அழிவதில்லை. எல்லாம் அழிந்து போனாலும் தாம் அழியாமல் நிலைத்து நிற்கும் மெய்ப்பொருள் அவர்.

**மெய்யர்.**

இது யாருக்குத் தெரியும்? எது உண்மை என்று ஆராய்ச்சி செய்பவர்களுக்கு இது புலனாகும். உடம்போடு உலாவும் மனிதன் இறந்தால் அந்த உடம்பு அழிகிறது. இப்படியே ஒரு காலத்தில் பிரபஞ்சம் முழுவதும் அழிந்து விடும். ஆனால் யாவும் அழிந்தாலும் தான் அழியாமல் நிற்பது அந்தப் பரம்பொருள்தான். உண்மையை ஆராயப் புகுந்து அந்த நெறியில் நின்றவர்களுக்கு இந்தக் கருத்துப் புலனாகும்.

**மெய்யர் மெய்ந்நின்றவர்க்கு.**

கண்ணால் காணமுடியாவிட்டாலும் காற்றை நாம் உணர முடிகிறது. ஒலியைக் கேட்க முடிகிறது. ஒரு பொறிக்குத் தெரியாவிட்டாலும் மற்றொரு பொறிக்குத் தட்டுப்படும் பொருள்கள் உண்டு. மணத்தைக் கண்ணோ காதோ உணர முடிவதில்லை, ஆனால் நாசி உணர்கிறது. இவ்வாறே பஞ்சேந்திரியங்களுக்கு அப்பாற்பட்டதை மனத்தால் நினைக்க முடிகிறது. மனத்தால் உணரமுடியாததை மெய்ஞ்ஞானத்தால் உணரமுடியும். மெய்ந்நெறியில் நின்று ஞானம் பெற்றவர்களுக்கு அந்தப் பரம்பொருளின் உண்மை புலனாகும்.

**மெய்யர் மெய்ந்நின்றவர்க்கு.**

மற்றவர்கள் இதை நம்புவதில்லை. கடலைப் பார்க்காதவனுக்குக் கப்பல் கடலில் செல்லும் என்பது தெரியாது. பார்த்தவனுக்குத் தெரியும். அவ்வாறு உண்மையை உணரப்புகும் ஆராய்ச்சியில் தலைப்பட்டு அந்தமெய்ந்நெறியில் நிலைபெற்று நின்றவர்க்குப் பரம்பொருள் சத்தியமானது என்று

உண்மை புலனுகும். அல்லாதவர்களுக்கு இது தெரியாது. உணவை உண்ணப்புகுவாருக்கு அதன் சுவை தெரிவது போலச் சத்தியத்தைத் தேடி ஆராய்ச்சி செய்பவர்களுக்கு, சன்மார்க்கத்தில் நிற்பவர்களுக்கு, அந்தப் பரம்பொருள் உண்மையானது, நிலையானது என்பது புலனுகும். அல்லாதவர்களுக்கு அது பொய் என்றே தோன்றும். மலையைப் பாராதவனுக்கு அது வானுற ஓங்கி நிற்பது விளங்காதது போல மெய்ந்நெறியில் நின்று தேடப்புகுபவர்கள் அல்லாதவர்களுக்கு அந்தப் பரம்பொருள் இல்லாததென்றே தோன்றும்.

சிறிய கல்லைக் குளத்தில் போட்டால் அது உடனே உள்ளே ஆழ்ந்துவிடும். பெரிய கல் ஒன்று குளத்தின்மேல் மிதக்கிறது என்று சொன்னல் யாரும் நம்பமாட்டார்கள். அந்தக் கல்லை மிதக்கும் கட்டையின்மேல் வைத்துக் குளத்தில் இட்டால் அது கட்டையோடு சேர்ந்ததனல் நீரில் ஆழாமல் இருக்கும். மெய்ந்நெறியாகிய கட்டையில் சேர்ந்த அறிவு அறியாமை யென்னும் குளத்தில் ஆழாது. பரம்பொருள் மெய்ந்நெறியில் நின்றவர்களுக்கு மெய்யாகத்தெரிவதுபோல, அல்லாதவர்க்குப் பொய்யாகவே இருக்கும். கண் இல்லாத குருடனுக்குக் காட்சிப் பொருள் தெரியாதது போல அக்கண் இல்லாதவர்களுக்கு மெய்ப்பொருள் தெரியாது. அதைப் பற்றிச் சொன்னல் அது பொய் என்றுதான் சொல்வான். மெய்ந்நெறியில் நில்லாதவர்களுக்குப் பரம்பொருள் பொய் யென்றே தோன்றும்.

**அல்லாதவர்க்கு என்றும் பொய்யர்.**

இந்த எண்ணம் திருப்புகலூர் இறைவனைத் தரிசித்த அப்பருக்குத் தோன்றுகிறது. புரிகளாக விரிந்த சடையை உடையவராக விளங்கும் புகலூர்ப் பெருமானைப் பரம்பொருளாகவே பார்க்கிருர். பானையில் உள்ள நீரைப் பார்ப்பவனும் உண்டு. பானையைப் பார்ப்பவனும் உண்டு. நீரைப்பார்ப்பவனே தாகத்தைத் தீர்த்துக் கொள்ள முயல்வான். திருப்புகலூரில் புரிந்த

சடை உடையவராக எழுந்தருளியிருக்கும் இறைவர் வடிவத்தில் மெய்ப்பொருளாகிய நித்தியமான கடவுளையே கண்டவர் அப்பர். ஆகவே அவர்,

**மெய்யர் மெய்ந்நின்றவர்க்கு;**
**அல்லாதவர்க்கு என்றும்**
**பொய்யர், புகலூர்ப் புரிசடையாரே**

என்று பாடுகிறார். புரிசடையாராகத் தோற்றம் கொண்டு புகலூர் என்னும் தலத்தில் எழுந்தருளியிருப்பவர் எங்கும் நிறைந்த மெய்ப் பொருளே என்ற உணர்வு அவருக்கு உண்டாகி விடுகிறது. பானை நீரைக் குடிப்பவன் அது ஆற்று நீர் என்ற எண்ணம் கொள்வதைப் போன்ற உணர்வு அது.

**செய்யர் வெண்ணூலர், கருமான் மறிதுள்ளும்**
**கையர், கனைகழல் கட்டிய காலினர்,**
**மெய்யர் மெய்ந்நின்றவர்க்கு; அல்லாதவர்க்கு என்றும்**
**பொய்யர் புகலூர்ப் புரிசடை யாரே.**

*திருப்புகலூரில் புரிந்த சடையுடன் கோலங்காட்டி எழுந்தருளியிருக்கும் சிவபெருமான், செம்மேனி உடையவர்; வெண்மையான முப்புரி நூலை அணிந்தவர்; கரிய மான் குட்டி துள்ளும் திருக்கரத்தை உடையவர்; ஒலிக்கின்ற வீரக்கழலைக் கட்டிய திருவடியை உடையவர்; மெய்யை ஆராய்ந்து செல்லும் நெறியில் நின்றவர்க்கு மெய்ப்பொருளாக இருப்பவர்; அவ்வாறு இல்லாமல் கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்றுள்ளவர்களுக்கு என்றும் அறியப்படாத மெய்ப்பொருளாக இருப்பவர்.*

[செய்யர் : இறைவர் செம்பவளத் திருமேனியுடையவர்; "சிவனெ னும்பெயர் தனக்கே உரியசெம் மேனியெம்மான்" என்பது **தேவாரம்**. சிவபெருமானை அந்தணன் என்று சொல்வதனால் அதற்குரிய அடையாளமாகிய வெண்மையான முப்புரி நூலை அணிந்திருக்கிறார்.

தாருகாவனத்து முனிவர்கள் விட்ட கரிய மானைப் பிடித்துத் தம் கையில் ஏந்திக்கொண்டிருக்கிறார். அது முன் கால்கள் இரண்டையும் தூக்கிக் கொண்டு துள்ளுகிறது. அதனால், 'மறி துள்ளும் கையர்' என்கிறார். நம்முடைய மனமாகிய மான் பிரபஞ்ச வாசனையில் அகப்பட்டுத் துள்ளிக்கொண்டிருக்கிறது. அது இறைவன் வசப்பட்டுவிட்டால் அது துள்ளினாலும் அவனுடைய தொடர்பு அருமலே இருக்கும் என்பதை இது புலப்படுத்துகிறது.

கனை கழல்-ஒலிக்கும் வீரகண்டை. வீரர்கள் தம் வீரச் செயல்களுக்கு அறிகுறியாக முழங்காலுக்குக் கீழே கழலை அணிவார்கள். சிவபெருமான் பல வீரச்செயல்கள் புரிந்தவராதலின், கனை கழல் கட்டிய காலினராக இருக்கிறார். மெய்ந்நின்றவர்க்கே என்ற ஏகாரம் தொக்கது. அல்லாதவர் - மெய்ந்நெறியில் நில்லாதவர்கள்; பொய்ந்நெறியில் செல்கிறவர்கள். ''பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி'' என்பது **திருவாசகம்**. புகலூர்ப் புரிசடையார்: எழுவாய்.]

அப்பர் சுவாமிகள் பாடிய இந்தத் திருப்பாடல் நான்காம் திருமுறையில் 16-ஆவது பதிகத்தில் உள்ள முதற் பாடல்.

# 11. மன ஆலயம்

திருவாரூர்த் திருக்கோயிலில் அரநெறி என்று தனியே ஒரு சந்நிதி உண்டு. திருவாரூர் அரநெறி என்று அதைச் சொல்வார்கள். அப்பர் சுவாமிகள் அந்தச் சந்நிதி சென்று தரிசனம் செய்தார். சிவ பெருமான் பல தலங்களில் எழுந் தருளியுள்ளார். என்ருலும் அவருக்கு உகந்த சிறந்த ஆலயம் ஒன்று உண்டு. அது இன்னதென்று சொல்ல வருகிருர் திரு நாவுக்கரசர்.

ஆருர் அரநெறியாரை அடையாளம் காட்டுகிருர் அப்பர் சுவாமிகள். அவரை அணுகும் போதே அவர் திருமுடியின் மேல் அணிந்துள்ள பிறை அவரை இனம் கண்டு கொள்ளச் செய்கிறது. அது வெள்ளை வெளேரென்று பால் போன்ற நிலாவை வீசுகிறது. அதையே அவர் குறுங்கண்ணியைப் போல் திருமுடிமேல் அணிந்திருக்கிருர். கண்ணி யென்பது அரசர்களும் தலைவர்களும் அடையாளமாகச் சூடும் சிறு மாலை. இறைவர் குளிர்ந்த வெள்ளைப் பிறையையே கண்ணியாகப் புனைந்துள்ளார்.

மார்பில் அணிவது மாலை. இறைவர் கொன்றை மாலையை அணிந்திருக்கிருர். அது பொன்னிறமாகிய பசுமஞ்சள் நிறத் தோடு ஒளிர்கிறது. இந்த அடையாளத்தை முதலில் சொல்கிருர்.

**பாலை நகு பனி வெண்மதி பைங்கொன்றை**
**மாலையும் கண்ணியும் ஆவன.**

[பாலைப் போல விளங்கும் குளிர்ச்சியையுடைய வெள்ளைப் பிறையும் மஞ்சள் நிறம் பெற்ற கொன்றையும் கண்ணியா கவும் மாலையாகவும் அவருக்கு ஆவன.

நகு : உவம உருபு; பாலின் வெண்ணிறத்தைப் பழித்து அதனினும் வெண்மையாகத் தோற்றும் மதி என்றும் பொருள் கொள்ளலாம். வெண்மதி கண்ணியாகவும், கொன்றை மாலை யாகவும் ஆவன என்று எதிர் நிரல் நிறையாகக் கொள்ள வேண்டும். பசுமை மஞ்சள் நிறத்துக்கும் ஆதலின் பைங் கொன்றை என்றார், பசும்பொன் என்பது போல.]

அடியார்கள் அந்தப் பெருமானை வணங்குகிறார்கள், அப் பெருமானுடைய செம்மையான திருவடிகளைக் காலையில் எழுந்தவுடன் தொழுகிறார்கள்; தமக்குரிய பணிகளை யெல்லாம் செய்துவிட்டுப் படுக்கப் போவதற்குமுன் இரவில் அப்பெருமானைக் கைதொழுகிறார்கள்.

ஒரு நாளின் இரண்டு எல்லைகள் காலையும் மாலையும். இடையிலே எந்தப் பணிகள் ஆற்றினாலும் நாளின் தொடக்க மாகிய காலையிலும் இறுதியாகிய மாலையிலும் ஆரூர் அரநெறி யாரைக் கைதொழுது வாழ்கிறார்கள், அடியார்கள். உள் மனத்தில் இறைவருடைய நினைவு இருந்தால்தான் காலையில் எழுந்தவுடன் அவரை நினைக்க இயலும். அத்தகைய தொண் டர்கள், எத்தொழிலைச் செய்தாலும் அடிமனத்தில் இறை வருடைய நினைவே தங்கி நிற்கும்; தொழிலொழிந்த மாலையில் மேலே மிதந்து வரும். அந்த நினைவோடே உறங்கச் செல்வார்கள். அந்தப் பழக்கத்தால் காலையில் உறக்கம் நீங்கி எழுந்தவுடன் அந்த நினைவு தோன்றும்.

பல பல பணிகளில் ஈடுபட்டு அவற்றில் மனத்தைச் செலுத்தி உலகியலில் அகப்பட்டு உழல்பவர்களுக்கு இவ்வாறு இருத்தல் இயலாத காரியம். இறைவர் சேவடியை மனம் என்னும் கோயிலுக்குள் இருத்தி வைப்பவர்களுக்கு இது சாத்தியம். திருக்கோயிலுக்குள் எழுந்தருளியிருப்பது போல அடியவர்களின் நெஞ்சமாகிய கோயிலுக்குள் இறைவர் நிலை யாக நிற்கிறார்.

பணிகள் ஒழிந்து பிற நினைவின்றி இருக்கும்போது அப் பெருமானுடைய காட்சி அகக்கண்ணிலே தோன்றும்.

புதையலிலே கிடைத்த பொன்னை வீட்டினுள் பாதுகாத்து வைத்திருப்பவன் காலையில் எழுந்தவுடன் அதைப் பார்ப்பான். பிறகு புறத்தே சென்று தன் தொழிலைக் கவனித்துவிட்டு வீட்டுக்கு வந்து உறங்கச் செல்லும் போதும் அதை ஒரு முறை பார்த்து மகிழ்வான். வெளியில் பணிகளை ஆற்றும் போதும் அவன் அகமனத்தில் அதன் நினைவு இருந்து கொண்டே இருக்கும். கண்ணினால் பார்த்துக் கையினால் எடுத்து மகிழ்வது காலையிலும் மாலையிலும் ஆனாலும், அவனுக்கு எப்போதும் அந்த நினைவே இருக்கும்.

மற்றோர் உதாரணத்தைப் பார்க்கலாம். பெரிய குடும்பத்தில் சுற்றத்தார் பலரோடு ஒரு பெண் வாழ்கிறாள். அவளுக்கு எப்போதும் ஏதாவது வேலை இருந்துகொண்டே இருக்கும். தன் கணவனை அவள் இரவிலேதான் சந்திக்க முடியும். அவள் படுக்கப் போகும்போது அவனைக் காதலுடன் விழியால் கண்டு இன்புறுகிறாள். அவன் உறங்கிய பிறகே உறங்குகிறாள். விடியற்காலையில் அவன் எழுவதற்கு முன்னே எழுந்துவிடுகிறாள்.

''பின்தூங்கி முன்எழும் பேதை''

என்று திருவள்ளுவர் சொல்வது போல இருப்பவள் அவள். அப்படி எழும்போது தன் கணவன் முகத்தைக் கண்டு மகிழ்ந்து பின் தன் வேலையைக் கவனிக்க முனைகிறாள்.

தன் கணவனை இரவிலே கண்டு இன்புற்று விடியற்காலத்தில் அவன் முகத்தைத் தரிசித்துத் தன் பணிகளைச் செய்யப் புகும் அவளுக்கு இடையிலே எப்போதும் அவனுடைய காட்சி அகமனத்தில் இருந்து கொண்டேஇருக்கும்.

அடியவர்களும் இறைவரை மெய்யினால் தொழும் நேரம் காலையும் மாலையுமே என்றாலும் அவர்கள் எக்காலத்திலும் அவர் திருவடிகளையே உள்ளத்தே நினைத்துக் கொண்டிருப்பார்கள்.

**சேவடி**

**காலையும் மாலையும் கைதொழுவார் மனம்**
**ஆலயம் ஆரூர் அரநெறியார்க்கே.**

ஆலயத்தில் பிறர் புகுந்து தரிசனம் செய்யும்படி அது திறந்திருந்தாலும், இரவிலும் வேறு சில நேரங்களிலும் அது சாத்தியிருந்தாலும் அந்த ஆலயத்தில் எப்போதும் எழுந்தருளியிருக்கிருர் இறைவர். சில அதிகாரிகள் தம்மைப் பிறர் காணவரும் நேரம் இதுவென்று வரையறை செய்துகொண்டு அந்த நேரத்தில் மட்டும் அலுவலகத்துக்கு வந்து காட்சி கொடுப்பார்கள். அவ்வாறின்றி எந்த நேரத்திலும் தன் அவையையே பணி நிலையம் ஆக்கிக்கொண்டு யார் எப்போது வந்தாலும் குறை நிறைகளைக் கேட்கும் செங்கோல் அரசனைப் போல அரநெறியார் இருக்கிருர். அவர் திருக்கோயில் கொண்டிருக்கும் அரநெறியிலே எல்லாச் சமயங்களிலும் அவரைத் தரிசனம் செய்ய முடியாது. ஆனுல் அந்த அரநெறியாருக்கு மற்ருேர் ஆலயம் இருக்கிறது. அதுதான் 'காலையும் மாலையும் கை தொழுவார் மனம்'. அந்த ஆலயத்தில் அவர் எப்போதும் காட்சி தருவார். அத்தகைய ஆலயத்தை உடையவர்கள் அவரைச் சதா கண்டுகொண் டிருப்பார்கள். அந்த மனக் கோயிலே அவருக்கு எல்லாக் கோயில்களிலும் சிறந்த ஆலயம். மனம் என்னும் கருப்பக்கிருகத்தில் இறைவரை நிலைபெறச் செய்த பெருங்கோயில் அடியாருடைய திருமேனி, "நினைப்பவர் மனம் கோயிலாக் கொள்பவன்" என்று பிறிதோரிடத்தில் அப்பர் சுவாமிகள் பாடுவார்.

**பாலை நகுபனி வெண்மதி பைங்கொன்றை**
**மாலையும் கண்ணியும் ஆவன ; சேவடி**
**காலையும் மாலையும் கைதொழு வார்மனம்**
**ஆலயம், ஆரூர் அரநெறி யார்க்கே.**

* திருவாரூர் அரநெறியில் எழுந்தருளியிருக்கும் மகாதேவருக்குப் பாலைப் போன்ற குளிர்ந்த வெண்மையான பிறையும், மஞ்சள் நிறம் பெற்ற கொன்றையும் கண்ணியும்

மாலையுமாக விளங்குவன; அவருடைய செம்மையான திருவடிகளைக் காலையில் எழுந்தவுடனும் மாலையில் உறங்குவதற்குமுன்னும் கை தொழுது தியானிப்பவர் மனமே சிறந்த ஆலயம் ஆகும். *

[பால் நிலவுக்கு உவமை. கண்ணி—அடையாள மாலை; ''கண்ணி கார் நறுங் கொன்றை'' என்பது **அகநானூறு**. கையினல் தொழுவது காலையிலும் மாலையிலும் ஆனலும் மனம் எந்த நேரமும் அவரையே நினைக்கும். கை தொழும்பொழுது அதனைப் பிறரும் பார்க்கலாம். ஆனல் எந்த நேரத்திலும் நினைப்பதை அந்த நிலையை உணர்ந்தவர்களே தெளிவார்கள். அப்பர் சுவாமிகள் அந்த நிலையில் நிற்பவர்; ஆகவே தம்மையொத்த அன்பர்களின் இயல்பையும் உணர்ந்தவர். ஏகாரம், ஈற்றசை.

இவ்வாறு உறங்குவதற்கு முன்னும் கைதொழுது, விழிக்கும்பொழுதும்கைதொழுதுவாழும் அடியவர்கள் நீண்ட உறக்கமாகிய மரணம் நேரும்போது இறைவருடைய நினைவோடே இருப்பார்கள். அவர்கள் பிறக்க நேர்ந்தால் அப்போதும் அந்த நினைவு அவர்களிடம் தொடர்ந்து வரும்.

''உறங்கு வதுபோலும் சாக்காடு; உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு''

என்பது குறள்.]

நான்காம் திருமுறையில் பதினேழாம் திருப்பதிகத்தில் எட்டாவது பாட்டாக விளங்குவது இது.

# 12. அஞ்சுடராய் நின்ருன்

இறைவனை எண்ணி வாழும் அன்பர்கள் உடம்பாலும் உள்ளத்தாலும் தூயவர்களாக இருப்பார்கள். அவர்கள் நெஞ்சில் வஞ்சனை என்பது சிறிதும் இராது. உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசும் வஞ்சனையுள்ளவர்கள் தொழுதால் அவர்களுக்கு இறைவன் தன் உருவத்தைக் காட்டமாட்டான்; அவர்கள் எவ்வளவு தவம் செய்தாலும் தலதரிசனம் செய்து வழிபட்டாலும் மக்களை வஞ்சிக்கும் எண்ணம் உள்ளவரைக்கும் அவர்களை அணுக மாட்டான்.

**வஞ்சனையார் ஆர்பாடும் சாராத மைந்தனை.**

[மைந்தன்—வலிமை உடையவன்.]

இப்படிச் சொன்னதனுல், வஞ்சனை இல்லாத தூய நெஞ்சுடைய அன்பர்களிடத்தில் அவன் சார்ந்து அருள் புரிவான் என்பது தெளிவாகிறது. "உள்ளொன்று வைத்துப் புறம்பு ஒன்று பேசுவார் உறவுகல வாமை வேண்டும்" என்று **அருட் பிரகாச வள்ளலார்** வேண்டுவார்.

அந்தப் பெருமான் யாவரும் உறக்கத்தில் ஆழ்ந்திருக்கும் நள்ளிரவில் நடனம் புரிவான். உயிர்களெல்லாம் அமைதி யோடு உறங்கும் இருளில் அவன் உறங்காமல் களிக்கூத்தாடுவான். தன் மனத்தே அவனை வைத்துத் தியானம் செய்யும் மெய்யன்பர்கள் இரவிலும் உறங்காமல் விழித்திருப்பார்கள். தனித்திரு, பசித்திரு, விழித்திரு என்று தவம் செய்யும் முறையைக் கூறுவார்கள். பெரிய குடும்பத்தில் உள்ள ஒரு பெண் எல்லா வேலைகளையும் செய்துவிட்டு, யாவரும் உறங்கும் வேளையில் தன் கணவனை நாடிச் சென்று அணைந்து இன்புறுவது போல, தவம் செய்யும் யோகியர்கள்

விழித்திருந்து நள்ளிரவில் அவனுடைய தரிசனத்தைப் பெறு வார்கள். அப்போது ஆடல் உகந்த பெருமானுடைய காட்சி அவர்களுக்குக் கிடைக்கும்.

**துஞ்சு இருளில் ஆடல் உகந்தானை.**

அவனுடைய தொண்டர்கள் எப்போதும் அவனை எண்ணு வார்கள். இருந்தாலும் அவர்கள் உள்ளத்திலும் சில சமயங் களில் வாசனை மலத்தால் மயக்கம் உண்டாகும்; அறியாமை என்னும் இருள் தலைநீட்டும். அப்போது இறைவன் அவர் களுக்கு அருள் செய்ய முந்துவான்; தண்ணிய நிலவொளியை வீசச் செய்வான்; அவன் திருமுடியில் உள்ள நிலாவின் ஒளி அந்தத் தொண்டர்களின் உள்ளத்தே ஒளிரச் செய்வான்.

**தன் தொண்டர்**
**நெஞ்சு இருள் கூரும்பொழுது நிலாப் பாரித்து.**

எப்போதும் அவனையே நினைந்து, அவனுடைய சுடர் வண்ணத் திருமேனியையே தியானித்து நெஞ்சில் ஒளி படர நிற்பவர்கள் தொண்டர்கள். எப்படியாவது இவர்களைத் தன் மாய வலையில் அகப்படுத்த வேண்டும் என்று அஞ்ஞானம் வந்து சூழும். அதற்குக் கொஞ்சம் இடம் கொடுத்தால் போதும்; அது உடனே உள்ளே புகுந்து விடும். நம்முடைய மனத்தில் அறியாமையே குடிபுகுந்து அரசாட்சி செய்கிறது. அன்பர்கள் நெஞ்சில் அது குடிபுக முடியாமல் திணறி நிற்கும். சற்றே அன்பர்கள் சோர்வாக இருந்தால் அந்தச் சமயம் பார்த்து அது உள்ளே புகுந்து விடும்.

அப்பொழுது தன் தொண்டர்களைப் பாதுகாக்க முன்வரு வான் இறைவன்; தண்ணிய நிலவொளி வீசும்படி செய்வான்; தன் உருவத்தைக் காட்டத் தொடங்கி அதற்கு அடையாள மாக நிலாவைப் பாரிக்கச் செய்வான்; பிறகு தானே அழகிய சுடராக உள்ளே புகுந்து நிற்பான். சூரியன் வானத்திலே

தோன்றுவதற்கு முன் அருணோதயம் ஆவது போல முதலில் நிலா ஒளியைக் காட்டுவான்; பிறகு கதிரவன் தோன்றுவது போலத் தானே அழகிய சுடராய் வந்து நிலையாக நிற்பான். அவனுடைய கருணை அது.

தாகம் தணியத் தண்ணீர் கொடுத்துப் பிறகு பசி தீர உணவளிப்பது போலே, தன் தொண்டர் நெஞ்சில் இருள் படரும்பொழுது முதலில் நிலா ஒளியைக் காட்டி அப்பால் செஞ்சுடர்ச் சோதியாக எழுந்தருளி வந்து நிற்பான்.

இத்தகைய இயல்புடைய பெருமானை அப்பர் சுவாமிகள் திருவாரூரில் தரிசித்தார்.

**நிலாப் பாரித்து**
**அஞ்சுடராய் நின்றானை நான் கண்டது ஆரூரே.**

அஞ்ஞானம் என்னும் இருளை நீக்கி மெய்ஞ்ஞானம் என்னும் ஒளியைப் புகுத்திப் பின் தேஜோமய விக்கிரகமாக அன்பர்கள் உள்ளத்தில் நின்று அருளாட்சி செய்கிறவன் சிவபெருமான். இதை அப்பர் சுவாமிகள் பாடுகிறார்.

**வஞ்சனையார் ஆர்பாடும் நில்லாத மைந்தனைத்**
**துஞ்சிருளில் ஆடல் உகந்தானைத் தன்தொண்டர்**
**நெஞ்சுஇருள் கூரும் பொழுது நிலாப்பாரித்து**
**அஞ்சுடராய் நின்றானை நான்கண்டது ஆரூரே.**

*உள் ஒன்று வைத்துப் புறம் ஒன்று பேசும் வஞ்சனை நெஞ்சமுடையவர் எவ்வகையில் வல்லவராக இருந்தாலும் அவர்கள் யாரிடத்தும் நில்லாமல் உள்ள அருள் வலிமை பெற்ற பெருமானும், யாவரும் உறங்கும் நள்ளிருளில் நடனம் செய்தலை மனம் உகந்து மேற்கொண்டவனும், தன்னுடைய தொண்டர்களின் நெஞ்சில் அஞ்ஞானம் என்னும் இருள் மிகுதியாகும் பொழுது அங்கே தண்ணிய நிலாவொளியைப் பரப்பிப் பிறகு அழகிய சுடர்வடிவமாகக் கோலம் காட்டி

நிலையாக நிற்கும் பெருமானுமாகிய சிவபிரானை நான் கண்ட இடம் திருவாரூர் ஆகும். *

['நெஞ்சை ஒளித்தொரு வஞ்சகம் இல்லை' ஆதலின் நெஞ்சில் வஞ்சனை உடையார் புறத்தே அது இல்லாதுபோலக் காட்டுவார். அத்தகைய வேடதாரிகளிடத்தில் இறைவன் சேரமாட்டான்.

ஆர்பாடும் - யாரிடத்தும். சாராத - அடைந்து அருள் புரியாத. மைந்தனை-வலிமையுடையவனை; இளைய திருவுருவம் உடையவனை என்றும் கொள்ளலாம். துஞ்சு - உறங்கும். யாவரும் உறங்கும் இருள், நள்ளிருள். அப்போது நடனமிடு தல் இறைவனுக்கு உகப்பானது; ''நள்ளிருளில் நட்டம் பயின் றுடும் நாதனே' என்பது **திருவாசகம்.** இருள் என்றது அறியா மையை. கூரும்பொழுது-மெல்லப் புகுந்து மிகுந்து வரும் சமயத்தில். நிலாப் பாரித்து - நிலவைப் பரப்பி; தன்னுடைய தண்மையான அருளைப் பரப்புவதைக் குறித்தது. அஞ்சுடராய்-அழகிய சுடராய். வெம்மையுடையது கதிரவன் என்னும் சுடர்; அக்கினியும் அத்தகையதே; சந்திரனோ தேய்தலும் மறை வதும் உடையவன். இறைவனோ இவை யாவும் இல்லாமல் எல்லாச் சுடர்களுக்கும் மேலாக விளங்கும் சுடர். அதனால் அவனைப் பரஞ்சுடர் என்பார்கள். நின்றானை-அகலாமல் நிலைத்து நின்றவனை. கண்டது - கண்டு அவன் இயல்பை அறிந்து கொண்ட இடம். ஏகாரம், ஈற்றசை.]

இந்தப் பாசுரம் நான்காம் திருமுறையில் 19-ஆம் பதி கத்தில் எட்டாவது திருப்பாட்டாக உள்ளது.

# 13. என்ன குறை உடையேன்?

அன்பர்கள் இறைவனை முக்கரணங்களினாலும் வழிபடு வார்கள்; அவனுடைய திருவடியையே தம்முடைய லட்சிய மாகக் கொண்டு வாழ்வார்கள். தாமரை மலரைப்போன்ற அவனுடைய திருவடிகளைத் தொழுவார்கள்; இது உடம்பின் செயல். அவனுடைய புகழைப் பலபடியாகப் பாடி இன்புறு வார்கள்; இது வாக்கின் செயல்.

**பூங்கழல் தொழுதும் பரவியும்.**

அவனுடைய திருவடியை எப்போதும் அவர்கள் தம் மனத் தில் பதித்துக் கொண்டிருப்பார்கள். அந்த மனத்தில் வேறு எண்ணம் ஏதும் இராது. புண்ணியமெல்லாம் திரண்ட உருவ மாக உள்ளவனும் எல்லாவற்றிலும் புனிதமான வடிவம் உள்ள வனும் ஆகிய அவனை உள்ளத்தில் வைப்பதைவிடப் புண்ணி யச் செயல் வேறில்லை. அந்தப் புண்ணியனை உள்ளத்தில் வைத்தால் பாவமே அங்கே சாராது. புனிதம் மிக்க அவனைத் தியானிக்கும் உள்ளத்தில் மாசே தலை காட்டாது. கங்கை பாயும் இடத்தில் அழுக்குச் சேராதது போல அவனை எண்ணி யிருக்கும் மனத்தில் புனிதமற்ற எந்த நினைவும் எழாது.

அவனுடைய பொலிவு பெற்ற திருவடி தம் உள்ளத்தே இருக்கப் பெற்றவர், அப்பர் சுவாமிகள். அதனினும் பெரிய பேறு வேறு என்ன இருக்கிறது?

**புண்ணியா, புனிதா, உன் பொற்கழல்**
**ஈங்கு இருக்கப் பெற்றேன்.**

தங்கக் குவியலைத் தம் அகத்தில் வைத்துள்ளவர்களுக்கு வறுமையால் துன்பம் வராது. வாழ்க்கைக்கு வேண்டிய வளங் களையெல்லாம் அவர்கள் பெறலாம். பிறர் வீடு, உடை, அணி

கலன், உணவு முதலியவற்ருல் குறையுடையவர்களாலுலும், அவர்களுக்கு அத்தகைய குறை யாதும் இராது. ''பொருளி லார்க்கு இவ்வுலகம் இல்லாகி யாங்கு'' என்பது **குறள்.** பொருள் இருந்தால் உலக வாழ்க்கை வளம் பெற்று விளங் கும்.

பரம்பொருளையே தம் அகத்தில் வைத்தவர்களுக்கு எந்தப் பெருங்குறையும் இராது. பணம் படைத்தவர்கள் எவ்வளவு சிறப்பாக வாழ்ந்தாலும் இறுதியில் எல்லாவற்றையும் விட்டு விட்டு இறந்து போகத்தான் வேண்டும். பணம் மரணத்தைப் போக்க வல்லதன்று. பொருளுடையார்க்குப் பிறப்பு இறப்பு என்னும் துன்பங்கள் இல்லை என்று சொல்ல முடியுமா?

ஆனால் பரம்பொருளை அகத்தே வைத்தவர்களுக்கு இந்த உலக வாழ்விலே துன்பம் இராதது மட்டும் அன்று; இந்தப் பிறவிக்குப்பின் மீண்டும் பிறந்து இறந்து திரியும் துன்பமே இல்லாமல் போய்விடும். அவர்களுக்கு எந்தக் குறையும் வராது.

''இம்மை யேதரும் சோறும் கூறையும்;
ஏத்த லாம்; இடர் கெடலுமாம்;
அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுற வில்லையே''

என்று **சுந்தரர்** பாடுவார். ஆகவே, இறைவனுடைய பொற் கழலாகிய வைப்பு நிதியை அகத்திலே வைத்தவர்களுக்கு ஒரு குறையும் இராது.

**உன் பொற் கழல்**

**ஈங்கு இருக்கப் பெற்றேன்;**
**என்ன குறை உடையேன்?**

என்று பெருமிதத்தோடு பாடுகிருர், அப்பர் சுவாமிகள். குறை விலா நிறைவாகிய இறைவன் திருவடியை நிதியம் போல உள்ளத்தே ஈட்டி வைத்தவர் அவர். ஆகவே குறையேதும் இல்லாத நிறைவையுடைய வாழ்வை அவர் பெற்ருர்.

திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைத் தரிசித்த பொழுது அவருக்கு இந்தப் பெருமித உணர்வு தோன்றியது. இறைவன் எழுந்தருளியிருப்பதனால் திருவாரூர் வளம் பெற்று விளங்குகிறது. அப்பர் காலத்தில் இருந்த திருவாரூர் அப்படி இருந்தது.

அந்த ஊருக்குச் சென்றவர்கள் இனிய கனிகளை அருந்தி இன்புறலாம்; பசியாறலாம். எங்கே பார்த்தாலும் தோப்புகளும் பூம்பொழில்களும் நிறைந்திருக்கின்றன. மரங்களுக்குள் மிக ஓங்கி வளர்ந்திருக்கும் தென்ன மரங்கள் அந்த ஊரில் நிலவளத்துக்கு அடையாளமாக இருக்கின்றன.

**ஓங்கு தெங்கு.**

தன் மட்டைகளை விரித்துக் கொண்டு காண்பதற்கு அழகாகக் கமுக மரங்கள் நிற்கின்றன.

**இலையார் கமுகு.**

அங்கங்கே வாழைத் தோட்டங்கள் உள்ளன. இன்னும் அவற்றின் குலைகள் முதிர்ச்சி பெறவில்லை. ஆகையால் அவை வெட்டப்படாமல் நிற்கின்றன. அவை குலை முதிர்ந்தவை அல்ல; இளவாழை.

**இள வாழை.**

தெங்கும் கமுகும் வாழையும் ஒருபால் வளர, பின்னும் ஒருபால் மாமரங்கள் தழைத்துக் கனியீன்று நிற்கின்றன. ஒருபால் மாதுள மரங்கள் கொத்துக் கொத்தாகப் பழங்களை ஈன்று விளங்குகின்றன. இந்த மரங்கள் ஒருவர் முயன்று பறிக்க வேண்டாதபடி பல பழங்களைத் தாமே சிதறுகின்றன. முயற்சி இல்லாமலே எளிதில் பெற்று உண்ணும் வகையில் அவை உள்ளன. இறைவன் திருவருள் மலிந்த இடத்தில் வருத்தமில்லாமலே எல்லாப் பயன்களும் எளிதில் கிடைக்கும் என்பதை அவை காட்டிக்கொண்டு நிற்கின்றன.

**மாவொடு மாதுளம் பல**
**தீங்கனி சிதறும் திருவாரூர் அம்மானே!**

திருவாரூரின் நிலவளத்தை இந்தக் காட்சி காட்டுகின்றது. அந்த ஊரில் வாழ்வாருக்குக் கனிகளால் குறைவில்லை. அங்குள்ள இறைவனை நினைப்பாருக்கு எதனாலும் குறைவில்லை.

**பூங்கழல் தொழுதும் பரவியும்**
**புண்ணியா புனிதாஉன் பொற்கழல்**
**ஈங்கு இருக்கப் பெற்றேன்;**
**என்ன குறைஉடையேன்?**
**ஓங்கு தெங்குஇலை யார்கமுகுஇள**
**வாழை மாவொடு மாதுளம்பல**
**தீங்கனி சிதறும்**
**திருவாரூர் அம்மானே!**

* உயர்ந்து ஓங்கி வளரும் தென்னையும், இலைகள் நிரம்பிய கமுக மரங்களும், இளவாழை மரங்களும், மாமரங்களும், மாதுள மரங்களும் பல வேறு சுவையுள்ள இனிய கனிகளை உதிர்க்கும் திருவாரூரில் எழுந்தருளியுள்ள தலைவனே, நின்னுடைய தாமரைமலர் போன்ற திருவடியை உடம்பால் வணங்கியும் வாயால் புகழ்ந்தும் என் உள்ளமாகிய இவ்விடத்தில் இருக்கும் பேறு பெற்றேன்; இனி யான் என்ன குறையை உடையேன்? *

[பூங்கழல்-கழலை உடைய தாமரை மலரைப் போன்ற திருவடி; கழல்: ஆகுபெயர்; பூவேலை செய்யப் பெற்ற கழலை அணிந்த திருவடி எனலும் ஆம்.

தொழுவது கையின் செயலானாலும் இங்கே பொதுவாக உடம்பால் வணங்குவதைக் குறித்தது; உபலட்சணத்தால் வணங்குதலையும் கொள்ளலாம். பரவுதல்-புகழுதல். இது வாக்கின் செயல். புண்ணியன்- அடியவர்கள் செய்த புண்ணியமே வடிவாக உள்ளவன்; புண்ணிய மூர்த்தி என்பது வழக்கு-

புனிதா-தூய்மையான பொருள்கள் யாவற்றினும் தூயவனே; தன்னைச் சார்ந்த பொருள்களுக்கெல்லாம் புனிதத்தை அருளும் தூயவன் அவன். பொற்கழல்-பொன்னாலாகிய கழலை அணிந்த திருவடி; பொலிவு பெற்ற திருவடி என்பதும் ஆம்; அப்போது அது அடையடுத்த ஆகுபெயர். ஈங்கு என்றது மனத்தை; இது நெஞ்சறி சுட்டு. இறைவன் உள்ளத்தில் இருப்பதைவிடப் பெரிய பேறு இன்மையின், 'இருக்கப் பெற்றேன்' என்றார். என்ன-எத்தகைய. மாவொடு: ஒடு, எண் ஒடு, அதனைத் தெங்கு முதலியவற்றோடும் கூட்டுக. பல தீங்கனி-பல இனிய கனிகளை; பலா என்பது குறுகி நின்றதெனக் கொண்டு பலாமரத்தையும் சேர்த்துக் கொள்ளலாம்; சிதறும்-உதிரச் செய்யும். அம்மான்-தலைவன், இறைவன்.

இறைவன் வாழும் திருவாரூரில் வளம் நிரம்பியிருக்கிறது. அவன் வாழும் உள்ளத்திலும் குறைவிலா நிறைவு இருக்கிறது. ஏ:விளி.]

நான்காம் திருமுறையில் 20-ஆம் திருப்பகத்தில் உள்ள நாலாவது பாட்டு இது.

# 14. அனைத்திலும் இலயம்

திருநாவுக்கரசர் தில்லைக்குச் சென்றார். அங்கே திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தத் தாண்டவம் புரியும் நடராஜப் பெருமானைத் தரிசித்தார். ''நீ இங்கே எதற்கு வந்தாய்?'' என்று இறைவன் கேட்பது போலத் தோன்றியது. அவனுடைய திருக்கரத்தின் குறிப்பு இதுபோலும் என்று அவர் எண்ணினார். அந்த வினாவுக்கு விடை சொல்வதுபோல ஒரு திருப்பாடலைச் சொல்கிறார்.

''இறைவனே, என்னிடம் ஒருவர் இருக்கிறார். அவர் என்னோடு ஒட்டி வாழ்கிறார். தாம் போகும் வழியெல்லாம் என்னை இழுத்தடிக்கிறார். நல்ல வழிகளில் ஈர்த்துச் சென்றால் எனக்குத் துன்பம் இல்லை. அவரோ மாட்சியில்லாத புன்னெறிகளில் திகைப்படையும்படி என்னை இழுத்துச் சென்று, தம் விரும்பம் கைகூடியவரைப்போல முழக்கம் செய்கிறார். 'நீ என்னை மடக்கிவிட்டுப் போகவா பார்க்கிறாய்? உன்னை அப்படிப் போக விடுவேனா? மேட்டிலும் பள்ளத்திலும், காட்டிலும் புதரிலும், அழுக்கான இடங்களிலும், நாற்றமுள்ள பிரதேசங்களிலும் உன்னை இழுத்துச் சென்று கதற அடிக்கிறேன், பார்' என்ற நினைவோடு செயல் செய்வாரைப் போல அவர் என்னை அலைக்கழிக்கிறார். நான் அவருடைய கைக்குள் அகப்பட்டுத் தடுமாறுகிறேன். நான் என்செய்வேன்!''

**மனத்தினார் திகைத்து நாளும்**
**மாண்பு அலா நெறிகள் மேலே**
**கனைப்பரால்; என்செய் கேனோ?**

''இந்தத் தொல்லையினின்றும் நீங்கி உய்வேனோ என்ற ஏக்கம் எனக்கு உண்டாகிவிட்டது. உலகிலுள்ள யாரிடமாவது

சார்ந்து எனக்குப் பகையாக நிற்கும் அவரை அடக்கியாள லாம் என்று எண்ணி யார் யாரையோ நாடிப் போனேன். அப்படிப் போன இடங்களிலெல்லாம் அவர்களும் பேயைப் போல அந்த மனத்தினர் பற்றி அலைக்க அவரோடு சேர்ந்து ஆட்டம் போடுகிறார்கள். பைத்தியம் பிடித்தவன் வேறொரு பைத்தியக்காரனோடு சேர்ந்தால் என்ன ஆகும்? இரண்டு பைத்தியங்களும் சேர்ந்து கொண்டு பின்னும் ஆட்டம் போடும்; அமளி துமளிப்படுத்தும். அப்போதுதான் ஓர் உண்மையை அறிந்து கொண்டேன். நம்மைப் போலவே மக்கள் யாவரும் மனத்தினருடைய ஆட்சியிலேதான் அடங்கி உழல்கிறார்கள் என்பது தெரிந்தது. அப்படியானல் எங்கே சென்றால் இந்த மனம் என்னும் பேயை அடக்கி வழிப்படுத்த முடியும் என்று யோசித்துப் பார்த்தேன். அந்த யோசனையைச் செய்வதற்காவது மனத்தினர் இடம் கொடுத்தாரே; அதைப் போற்ற வேண்டும்.''

''பிறகு இங்கே எப்படி வந்தாய்?'' என்று இறைவன் கேட்பது போன்ற தோற்றம் உண்டாயிற்று.

''உன்னைப் பற்றிக் கேள்வியுற்றேன். எவ்வளவு கொடுமையுடையவனாக இருந்தாலும் உன்னை அடைந்தால் நன்மை உண்டாகும் என்று தெரிந்து கொண்டேன்.''

''எவ்வாறு தெரிந்து கொண்டாய்?''

''தேவர்கள் அமுது பெறப் பாற்கடலைக் கடைந்தபோது ஆலகால விடம் தோன்றியதாம். அப்போது எல்லோரும் மயங்கி விழுந்தார்கள். உன்னை எண்ணி அரற்றினார்களாம். அவர்களிடம் கருணை பூண்டு அந்த நஞ்சத்தை வாங்கி உண்டு உன் நெஞ்சிலே நிறுத்திக் கொண்டாயாம். இப்போது அந்த நஞ்சு யாரும் காண உன் கழுத்தில் இருந்து ஒளிர்கிறது. அந்த நீல கண்டத்தை அன்பர்கள் வாழ்த்திப் புகழ்கிறார்கள். 'அக்கறை, மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே' என்று

பெரியோர்கள் சொல்கிறார்கள். அந்த நஞ்சத்தைப் போன்றுள்ள என் நெஞ்சத்தை உன்னை அடைந்து சமர்ப்பித்து விட்டால் அதுவும் தன் தீய இயல்பு மாறி நல்லதாகி விடும் என்ற நம்பிக்கை உண்டாயிற்று.''

''அதன் பிறகு என்ன செய்தாய்?''

''நஞ்சணி கண்டத்தான் எங்கே இருக்கிறான் என்று ஆராய்ந்தேன். நல்லவர் பலரைக் கேட்டேன். உன் விலாசம் தெரிந்தது. நீ தில்லையிலே எழுந்தருளியிருக்கிறாய் என்று அறிந்து கொண்டேன். இந்தத் தலத்துக்குள் நுழையும் போதே இதன் பெருமையை உணர முடிந்தது.''

''எப்படி?''

''இந்த எல்லைக்குள் அடியெடுத்து வைத்தேன். என் காதில் இனிய வேத கானம் கேட்டது. சிறிது நேரம் நின்று கவனித்தேன். சிறிதளவு போதும் அந்த வேத ஒலி நிற்காமல் முழங்கியது. துன்பத்தாலும் நோயாலும் வருந்துவாருடைய கூக்குரலையும், உண்மையல்லாத பொருள்களைப் பற்றிப் பேசும் ஆரவாரப் பேச்சையும், அகந்தையின் விளைவான பேச்சையுமே கேட்ட என் செவிகளுக்கு அந்த வேத ஒலி நோய்க்கு மருந்துபோல உதவியது. மற்றக் குரல்களையெல்லாம் மறந்து அந்த வேத ஒலியிலே ஈடுபட்டேன். ஆ! இறைவன் சீர் பாடும் இசையல்லவா இது என்றுணர்ந்து மகிழ்ந்தேன். நல்ல இடத்துக்கு வந்துவிட்டோம் என்ற ஆறுதல் பிறந்தது.''

''அங்கேயே நின்று வேத ஒலியைக் கேட்டுக்கொண்டே இருந்தாயோ?''

''ஊரின் புறத்திலே வந்தபோதே இந்த இனிய கானம் கேட்கிறதே! 'நம்மை அலைத்துக் குலைத்த திருவாளர் மனத்தினார் இப்போது தம்முடைய சேஷ்டைகளைக் குறைத்துக் கொள்ளத் தொடங்கி இருக்கிறார் போலத் தோன்றுகிறதே!'

என்று உணர்ந்து மகிழ்ந்தேன். 'எல்லையை அணுகும்போதே இந்த நன்மை கிடைக்குமானல் தில்லையுட்புகுந்தால் எத்துணை இன்பம் கிடைக்கும்! ஆகவே இதுவே நாம் புகல் புகவேண்டிய இடம்' என்று தெளிந்தேன். தில்லைக்குள் புகுந்தேன். நின் நடன அரங்காகிய திருச்சிற்றம்பலத்துக்கு வந்து தரிசித்தேன்.''

''தரிசித்த பிறகு மீண்டும் புறப்பட்டு உன் இடத்துக்குச் செல்லலாமே!''

''ருசிகண்ட பூனை உறியை எட்டி எட்டித் தாவும் என்பார்கள். மனத்தினர் அடங்குவாரா என்று ஏங்கிக் கிடந்த எனக்கு அவர் தம் குறும்புகளை அடக்கிக் கொள்வதை உணர்ந்தபோது, இதை விட்டுப் போக எண்ணம் தோன்றுமா? இங்கே வந்தபிறகு உண்டான அமைதியை இழந்துவிட முடியுமா? அது மட்டும் அன்று. பெரியவர்கள் ஒன்று சொன்னார்கள். உன்னுடைய ஆடலின் பெருமையைச் சொன்னார்கள். நீ எப்போதும் தாள அமைதியோடு நடனம் செய்வதால்தான் உலகமே நடைபெறுகிறது என்று கூறினார்கள். அந்த உண்மையை உணரவேண்டும் என்ற உறுதி எனக்கு உண்டாயிற்று.''

''தாளத்திற்கும் உலகம் நடப்பதற்கும் என்ன தொடர்பு?''

''உடம்பில் இதயம் துடிக்கிறது. நீ அங்கேயும் இருந்து நடனமிடுகிருய். உன்னுடைய ஆடல் நிற்குமாயின் இதயத் துடிப்பும் நின்றுவிடும். உலகில் உள்ள உயிர்க் கூட்டங்கள் இயங்கிக் கொண்டிருக்கின்றன. நீ இலயத்துக்கு ஏற்றபடி ஆடுவதனல்தான் அவை இயங்குகின்றன. படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளுதல் என்னும் பஞ்ச கிருத்தியங்களையும் நடத்தும் தலைவன் என்பதை உன் நடனமே காட்டுகிறது. நீ நடனம் ஒழிந்தால் உயிர்களின் இயக்கம் நின்றுவிடும். இங்கே நான் காணும் இலயமே எல்லா உயிர்களிடத்திலும் இதயத் துடிப்பையும் இரத்த ஓட்டத்தையும்

கருவி கரணங்கள் தொழிற்படுவதையும் நடத்துகிறது. நின் ஆடலும், அதன் இலயமும் நின்ருல் எல்லாரும் செயலொழிந்து போவார்கள். உலகமே பிணக்காடு ஆகிவிடும். உடம்புக்குள் உயிர் இருந்து அதை நடத்துகிறது. ஆனல் உயிருக்குள்ளும் உயிராக இருந்து நீ தானே எல்லாவற்றையும் இயக்குகிருய்? உன்னுடைய ஆடலின் தாளம் சீராக அமைந்திருக்கிறது. தப்புத்தாளம் போடுவதில்லே. அதனல் உலகம் ஒரு வரை யறைக்குள் நின்று செயற்படுகிறது. கதிரவன் உரிய நேரத்தில் தோன்றி மறைகிருன். சந்திரன் தன் நியதிப்படி ஒளி விடுகிருன். தீயானது தன் தொழிலேச் செய்கிறது. பஞ்ச பூதங்களும் இந்த இலயந்தினல் இயங்குகின்றன. உலகமே முறையாகச் சுழல்கிறது. நவக்கிரகங்கள் இயங்குகின்றன. தேவர்கள் தமக்குரிய கடமைகளே ஆற்றி வருகிருர்கள். எல்லாவற்றுக்கும் மூலசக்தியாக உன்னுடைய ஆடலின் இலயம் இருக்கிறது. அது நின்ருல் யாவும் ஒடுங்குதலாகிய இலயத்தைத்தான் அடையும். அனேத்துப் பொருளிலும் உன் னுடைய ஆடலின் இலயம் எதிர் ஒலிக்கிறது. அதைத் தெரிந்து கொள்வதற்காக அடியனேன் இங்கே வந்து உன்னேத் தரிசித்தேன்.''

இப்படியெல்லாம் விரித்துப் பொருள் செய்யும் வண்ணம் அப்பர் சுவாமிகள் பாடுகிருர்.

**மனத்தினுர் திகைத்து நாளும்**
**மாண்பலா நெறிகள் மேலே**
**கனேப்பரால்; என்செய் கேனே!**
**கறைஅணி கண்டத் தானே,**
**தினேத்தனே வேதம் குன்ருத்**
**தில்லேச்சிற் றம்ப லத்தே**
**அனேத்தும்நின் இலயம் காண்பான்**
**அடியனேன் வந்த வாறே.**

அடியேனுடைய மனமானது இன்னது செய்தால் நல்லது என்பதை உணராமல் மயங்கி நாள்தோறும் பெருமை

யல்லாத புன்னெறிகளின்மேல் என்னை இழுத்துச் சென்று முழங்குகிறது; அடியேன் இந்த அல்லலினின்றும் தப்பிப் பிழைக்க என்ன செய்வேன்! ஆலகால விடமாகிய கறுப்பை அணிந்த நீலகண்டப் பெருமானே, தினையளவு போதுகூட இடையீடின்றி வேத ஒலி குறையாமல் கேட்கும் தில்லை நகருள் திருச்சிற்றம்பலத்திலே, அண்டசராசரங்கள் எல்லா வற்றிலும் ஊடே நின்று இயக்கும் நின் திருவடிச் சதியின் பெருமையைக் காணும்பொருட்டே அடியேன் வந்தது.*

[மனத்தினார்: ஆர், இகழ்ச்சிக் குறிப்பு. திகைத்து-நெறி தெரியாது மயங்கி. மாண்பு அலா நெறிகள்-பேரின்பத்தை அடையும் மாட்சிக்கு ஒவ்வாத வழிகள். கனைப்பர்-இழுத்துச் சென்று முழங்குவர்; எனக்கே வெற்றி என்று ஜய பேரிகை கொட்டுவது போல முழங்குவர். ஆல்: அசை. என் செய் கேன்-இந்த அல்லலைப் போக்க எந்த உபாயத்தை மேற் கொள்வேன். ஓ:அசை. கறை-ஆலகால நஞ்சத்தின் கறுப்பு; ''கறைமிட றணியலும் அணிந்தன்று'' என்பது **புறநானூறு**. தினைத்தனை-சிறிது பொழுதேனும்; தினை என்பது மிகச் சிறிய அளவைக் குறிக்கும் சொல். தினையளவும் குறையாமல் வேதங்களைச் சாங்கோபாங்கமாக ஓதும் தில்லை என்றும் பொருள் கொள்ளலாம். தில்லை மூவாயிரவராகிய அந்தணர்கள் வாழும் இடமாதலின் வேதம் குன்றுமல் ஒலித்தது. தில்லை, தலத்தின் பெயர்; சிற்றம்பலம், நடராசப் பெருமான் ஆடும் அரங்கின் திருநாமம். அனைத்தும்-எல்லாப் பொருள்களிலும். இயயம்-தாளம். காண்பான்-காண்பதற்காக. வந்தவாறு காண்பான் என்று கூட்டுக. வந்தவாறே: ஏகாரம், ஈற்றசை.]

இறைவனுடைய திருநடனத்தால் உலகமெல்லாம் இயங்குகிறது என்பது கருத்து.

இந்தப் பாசுரம் நான்காம் திருமுறையில் 23-ஆம் திருப் பதிகத்தில் 8-ஆவது திருப்பாட்டாக அமைந்துள்ளது.

# 15. எப்போதும் உறங்கும் தொண்டர்

நாமெல்லாம் பகலில் பல வேலைகளைப் பார்த்து விட்டு இரவில் படுத்து உறங்குவோம். உலக இயலில் ஈடுபட்ட நமக்கு உலக நினைவு இருப்பது ஜாக்கிரம் என்றும் அதை மறந்து உறங்குவது சுழுத்தி என்றும் சொல்கிறோம். உலகப் பொருள்களைக் கண்டு கொண்டிருப்பதுதான் நம்முடைய விழிப்பு நிலை. நம்முடைய தூக்கம் உலகையும் உடம்பையும் மறந்த தூக்கம். பெரும்பாலும் இரவில் இந்த உறக்கத்தை அடைகிறோம்.

எப்போதும் தூங்குகிறவர்கள் யாராவது உண்டா? கும்ப கர்ணன் கூடப் பல காலம் உறங்கினாலும் சில காலம் விழித்துக் கொண்டிருப்பான். அதனால்தானே அவன் போர் செய்ய முடிந்தது?

ஆனால் எப்போதும் உறங்குபவர்கள் சிலர் இருக்கிறார்கள். கண்முன் உள்ள பொருள்களைக் காணாமல் கண்ணை மூடிக் கொண்டு நாம் உறங்குகிறோம். அவர்கள் கண்ணைத் திறந்து கொண்டே உறங்குவார்கள். அது எப்படி முடியும் என்று கேட்கலாம்.

சில சமயம் நாம் எதையோ நினைத்துக் கொண்டிருப் போம். அந்த நினைவில் ஆழ்ந்திருக்கும்போது நம் கண் விழித்திருந்தாலும் எதிரே நடப்பது தெரியாமல் இருக்கும் நிலையும் உண்டு. உண்முகமான நோக்கிலே ஆழ்ந்திருக்கும் போது புறப்பார்வை சுருங்கும். கவலையோடு யோசனையில் ஆழ்ந்திருப்பவர்களைப் பாருங்கள். அவர் முன் நாய் போயிற்று, நரி போயிற்று என்றால், ''அதைக் கவனிக்கவில்லை'' என்பார்கள். கண் விழித்துக் கொண்டிருந்தாலும் கவனம் வேறிடத்தில் இருப்பதால் முன்னாலே சென்றதைப் பார்க்க வில்லை.

கண் திறந்திருந்தாலும் எல்லாக் காலத்திலும் உண்முக நோக்கமுடையவர்களுக்கு உலகமே தெரியாது. அவர்கள் கண் திறந்தவாறே உறங்குபவர்கள். எக்காலத்திலும் அகத் திற் கண் கொண்டு இறைவனை நோக்குபவர்களாதலின் அவர் கள் எப்போதும் உறங்குபவர்களைப் போன்றவர்களே. அவர் களுடைய தூக்கம் தூங்காத தூக்கம்.

**எல்லியும் பகலும் எல்லாம் துஞ்சுவோர்க்கு.**

இவ்வாறுள்ளவர்களை 'விழித்துறங்கும் தொண்டர்' என் றும், 'விழித்த கண்குருடாத் திரி வீரர்' என்றும் பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

இரவும் பகலும் உண்முக நாட்டம் கொண்டு, புற உலக நாட்டமற்று விழித்துறங்கும் தொண்டர்களின் மனத்துக் குள்ளே ஒருவர் வந்து புகுவாராம். எல்லாரும் தம்மை மறந்து உறங்கும் வீட்டிலே திருடன் புகுவது போல, புறக் கண் பார்வை தோன்றாமல் இருக்கும் அத்தகைய தொண்டர்களின் உள்ளத்துக்குள்ளே அவர் புகுவார். தம்மையே எண்ணிப் பொருந்தியிருப்பவர்கள் அவர்கள் என்பதை உணர்ந்து அவர் களின் உள்ளத்துக்குள்ளே புகுந்து அதையே தாம் நித்திய வாசம் செய்யும் கோயிலாக ஆக்கிக் கொள்வார்.

**எல்லியும் பகலும் எல்லாம்**
**துஞ்சுவோர்க்கு ஒருவர் வந்து**
**புல்லிய மனத்துக் கோயில்**
**புக்கனர்.**

உண்முக நாட்டம் கொண்ட மெய்ஞ்ஞானியர்கள் தம் உள்ளத்தில் மாசு மறுவில்லாதவர்கள். காமம் முதலிய ஆறு பகைகளுக்கும் அங்கே இடம் இல்லை. வேறு எந்த உணர்வும் இல்லாமையால், இதுதான் யாரும் புகாத இடம், இதுவே நமக்கு ஏற்றது என்று அவர் புகுந்து தங்கிவிடுவார்.

அவர் எத்தகையவர்? அவருடைய தொண்டர்கள் காமத் தைத் துறந்தவர்கள். அவர்களிடம் காமனுடைய ஜபம் பலிக்

காது. அவர்களே அத்தகைய இயல்பு பெற்றிருக்கும்போது அவர்களை ஆட்கொண்டவரைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா?

ஒரு சமயம் காமன் தன் கரும்பு வில்லிேேடும் ஐந்து மலரம்புகளோடும் அவர்முன் வந்தான். ஒரு கணம் நின்றுன். அவர்மேல் அம்பு எய்ய வந்தவன் அவன். அவர் அவனை எதிர்க்கவில்லை. அவனை அவர் சும்மா பார்த்தார். அவ்வளவு தான். உடனே அவன் வெந்து பொடி சாம்பலாய் உதிர்ந்து விட்டான்.

**காமன் என்னும்**
**வில்லி ஐங்கணையினுனை வெந்து உக நோக்கியிட்டார்.**

எல்லோரையும் தன் கணையினுல் எய்து காமம் கொள்ளும் படி செய்து பழகிய அவன் அந்த ஒருவர்முன் ஒன்றும் செய்ய முடியவில்லை; சாம்பலாகி விட்டான்.

இப்படிச் செய்தவர் தம் அன்பர்கள் தரிசித்து மகிழும்படி உலகத்தில் பல தலங்களில் மூர்த்தீகரித்து எழுந்தருளியிருக் கிருர். திருவதிகை வீரட்டம் என்ற தலம் ஒன்று உண்டு. அப்பர் சுவாமிகள் அருள்பெற்ற திருத்தலம் அது. அங்கே நிலவளமும் நீர்வளமும் மிகுதியாக உண்டு. அல்லி மலர்கள் வயல்களில் மலர்ந்து அழகுற விளங்கும். திருவதிகையைச் சுற்றி எல்லை கோலினுற் போல இந்த வயல்கள் இருக்கும். அங்கே எழுந்தருளிய வீரட்டனுரே இத்தகையவர். திருவதிகை வீரட்டம் என்பது திருக்கோயிலின் பெயர். அட்ட வீரட்டங்களில் ஒன்று அது.

**அல்லியம் பழன வேலி அதிகை வீரட்டனுரே.**

சிவபெருமான் தொண்டர்களின் உள்ளத்தையே கோயிலாகக் கொண்டு விளங்குபவர். அவர் அருள் சார்ந்த இடத்

தில் காமனுடைய அம்பு புகாது. இந்தக் கருத்துக்களை இந்தப் பாட்டில் காணலாம்.

**எல்லியும் பகலும் எல்லாம்**
**துஞ்சுவோர்க்கு ஒருவர் வந்து**
**புல்லிய மனத்துக் கோயில்**
**புக்கனர்; காமன் என்னும்**
**வில்லிஐங் கணையி னானை**
**வெந்துக நோக்கி யிட்டார்;**
**அல்லிஅம் பழன வேலி**
**அதிகைவீ ரட்ட னாரே.**

* இரவிலும் பகலிலும் எல்லாக் காலத்திலும் புறநோக்கம் இன்றி உண்முகப்பட்டு உறங்கும் அன்பர்களிடம் ஒருவர் வந்து தம்மைத் தியானித்துத் தழுவிய அவர்களுடைய மனமாகிய கோயிலில் புகுந்தனர்; அவரே காமன் என்னும் கரும்பு வில்லையுடையவனும் ஐந்து மலரம்புகளை உடையவனுமாகிய வனைச் சாம்பலாக வெந்து உதிரும்படி தம் திருக்கண்களால் பார்த்தார். அவர் யார் என்னின், அவரே அல்லி மலர்கள் சூழ்ந்த அழகிய வயல்களை எல்லையாக உடைய திருவதிகை வீரட்டம் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியிருப்பவர்.*

[எல்லி – இரவு. துஞ்சுவோர்க்கு - உறங்குபவர்களிடம்; உருபு மயக்கம். அவ்வாறு உறங்குவோரிடம் இறைவர் தாமே வந்து அவர் மனத்துட் புகுந்தார். புல்லிய – தழுவிய; இடைவிடாது தியானித்ததைக் குறித்தபடி; தழுவுதலாவது சார்ந்து நிற்றல். மனத்துக் கோயில் - மனமாகிய கோயில்; அத்து, வேண்டாவழிச் சாரியை. வில்லி - கரும்பு வில்லையுடையவன். வில்லியாகிய கணையினானை. வெந்து உக - எரிந்து பொடியாக உதிரும்படி. நோக்கியிட்டார் - நோக்கினார்; இடு: பொருளற்ற துணைவினை. அல்லி-அல்லி மலர். வேலி - எல்லை. ஏகாரம், ஈற்றசை.]

இந்தப் பாசுரம் நான்காம் திருமுறையில் 25-ஆம் பதிகத்தில் 8-ஆவதாக உள்ளது.

# 16. திருவடிக் காட்சி

இறைவனுடைய திருவடியைத் தரிசித்து இன்புற்ற அடியவர்கள் பக்தியில் முறுகி நின்று அந்தத் திருவடியை நேரிலே கண்டு மகிழ வேணடும். என்ற பேரார்வத்தைப் பெறு வார்கள். வெளியிலே இறைவனுடைய திருவடியைப் பலகாலும் தரிசித்துப் பின்பு அகத்திலே அந்தத் திருவடியை வைத்துத் தியானிப்பார்கள். அப்பால் அந்தத் திருவடியை உண்மையான வடிவத்திலே காணவேண்டும் என்று ஏங்கி நிற்பார்கள்.

திருவடியை அதன் இயல்பான வடிவத்திலே கண்டவர்கள் அதன் அழகிலே ஈடுபட்டு எப்போதும் அதைக் காணுவதிலே லயித்துப் போய்விடுவார்கள். இந்த லயம் தமக்கு வரவேண்டுமென்று அப்பர் சுவாமிகள் திருவதிகை வீரட்டத்தில் எழுந்தருளியுள்ள இறைவனிடம் விண்ணப் பித்துக் கொள்கிறார்.

நல்லவர்கள் விரும்பும் பொருள் அவன். இவ்வுலகில் எத்தனை போக போக்கியங்கள் இருந்தாலும் அவை நிலை யானவை அல்ல என்ற உண்மையை உணர்ந்தவர்கள் அடியவர்கள். ஆகவே அவற்றில் மனம் வையாமல் இறைவ னுடைய திருவடி தரிசனத்தையே தம் லட்சியமாகக் கொண்டு சாதனை செய்து வருவார்கள். தன்னை உணரப் புகுந்தவர் களுக்கெல்லாம், காணவேண்டும் என்ற விருப்பத்தை உண் டாக்குகிறவன் அவன்.

**நம்பனே!**

அடியவர்களுக்கு அவனே தலைவன்; தன் அருளாட்சியில் அவர்களை ஈடுபடுத்தி ஆளும் வேந்தன்.

**எங்கள் கோவே!**

தன்னை உணர்வாருக்கும் உணராதாருக்கும் அவனே எல்லாம் வழங்கும் நாயகனாக இருக்கிறான். உலகிலுள்ள நாயகர்கள் சில காலம் தம் தலைமைப் பதவியில் இருப்பார்கள்; பிறகு மாறி விடுவார்கள். இந்திரன் முதலிய தேவர்களும் அத்தகையவர்களே. என்றும் மாறாமல் எல்லாருக்கும் நாதனாக இருப்பவன் அவனே.

**நாதனே!**

எல்லாப் பொருள்களுக்கும் ஆதி காரணனாய், யாவருக்கும் முதல்வனாய், தனித் தலைமை தாங்குபவன் அவன்.

''அகர முதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே உலகு''

என்பது முதற் **குறள்**. ஆதிமூர்த்தியாக என்றும் அவன் இருக்கிறான். யாவரும் மறைந்தாலும் எல்லாவற்றையும் தோற்றுவிக்கும் ஆதிப் பரம்பொருளாகிய அவன் மறைவதில்லை.

**ஆதி மூர்த்தி!**

அவன் என்றும் அடியவர்கள் பங்கில் இருந்து நலம் செய்கிறவன்; அவர்களுடைய முயற்சிகளையெல்லாம் நிறைவுறச் செய்து அவர்களுக்குப் பரமோபகாரியாக விளங்குபவன்.

**பங்கனே!**

அவன் யோகியைப் போன்ற கோலம் பூண்டவன். யோகியர்களுக்கெல்லாம் மேலான யோகியாக இருப்பவன்.

**பரம யோகி!**

இவற்றையெல்லாம் நினைந்து வழிபடுகிறார்கள் அன்பர்கள்; பல்காலும் இப்படிச் சொல்லி மனம் உருகி நிற்கிறார்கள்; ஒவ்வொரு நாளும் எது செய்தாலும் செய்யாவிட்டாலும் இவ்வாறு அவன் இயல்பை எண்ணி வாயாரப் புகழ்வதை நிறுத்தமாட்டார்கள்.

**என்றென்றே பரவி நாளும்.**

அவன் சிவந்த பொன்னைப் போலக் காட்சி அளிப்பான்; பவளக் குன்று போன்ற திருக்கோலத்துடன் ஒளிர்வான். அந்த இயல்புகளைச் சொல்லி அவனை விளித்துத் துதித்து மகிழ்வார்கள் அடியவர்கள்.

**செம்பொனே! பவளக்குன்றே!**

அவனை விட உயிர்களுக்கு அன்பன் வேறு இல்லை. உயிர்களிடத்தில் வைத்த பேரன்பினால் அவன் தனு கரண புவன போகங்களை வழங்கியிருக்கிறான்.

**அன்பனே!**

அந்தப் பெருமானுடைய திருவடியைக் காணவேண்டுமென்று ஏங்கித் தவித்து நிற்பார்கள் மெய்யன்பர்கள்.

**திகழ் மலர்ப் பாதம் காண்பான்**
**அன்பனே! அலந்து போனேன்.**

ஒவ்வொரு நாளும் வாயினால் அவனுடைய திருநாமங்களைச் சொல்லிச் சொல்லி உருகுவதும், அவனுடைய திருவடிகளை உண்முகத்தே தரிசித்து, இறுதியிலே அவற்றோடு இரண்டறக் கலக்க வேண்டும் என்று ஏங்குவதும் அடியவர்கள் இயல்பு.

இதை அப்பர் சுவாமிகள் திருவாக்கால் உணர்ந்து கொள்கிறோம்.

**நம்பனே, எங்கள் கோவே,**
**நாதனே, ஆதி மூர்த்தி,**
**பங்கனே, பரம யோகி,**
**என்றென்றே பரவி நாளும்,**
**செம்பொனே, பவளக் குன்றே,**
**திகழ்மலர்ப் பாதம் காண்பான்**
**அன்பனே, அலந்து போனேன்;**
**அதிகைவீ ரட்ட னீரே!**

* செம்பொன்னைப் போலவும் பவளக் குன்றத்தைப் போலவும் கோலம் காட்டும் பெருமானே, அடியவர்களிடத்தில் பேரன்பு உடையவனே, திருவதிகை வீரட்டானத்தில் எழுந்தருளியிருக்கும் கடவுளே, உன்னை, 'விருப்பம் உடையவனே, எங்களை அருளாட்சியில் வைத்துப் பாதுகாக்கும் மன்னனே, எல்லோருக்கும் நாயகனாக உள்ளவனே, எல்லாருக்கும் முதல்வனாக உள்ள மூர்த்தியே, அடியார் பங்கிலே இருந்து பாது காப்பவனே, எல்லா யோகியரையும் விட மேலான யோகியாக உள்ளவனே' என்று பலகாலும் சொல்லிச் சொல்லித் துதித்து, ஒவ்வொரு நாளும் உன்னுடைய திருவடிக் காட்சியைக் காணும் பொருட்டு ஏங்கிப் போனேன். (என் ஏக்கத்தைத் தீர்த்துத் திருவடியைத் தரிசிக்கும்படி அருள் புரிய வேண்டும்.) *

[நம்பு-விருப்பம்; அடியார்பால் விருப்பம் உடையவன், அடியாரால் விரும்பப்படுகிறவன் என்று இருவகையில் நம்பன் என்ற சொல்லுக்குப் பொருள் கொள்ளலாம். கோ-அரசன்; தன் அருளாட்சியிலே உலகம் நிகழும்படி கோல் செலுத்துகிறவன். நாதன்-யாவர்க்கும் தலைவன்; "நாதன் தாள் வாழ்க" என்று **சிவபுராணத்தில்** பாடுகிறார் **மணிவாசகர்.** ஆதிமூர்த்தி: இறைவனே எல்லாப் பொருள்களுக்கும் மூல முதல்வன்; அவன் அடியார் கண் காணும்படி மூர்த்தீகரித்து நிற்கிறான். பங்கன்-பக்கத்தில் உள்ளவன்; அடியவர்கள் பக்கம் சார்ந்து அவர்களுக்கு நலம் புரிபவன். என்று என்று—என்று பல காலும் சொல்லிச் சொல்லி; ஏகாரம்: அசை; பிரிநிலையாக வைத்து, வேறு ஏதும் சொல்லாமல் இவற்றையே சொல்லி என்றும் பொருள் கொள்ளலாம். பரவி-புகழ்ந்து. திகழ் மலர்-எந்த மலர்களுக்கும் இல்லாத எழிலும் தண்மையும் மணமும் உடையதாக விளங்கும் மலரைப் போன்றதாக உள்ள. காண்பான் — தரிசிக்கும் பொருட்டு. அலந்து போனேன்-ஏங்கிச் செயலிழந்து போனேன்.

முன்பெல்லாம் ஒருமையாகச் சொல்லி இறுதியில் வீரட்டனீரே என்று பன்மையாகச் சொன்னார். ஆர்வம் பொங்கப் புகழும்போது இவ்வாறு மாறி மாறிப் பேசுதல் இயல்பு.

செம்பொனே, பவளக்குன்றே என்பவை இறைவ விளித்துச் சொல்லத் தொடங்கியவை. நம்பனே என்ப முதல் பரமயோகி என்பதுவரை உள்ளவை அவனைப் புகழு வகையைச் சொன்னபடி.

திருவடி தரிசனத்தைப் பெறும்படி செய்ய வேண்டு என்பது குறிப்பு.]

இது, நான்காம் திருமுறையில் 26-ஆம் பதிகத்தி உள்ள முதல் பாட்டு.

# 17. ‘அலந்து போனேன்’

இந்த உடம்பு தோல் போர்த்து நின்று பளபளக்கிறது. அழகான உடம்பைப் பார்த்தால் நாம் அந்த அழகில் ஈடுபடு கிறோம். அழகானவர்கள் தம்முடைய உடம்பைப் பார்த்துத் தாமே பெருமை அடைவதுண்டு. உள்ளே ஊனும் குருதியும் எலும்பும் வைத்து அவை தெரியாமல் தோலால் மூடியிருக்கும் பண்டம் இந்த உடம்பு. இது பல காலம் நில்லாதது. இதில் உள்ள உறுப்புக்களும் உடம்போடே அழியக் கூடியவை. பொய்யான தோலினால் செறித்து வைத்திருக்கப்பட்ட இந்தச் சரீரம் நோய்வாய்ப் படும்போது பக்கம் பக்கமாக அழுகி வீழ்ந்து விடும். அப்படி அழிந்து போகும் உடலில் எவ்வளவு நாள் வாழ முடியும்? இந்த உடம்பில் வாழும் வாழ்வும் ஒரு வாழ்வா? எந்தச் சமயத்தில் இடிந்து விழுமோ என்று அஞ்சும் படி சிதைந்துள்ள வீட்டில் நிலையாக வாழ முடியுமா? இந்த மெய்யில், உடம்பில்,வாழ்வதை நாம் விரும்புகிறோம். ஞானிகள் இதைப் பொல்லாப் புலைமலிந்த கூடென்று அருவருப்படை வார்கள். ‘இந்தத் தேகத்தை உடையவனாய் நான் வாழ மாட்டேன்’ என்று அப்பர் சுவாமிகள் சொல்கிறார்.

**பொய்யினால் மிடைத்த போர்வை**
**புரை புரை அழுகி வீழ**
**மெய்யனாய் வாழமாட்டேன்.**

சிலகாலம் வாழ்ந்தாலும் அந்தக் காலத்திலாவது நன்மை உண்டாகிறதா? நமக்கு உறுதி பயக்கும் எதையாவது நாம் செய்ய விரும்பினால் நம் உடம்பிலுள்ள ஐம்பொறிகளும் அந்த விருப்பம் கைகூடாமல் நம்மை எங்கெங்கோ இழுத்துச் சென்று விடுகின்றன. பூஜை செய்ய எண்ணி உட்கார்ந்தால் நம் முடைய இந்திரியங்களும் உறுப்புக்களும் அதிலே ஒன்றாமல் தம் போக்கிலே போய்க் கொண்டிருக்கின்றன.

"கைஒன்று செய்ய விழிஒன்று நாடக்
கருத்துஒன்றுஎண்ண
பொய்ஒன்று வஞ்சக நாஒன்று பேசப்
புலால்கமழும்
மெய்ஒன்று சாரச் செவிஒன்று கேட்க
விரும்புமியான்
செய்கின்ற பூசைஎவ் வாறுகொள்
வாய்வினை தீர்த்தவனே?"

என்று **பட்டினத்துப் பிள்ளையார்** பாடுகிறார். அப்படி நாம் ஒரு லட்சியத்தைப் பெற எண்ணி முயன்றால் ஐம்பொறிகளும் மாறாகத் தொழிற்படுகின்றன.

**வேண்டிற்று ஒன்று ஐவர் வேண்டார்.**

அந்த ஐம்பொறிகளைக் கொண்டே நாம் நம் லட்சியத்தை அடையப் பாடுபட வேண்டும். இறைவன் திருவுருவைக் காணக் கண்ணும் அவன் புகழைக் கேட்கச் செவியும் வேண்டும். அவனை வணங்க உடம்பு நம் விருப்பப்படி வளைந்து வர வேண்டும். கருவி கரணங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு திசையை நோக்கிச் சென்றால் லட்சியத்தை அடைவது எப்படி?

இந்த நிலையில் அல்லற்பட்ட அப்பர் இறைவனுடைய சிவந்த தாமரை போன்ற செம்மையான திருவடிகளைத் தரிசிக்க ஆசைப்பட்டார். அந்த ஆசை நிறைவேறக் கருவி கரணங்கள் ஒத்துழைக்க வேண்டாமா? அவை ஏறுக்கு மாறாக இருந்தால் இறைவனை எப்படி வழிபடுவது? பொறிகளின் திருவிளையாடல்களினூடே சிக்கித் தவிக்கும்போது இறைவனைத் தரிசிப்பது எப்படி? புகழ்வது எப்படி? அவன் திருக்கோயிலை வலம் வருவது எப்படி? பூஜை புரிவது எப்படி? தியானம் செய்வது எப்படி? ஒன்றும் செய்ய முடியாது.

இந்த ஐவர்களின் போராட்டத்தைப் போக்க என்ன செய்வது? அறிவினாலும் ஆற்றலாலும் மிக்கவர்கள் உலகில்

இருக்கிறார்கள். அவர்களைப் பார்த்தால் அவர்களும் இந்த ஐவரால் அலைக்கப்பட்டு உழல்கிறார்கள். அப்படியானால் என்ன செய்வது? இறைவன் திருவடியைத் தரிசிக்க வேண்டும் என்ற ஏக்கம் அவரிடம் ஒரு காலைக்கு ஒரு கால் மிகுதியாகி வந்தது.

கடைசியில் யாருடைய சேவடியைக் காண ஆசைப்பட்டாரோ அவரிடத்திலே முறையிட்டுக் கொள்வதே சரி என்று தீர்மானித்தார். ''ஐயனே, உன் திருவடியைக் காணும் பொருட்டு நான் செயலிழந்து அலந்து போய்விட்டேன். அதிகை வீரட்டத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே, நீதான் என் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும்'' என்று புலம்பினார்.

**பொய்யினால் மிடைந்த போர்வை**
**புரைபுரை அழுகி வீழ**
**மெய்யனாய் வாழ மாட்டேன்;**
**வேண்டிற்றுஒன்று ஐவர் வேண்டார்;**
**செய்யதா மரைகள் அன்ன**
**சேவடி இரண்டும் காண்பான்**
**ஐய, நான் அலந்து போனேன்,**
**அதிகைவீ ரட்ட னீரே.**

* ஐயனே, அதிகைவீரட்டத்தில் எழுந்தருளிய பெருமானே, நிலையாமை யென்னும் பொய்யினால் செறிந்த உடம்பின் தோலாகிய போர்வை, பக்கம் பக்கமாக அழுகி வீழும்படியாக, இந்த உடம்பை உடையவனாய் வாழும் ஆற்றல் இல்லேன்; நான் எதை வேண்டுகின்றேனோ அந்த ஒன்றை இந்த உடம்பிலுள்ள ஐம்பொறிகள் விரும்புவதில்லை. சிவந்த தாமரைகளைப் போன்ற நின் செம்மையான திருவடிகள் இரண்டையும் தரிசனம் செய்வதற்கு நான் துன்புற்றுச் செயலிழந்து போனேன்.*

[மிடைந்த-செறிந்த; முடைந்த எனலும் ஆம். போர்வை என்றது தோலை. புரை-பக்கம். மெய்யனாய் - உடம்பை உடையவனாய். மாட்டேன்–ஆற்றல் இல்லேன். ஐவர்-ஐம் பொறிகள்; தொகைக் குறிப்புச் சொல்; உயர்திணையாகச் சொன்னது இழிவுக் குறிப்பு. செய்ய தாமரை-செந்தாமரை; வயல்களில் அலரும் தாமரை என்றும் கொள்ளலாம். காண்பான்-காணும்பொருட்டு. அலத்தல்-துன்புற்று ஏங்கி நிற்றல். வீரட்டனார் என்பதன் முன்னிலை விரட்டனீர் என்பது. ஏ-விளியுருபு.]

இந்திரியங்களின் போக்கிலே செல்பவர்களுக்கு இறைவன் திருவருள் கிட்டாது என்ற கருத்து இதனால் புலப்படுகிறது.

நான்காம் திருமுறையில் 26-ஆம் திருப்பதிகத்தில் வரும் இரண்டாவது பாட்டு இது.

## 18. அயர்த்துப் போனேன்

மக்களைப் பிணிக்கும் நோய்களில் மிகவும் வலியது காமம் என்னும் நோய். பெருந்தவம் செய்த விசுவாமித்திரர் முதலியவர்களும் அந்த நோய்க்கு ஆளாகி அதுகாறும் செய்த தவத்தைக் குலைத்துக்கொண்டிருக்கிறார்கள். உடல் வலிமை உள்ள ஒருவனுக்கு நோய் வந்தால் அந்த நோய் அவனுடைய வலிமையைப் போக்கி மெலிவை உண்டாக்குவது போல, திண்மையான நெஞ்சுடையவர்களும் காம நோயின் வாய்ப் பட்டால் மனத்திண்மை குறைந்து அல்லற்படுகிறார்கள். காம நோயை அண்டாமல் செய்து, அது தலைகாட்டினால் அதை அழிக்கும் ஆற்றல் பெற்றவர்களின் உள்ளத்தில் இறைவன் தன் அருள் தோன்ற வந்து நிற்பான்.

அப்பர் சுவாமிகள் இந்த நோயால் அலைக்கப்பட்டதாகச் சொல்கிறார். அவர் இளமைக் காலத்தில் அப்படி இருந்திருக் கலாம். இறைவனுடைய அருளைப் பெற்ற காலத்திலும் அந்தப் பழைய வாழ்க்கையை நினைந்து இரங்குகிறார். 'நான் காமம் என்னும் வெம்மையான நோயைக் கழிக்காமல் இருந் தேனே!' என்கிறார்.

**கழித்திலேன் காம வெந்நோய்.**

சுற்றத்தார் என்றும் நண்பர்கள் என்றும் எண்ணி அவர்கள்பாலும், நமக்கு இனிய பொருள்களென்று இந்திரிய சுகத்தைத் தரும் பொருள்களின்பாலும் பற்று வைத்து அவற்றினிடம் ஆசை கொண்டு அந்தப் பாசத்தால் துன் புறுறாராம். அதை ஒழிக்கவில்லையாம்.

**காதன்மை என்னும் பாசம்**
**ஒழித்திலேன்.**

புறக்கண்ணைக் கொண்டு உலகத்திலுள்ள பொருள்களைப் பார்த்து மகிழ்ந்தும், அவற்றைப் பெற வேண்டுமென்று ஆசைப்பட்டும், அவற்றைப் பெற முயன்றும், அவற்றால் வரும் நிலையற்ற இன்பத்திலே மயங்கியும் நாம் வாழ்கிறோம். இந்த ஊனக் கண்ணால் பார்க்கும் பார்வையன்றி ஞானக் கண்ணால் பார்க்கும் பார்வை நமக்கு இல்லை.

"முகத்தில் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்,
அகத்தில் கண்கொண்டு பார்ப்பதே ஆனந்தம்"

என்று **திருமூலர்** பாடுவார். அந்த அகக் கண் நமக்கு மூடிக் கிடக்கிறது. ஞானம் என்னும் இமையைத் திறந்து அகக் கண்ணால் பார்க்கும் ஞானப் பார்வையை நாம் பெறவில்லை. அப்பர் சுவாமிகளும் அப்படி இருந்ததாகச் சொல்கிறார்.

**ஊன் கண் நோக்கி,**
**உணர்வு எனும் இமை திறந்து**
**விழித்திலேன்.**

'ஊனக் கண்ணினால் நோக்கினேனே அன்றி உணர்வாகிய ஞானக் கண்ணால் நோக்கவில்லை' என்கிறார். ஞானக்கண்ணால் பார்க்கிறவர்களுக்கு எல்லாம் இறைவன் மயமாகத் தோன்றும்.

நாம் அறிவென்னும் செம்மையின்றி அறியாமை யென்னும் வெளிறு தோன்ற நிற்கிறோம். இதனால் தக்கது இன்னது, தகாதது இன்னது என்று பகுத்து அறியும் ஆற்றல் இல்லாமல் போகிறோம்; அதனால் மேலும் மேலும் பாவங்களை ஈட்டுகிறோம்.

நல்ல வியாபாரிகள் சரக்குக் கொள்ளப் போனால் அவற்றின் தரத்தை ஆராய்ந்து நல்லவற்றையே தேர்ந்தெடுப்பார்கள். வியாபார நுட்பம் அறியாதவர்கள் வியாபாரம் செய்யப் புகுந்தால் கண்ட கண்ட சரக்குகளையெல்லால் வாங்குவார்கள். நாம் நம் அறியாமை தோன்றும்படி பாவம் என்னும் சரக்கையே ஈட்டிக்கொள்கிறோம். அறிவு இருந்தால்,

"இது தகாதது; இது தக்கது" என்று தேர்ந்து தக்கதை ஈட்டிக் கொள்ளலாம். அறிவில்லாத வெளிறு படைத்த நாமோ பாவத்தையே ஈட்டி மூட்டை கட்டிக்கொள்கிறோம். அவ்வாறு செய்வதனால் நாம் அறியாமையை உடையவர்கள் என்பதை அறிஞர்கள் தெரிந்து கொள்கிறார்கள்.

**வெளிறு தோன்ற வினை எனும்**
**சரக்குக் கொண்டேன்.**

நாம் சொல்ல வேண்டியதை அப்பர் சுவாமிகள் சொல்லிக் கொள்கிறார்.

இந்தப் பிறவி எடுப்பது நாம் முன் செய்த வினைகளை அநுபவித்துப் போக்கிக் கொள்வதற்காக, ஆற்றில் நீராடப் போகிறவர்கள் நீரில் மூழ்கித் தம் உடம்பிலுள்ள அழுக்கைப் போக்கிக் கொள்வார்கள். எருமையோ ஆற்றின் ஓரக்காலில் உள்ள சேற்றிலே விழுந்து புரண்டு அழுக்கை ஏற்றிக் கொள்ளும். அறிஞர்கள் ஆற்றில் நீர் ஓடும் இடத்துக்குச் சென்று குள்ளக் குளிர நீராடித் தூய்மை பெறுவார்கள்.

வினையை அநுபவித்துத் தீர்த்துக்கொள்ளும்படி இந்தப் பிறவியை இறைவன் நமக்குக் கொடுத்திருக்கிறான். நாமோ பழைய வினையை அநுபவித்துத் தீர்த்துக்கொண்டே புதிய வினையைச் சேர்த்துக்கொள்கிறோம். பழைய வினைக்குப் பிராரப்தம் என்று பெயர். நாம் ஈட்டும் புதிய வினைக்கு ஆகாம்யம் என்று பெயர். பிராரப்தத்தைக் கழித்துக் கொள்வதோடு நில்லாமல் ஆகாம்யத்தைக் கூட்டிக் கொள்கிறோம். இது அறியாமையின் விளைவு.

**வெளிறு தோன்ற**
**வினை எனும் சரக்குக் கொண்டேன்.**

வினைகளை அழிக்கும் பரிகாரங்களை நாம் நாடுவதில்லை. இப்போது அநுபவிக்கும் வினைப்பயனோடு நின்றுவிட்டால் இனிப்

பிறவி வாராது. ''வினைப் போகமே இந்தத் தேகம் கண்டாய்'' என்று **பட்டினத்தார்** சொல்கிறார்.

ஒருவனுடைய மகன் வியாபாரம் செய்யப் புகுந்து அறியாமையினால் கடன் வாங்கிச் சுமத்திக் கொள்கிறான். கருணையுடைய தகப்பன் அவனுக்குப் பொருளைத் தந்து, ''கடனையெல்லாம் போக்கி விட்டுச் சாமர்த்தியமாக வியாபாரம் செய்து பொருளை ஈட்டு'' என்று சொல்கிறான். அறிவற்ற அந்தப் பிள்ளை தந்தை தந்த பொருளைக் கொண்டு பழைய கடன்களைக் கொடுத்து மீண்டாலும், மறுபடியும் தன் அறியாமையால் புதிய கடன்களை வாங்கி இன்னலடைகிறான். இறைவன் நமக்கு இந்தப் பிறவியை அளித்து, தனு கரண புவன போகங்களை வழங்கி, பழைய வினையைப் போக்கிக்கொண்டு வினையற்றவனாக வா என்று அனுப்புகிறான். நாமோ பழைய வினையை அநுபவித்துக் கழித்துக் கொண்டிருக்கும் போதே புதிய வினைகளைச் சேர்த்துக் கொள்கிறோம்; வினைகளை அழிக்காமல் இருக்கிறோம்.

**வினை எனும் சரக்குக் கொண்டேன்;**
**அழித்திலேன்.**

பொருளெல்லாம் அழிந்துக் கடனில் மூழ்கித் தத்தளிக்கும் போது, ''இனி என்ன செய்வது?'' என்று அயர்ந்து நிற்கிறோம். கடன் சுமையினின்றும் நீங்க வழி தெரியாமல் அலமந்து செயலொழிந்து அயர்ந்து வாடுகிறோம்.

**அழித்திலேன்; அயர்த்துப் போனேன்;**
**அதிகை வீரட்டனீரே.**

திருவதிகை வீரட்டத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானை நோக்கி இப்படி முறையிட்டுக் கொள்கிறார் அப்பர் சுவாமிகள்.

'எனக்கு அகக்கண் அளித்திருக்கிறாய். ஆனால் அந்தக் கண் மூடியே கிடக்கிறது. இமையைத் திறந்து அகக் கண்ணால்

பார்க்கும் ஆற்றல் எனக்கு இல்லாமல் போயிற்று. ஞானம் வந்தால் அகக் கண்ணின் இமை மூடிக் கிடக்காமல் திறக்கும்; மெய்ஞ்ஞானப் பார்வை உண்டாகும். அவ்வாறு இல்லாமல் அயர்த்துப் போய் நிற்கிறேன்' என்று இரங்குகிருர் திருநாவுக் கரசர்.

**கழித்திலேன் காம வெந்நோய்;**
**காதன்மை, என்னும் பாசம்**
**ஒழித்திலேன்; ஊன்கண் நோக்கி**
**உணர்வுஎனும் விழிதி றந்து**
**விழித்திலேன்; வெளிறு தோன்ற**
**வினைஎனும் சரக்குக் கொண்டேன்;**
**அழித்திலேன், அயர்த்துப் போனேன்!**
**அதிகைவீ ரட்ட னீரே.**

*திருவதிகை வீரட்டத்தில் எழுந்தருளிய எம்பெருமானே, காமம் என்னும் கொடிய நோயை நான் விடவில்லை; ஆசை என்னும் பாசத்தை ஒழித்து விடவில்லை; ஞானம் என்னும் அகக் கண்ணின் இமையைத் திறந்து விழித்துப் பார்க்கவில்லை; அறியாமை தோன்றும்படி புதிய வினைகளாகிய சரக்கை ஈட்டிக் கொண்டேன்; அவற்றை அழித்தேன் இல்லை. இப் போது எந்த வழியும் தெரியாமல் செயலொழிந்து அயர்ந்துப் போய் நிற்கிறேன், *

[வெந்நோய்-போக்கலாகாக் கொடுமையை உடைய நோய்; அசாத்திய வியாதி என்பர். காதன்மை-ஆசையாகிய தன்மை. பாசம் - பற்று. ஊண்கண் - உடலிலுள்ள புறக்கண். உணர்வு - ஞானம். இமை - ஞானக் கண்ணின் இமை; முதலுக்குரிய செயலைச் சினைக்குரியதாகச் சொல்வது மரபு; 'என் கை இளைத்ததோ?' என்று சொல்வது போலவும், 'தலைக்கு ஒரு காசு பெற்ருர்' என்று சொல்வது போலவும் அமைந்தது இது. விழித்திலேன் - உண்முக விழிப்பைப் பெற்றிலேன். வெளிறு - ஒன்றும் இல்லாத வெறுமை; இங்கே அறியாமை;

அறியாமை தோன்ற அதனால் விழிப்பைப் பெறவில்லை என்றும் கொள்ளலாம். வினை - ஆகாம்யம். வினையை அழித்திலேன் என்று பின்னும் வினையைக் கூட்டிப் பொருள் கொள்க. அயர்ந்து என்பதே அயர்த்து என்று வந்தது; ஒன்றும் செய்ய இயலாமல் ஓய்ந்து போய் நிற்கும் நிலை அது. வீரட்டனீரே: வீரட்டனார் என்பதன் முன்னிலை; ஏ, விளியுருபு.

காமநோய் வராமல் காத்து எதனிடத்தும் பற்று வையாமல் உண்முகக் கண்ணாகிய ஞானத்தைப் பெற்று அறியாமையைப் போக்கி வினைகளை நீக்கினால் இறைவன் திருவருளால் பேரின்பப் பெருவாழ்வு கிடைக்கும். இங்கே எதிர்மறையாக உள்ளவற்றை உடன்பாடாக்கினால் இந்தக் கருத்துத் தோன்றும்.]

நான்காம் திருமுறையில் 26-ஆம் திருப்பதிகத்தில் ஏழாவது திருப்பாட்டாக உள்ளது இது.

## 19. ஊடலும் ஆடலும்

பகீரதன் யார் யாரையோ நோக்கித் தவம் புரிந்தும் கங்கையைக் கொண்டுவர முடியவில்லை. கங்கையையே வேண்டித் தவம்புரிந்தான். "நான் இறங்கி வந்தால் என்னைத் தாங்குவார் யார்?" என்று இறுமாப்புடன் அவள் சொன்னாள். பிறகு பகீரதன் இறைவனை நோக்கித் தவம் புரிந்தான். இறைவன் கங்கையை ஏற்றுக் கொள்வதாக அருள் பாலித்தான். மறுபடியும் கங்கையை நோக்கித் தவம் செய்து அவளை இறங்கி வரும்படி வேண்டினான். கங்கையோ மிக்க செருக்கோடு, 'விண்ணுக் கடங்காமல், வெற்புக் கடங்காமல் மண்ணுக் கடங்காமல்' அலைகளை வீசிக்கொண்டு வந்தாள். இறைவன் கங்கையைத் தன் ஒரு சடையில் ஒரு துளியைப் போல ஏற்று அடக்கினான். மறுபடியும் பகீரதன் தவம் புரியக் கங்கையை வெளியிலே ஓடுமாறு விட்டு அவனுடைய முன்னோர்களின் எலும்பிலே பாயச் செய்தான். அதனால் அவர்கள் நற்கதியை அடைந்தார்கள்.

கங்கை ஆரவாரத்தோடு வந்தபோது அவளை இறைவன் தன் சடையில் ஏற்றுச் சூடினான்.

**சூடினார் கங்கையாளை.**

அவள் வந்த ஆரவாரத்தை உமாதேவி கேட்டாள். தன்னுடைய கொழுநன் தலையின்மேலே ஒருத்தி வந்து அமர்ந்து கொண்டதையும், அவளை அவன் தலையால் தாங்குவதையும் அறிந்த அன்னைக்குக் கோபம் வந்துவிட்டது. 'யாரோ ஒருத்தியை இவர் நம்மை அறியாமல் தலையாலே தாங்குகிறாரே!' என்று ஊடல் கொண்டாள்.

**சூடிய துழனி கேட்டு அங்கு**
**ஊடினாள் நங்கையாளும்.**

இறைவன் எம்பெருமாட்டி ஊடல் கொண்டிருக்கிறாள் என்பதை உணர்ந்து கொண்டான். அதைப் போக்குவது எப்படி என்று யோசித்தான். பெண்களுக்கு ஆடல் பாடல்களில் ஆர்வம் அதிகம். ஆகவே அம்பிகையின் ஊடலை நீக்க வேண்டி வாய்திறந்து சாம வேதத்தைப் பாடினான். அவன் எப்போதும் சாம வேதத்தைப் பாடிக் கொண்டே இருப்பவன். "சாம வேத கீதர்" என்று அவனைச் சொல்வார்கள். இப்போது அம்பிகையின் காதில் நன்றாக விழும்படியாகச் சாமவேதத்தைப் பாடினான்.

**ஊடலை ஒழிக்க வேண்டிப்**
**பாடினார் சாம வேதம்.**

அதோடு நிற்கவில்லை. ஆடுவதென்றால் அண்ணலுக்கு மிகவும் விருப்பம். பாடிக்கொண்டே தாளம் போட்டான் அந்தத் தாளத்துக்கு ஏற்ப நடனம் ஆடினான்.

**பாடிய பாணியாலே**
**ஆடினார்.**

பாடும் போதே இறைவியின் கோபத்தில் பாதி போய் விட்டது. அவன் தாளம் போட்டு ஆடத் தொடங்கவே பெருமாட்டியின் ஊடல் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயிற்று. அவளும் தாளம் போடத் தொடங்கி விட்டாள் ஐயன் நடனமிடும்போது அம்மை தாளம் கொட்டுவது வழக்கம். தன்னை அறியாமலே கைகள் தாளம் கொட்ட கண்கள் ஐயனுடைய திரு நடனத்தைக் கண்டு களிக்க கங்கை சடையில் இருப்பதை மறந்தாள்; சினத்தை விட்டாள்

இப்படிச் செய்தான் இறைவன் என்பதைத் திருவதிகை வீரட்டத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானைப் பாடும்போது சொல்கிறார் அப்பர் சுவாமிகள். கெடிலத்தை ஒரு பக்க எல்லையாக உடைய திருவதிகை வீரட்டானத்துப் பெருமான் கங்கையைச் சூடி, அதனால் ஊடல் கொண்ட உமை மங்கைக்காக ஆடி, அமைதியை உண்டாக்கினான்.

**சூடினார் கங்கை யாளைச்**
**சூடிய துழனி கேட்டுஅங்கு**
**ஊடினாள் நங்கை யாளும்;**
**ஊடலை ஒழிக்க வேண்டிப்**
**பாடினார் சாம வேதம்;**
**பாடிய பாணி யாலே**
**ஆடினார், கெடில வேலி**
**அதிகைவீ ரட்ட னாரே.**

* கெடில நதியை ஒரு பக்க எல்லையாகக் கொண்ட திருவதிகை வீரட்டத்தில் எழுந்தருளிய சிவபெருமானார், கங்கா தேவியைத் தம் சடையில் அணிந்தார்; அப்படி அணிந்த போது அம்பிகை ஊடல் கொண்டாள்; அந்த ஊடலைப் போக்குவதை விரும்பி, சாம வேதம் பாடினார்; அப்படிப் பாடும்போது தாளம் போட்டுப் பாட, அந்தத் தாளத்துக் கேற்ப நடனம் ஆடினார். (அம்பிகையின் ஊடல் தீர்ந்தது.) *

[சூடினார்-தலையில் அணிந்தார். ஆரவாரத்தோடு வந்தாலும் இறைவன் அவளுடைய முழக்கத்தை அடக்கி ஒரு மலரைத் தலையில் அணிவதுபோல அணிந்தார். துழனி-ஓசை. அங்கு-அப்பொழுது. நங்கையாள்-உமாதேவி. கங்கையாள் கூடினாள்; அது கண்டு நங்கையாள் ஊடினாள்; நங்கையாளும்: உம்மை, அசை. பாணியால்-தாளத்துக்கு ஏற்றபடி. கெடிலம்-கெடிலம் என்னும் ஆறு. வேலி-எல்லை. அதிகை வீரட்டனார்: எழுவாய். ஏகாரங்கள், அசை.]

நான்காம் திருமுறையில் 27ஆம் திருப்பதிகத்தில் வரும் இரண்டாவது பாட்டு இது.

# 20. ஐவரோடும் வைத்தார்

**த**ம்மை ஆட்கொண்ட திருவதிகை வீரட்டப் பெருமானைப் பலபடியாகப் பாடி மகிழ்பவர் அப்பர் சுவாமிகள், அந்தப் பெருமானை மனத்தால் தியானித்தும் வாக்கினால் பரவிப் பாடியும் உடம்பால் வணங்கியும் தொண்டு பூண்டவர்; இறைவருடைய இயல்பை யெல்லாம் உணர்ந்தவர். அவர் பாடும் ஒரு பாடலை இப்போது பார்ப்போம்.

எம்பெருமானைப் பலகால் தரிசித்துத் தரிசித்து வழிபடுபவர்கள் அவரை அகத்துள்ளே கண்டு மகிழ்வார்கள். நாம் ஒரு முறை ஒரு பொருளைக் கண்டதோடு நின்று விட்டால் அதை மீண்டும் நினைக்கும்போது அது நம் மனத்தில் தட்டுப்படாது. பல காலம் பார்த்துப் பழகும் நம் மனைவியின் வடிவத்தைக் கூடத் தனியே இருந்து நினைத்தால் அந்த வடிவம் முற்றும் தெளிவாக நம் மனத்தில் தோன்றுவதில்லை. அன்பர்கள் இறைவரைப் பலகால் தரிசனம் செய்து உண்முகத்தே அவருடைய காட்சியைக் காண முயல்வார்கள். நாளடைவில் அந்த வடிவத்தை அகத்திலே காணும் நிலை வரும்.

இவ்வாறு பழகாவிட்டால் பெருமானை அகத்தில் காணுவதரிது. பலகாலும் தரிசித்தவர்களுக்கே உண்முக தரிசனம் அரிது என்றால் அவரைக் காணாமலே பொழுது போக்குவார் அவரை எப்படி நினைக்க முடியும்? அத்தகைய இயல்புடையவர்கள் கருத்தில் அவர் நிற்கமாட்டார்.

இறைவரைத் தரிசித்துப் பழகினாலும் மனத்தில் பல பல எண்ணங்களை உடையவர்கள் அவரை உண்முகத்தே காண முடியாது. உள்ளத்தை மாசு மறுவற்றதாக்கித் திருத்தியவர்கள் அங்கே அவரைக் காண முடியும். மனம் பலபடியாகச்

சென்று அலையும் இயல்புடையது. இந்த இயல்பை மாற்றிச் சித்த விருத்திகளை அடக்கி மனத்தைப் பளிங்குபோல வைக்கும் அன்பர்கள் உள்ளத்தே அவர் வருவார். அவ்வாறு உள்ளத்தைத் திருத்துவதையே யோகம் என்று சொல்வர்.

'யோக: சித்தி வ்ருத்தி நிரோத:'

என்பது **யோக சூத்திரம்**. இந்த யோகம் கைவரப் பெற்றவர்களுக்கல்லாமல் அவருடைய அகமுகக் காட்சி கிடைக்காது.

**காணிலார் கருத்தில் வாரார்;**
**திருத்தலார் பொருத்தல் ஆகார்.**

மனத்தைத் திருத்தமாக வைக்கும் ஆற்றலில்லாதவர்கள் எவ்வளவு முயன்று வருந்திலும் தம்முடைய உள்ளத்தில் அவரைப் பொருத்தியிருக்கும்படி செய்ய முடியாது.

இறைவருக்குப் பல வடிவங்கள் உண்டு. எல்லா வடிவங்களையும் எண்ணித் தியானம் செய்வதென்பது இயலாத காரியம். அவருடைய வடிவங்கள் எல்லாவற்றையும் நினைக்க முடியாது. நம் மனத்தில் பதியும் வகையில் எந்தத் திருவுருவம் இருக்கிறதோ அதையே மீட்டும் மீட்டும் தியானித்து உள்ளத்தில் பொருத்திக்கொள்ள வேண்டும்.

அவர் எல்லையிறந்தவராதலின் அவரை முழுவதும் நம் உள்ளத்தில் அடக்க முடியாது.

**ஏண் இலார்.**
[ஏண்-எல்லை.]

காவிரியில் நீராடி அதன் நீரை எடுத்து வருகிறவர்கள் காவிரி நீர் முழுவதையும் கொண்டு வருவது என்பது சாத்தியமன்று. தாம் கொண்டு சென்ற பாத்திரத்தை நிரப்பிக் கொண்டு வரலாம். அப்படியே, எல்லையிறந்த அவரை முழுவதும் உள்ளத்தே அடைத்து விடுவது என்பது யாராலும் முடியாத காரியம். நம் மனம் முழுவதும் அவர் வடிவம்

நிரம்பி நிற்க, வேறு எண்ணங்களே எழாமல் செய்து விடலாம்.

அந்தப் பெருமான் அருள் கிடைத்து விட்டால் நமக்கு இறப்பும் பிறப்பும் இல்லாத பேரின்ப வாழ்வு கிடைக்கும். அவர் இறப்பும் இல்லாதவர்; பிறப்பும் இல்லாதவர்.

**இறப்பும் இல்லார், பிறப்பு இலார்.**

அன்பர்கள் அவரை மறந்து வாழமாட்டார்கள். பல காலம் எண்ணி எண்ணிப் பயின்றவர்களாதலின் அவர்களால் அவரை மறக்க முடியாது. அவர்களால் அவரைத் துறந்து வாழ முடியாது. அவர்கள் துறக்க எண்ணினாலும் அவர்களுடைய அன்பிலே கட்டுப்பட்ட பெருமான் துறக்கமாட்டார்.

**துறக்கல் ஆகார்.**

நம்மிடம் ஐந்து பொறிகளை வைத்திருக்கிறார். இந்தப் பஞ்சேந்திரியங்களும் வெவ்வேறு திசையில் நம்மை இழுத்தடிக்கின்றன. ஒரு முறை ஒரு பொருளை அவாவி நுகர்ந்து அதனால் இன்பம் சிறிது நேரம் கிடைக்கும், பிறகு அது துன்பத்தையே தருவது நம் அநுபவம். தூண்டிற் புழுவை விரும்பி அதை உண்ணப் போய்த் தூண்டில் முள்ளில் மாட்டிக் கொள்ளும் மீன்களைப் போல அல்லற்படுகிறோம். இந்திரிய சுகங்கள் எல்லாம் முதலில் இன்பம் தருவன போல இருந்தாலும், நம்மை உலகியலிலே மாட்ட வைத்து, அவாவை அதிகமாக்கி, மீட்டும் மீட்டும் பிறந்தும் இறந்தும் திரியும்படி வைத்துவிடும். ஒரு முறை துன்பம் பெற்றோமே என்று எண்ணாமல், அப்போது பெற்ற தோல்விக்கு நாணாமல், மீட்டும் மீட்டும் அவற்றை அவாவிச் செல்லும் இயல்புடையவை நம்முடைய பொறிகள். அவற்றோடு கலந்து நாம் வாழ்கிறோம். அவற்றை அடக்கி நம் வசப்படுத்தாவிட்டால் அவை நம்மை அடக்கித் தம்வசம் ஆக்கிவிடும். அவ்வாறு நம்மோடு கலந்து

நின்று நம்மை உழலச் செய்யும் ஐவரோடும் நம்மை விரவும் படி இறைவர் படைத்திருக்கிறார்.

**நாண் இலார் ஐவரோடும்**
**இட்டு எனை விரவ வைத்தார்.**

அந்த ஐம்பொறிகளையும் நம்முடைய பாதுகாப்புக்குள் வைக்கும் ஆற்றல் நமக்குக் கிடைத்துவிட்டால் பிறகு அவா அற்று விடும். அதனால் பிறப்புத் துன்பத்தை மாற்றிக் கொள்ளலாம். அதற்கு ஞானம் உதவும்.

''உரன்என்னும் தோட்டியால் ஓரைந்தும் காப்பான்
வரன்என்னும் வைப்புக்கோர் வித்து''

என்று திருவள்ளுவர் சொல்கிறார்.

எம்பெருமான் எப்படி இருக்கிறார்? அவர் எல்லை இறந்தவர். இதுதான் அவர் வடிவம் என்று அறுதியிட்டுச் சொல்ல முடியாது. சிவபெருமான், திருமால், முருகன் என்ற மூர்த்திகளாய் ஆண் வடிவம் கொண்டு வருவார். அதைக் கொண்டு அவர் ஆண் என்று தீர்மானித்து விட முடியாது.

**ஆண் அலார்.**

பராசக்தியாக எழுந்தருள்பவரும் அவரே, சக்திபேதங்கள் பல, அம்பிகையை உபாசிக்கிறவர்கள் அந்தப் பேதங்களை அறிவார்கள். எப்போதும் அன்னை, இராஜராஜேசுவரி, திரிபுர சுந்தரி என்று சொல்வார்கள். அதைக்கொண்டு பரம்பொருள் பெண் வடிவுடையது என முடிவுகட்ட இயலாது.

**பெண்ணும் அல்லர்.**

ஆணாக வருவார். ஆனால் அதுவே அவருடைய இயற்கை உருவம் அன்று. பெண் வடிவம் ஏற்று அன்பர்களுக்குக் காட்சி தருவார். அந்த வடிவந்தான் அவருடைய இயல்பான திருவுருவம் என்று வரையறுக்க முடியாது. எல்லாமாய் இருந்தும் அவர் அவற்றைக் கடந்து நிற்பவர்.

''எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை''
என்று பரஞ்சோதியார் பாடுவார்.

இவ்வாறு, இன்னபடி இருப்பார் என்று ஒரு வரம்புக்குள் அடக்க முடியாதவர், அன்பர்கள் தரிசித்து உய்யும்பொருட்டுத் திருவதிகை விரட்டத்தில் வடிவம் காட்டிக் கொண்டு எழுந்தருளியிருக்கிறார். அவரைத் தரிசித்து உள்ளத்திலே வைத்துத் தியானித்துப் பொறிகளை ஒரு முகப்படுத்திச் செயலற்று நிற்பவர்களுக்கு அவர் எல்லையிறந்த பெருமான் என்ற உண்மை புலனாகும்.

நாம் ஓர் எல்லைக்குள் நின்று அவரைப் பணிந்து வழிபட்டுத் தியானித்துப் பொறிகளின் வசப்படாமல் நின்றால், எல்லையிறந்த இன்பத்தை அடையலாம்; எல்லையிறந்த பரவெளியின் எல்லைக்குள்ளே புகுந்து ஆனந்த வாரியில் மூழ்கலாம்.

''சொல்லுகைக்கு இல்லைஎன்று
எல்லாம் இழந்துசும் மாஇருக்கும்
எல்லையுட் செல்ல எனைவிட்டவா!''

என்று இத்தகைய அநுபவத்தில் திளைத்த **அருணகிரியார்** சொல்கிறார்.

இறைவருடைய நிலைகளை உணர்ந்த அப்பர் சுவாமிகள் பாடுகிறார்.

**காணிலார் கருத்தில் வாரார்;**
**திருத்தலார் பொருத்தல் ஆகார்;**
**ஏண்இலார்; இறப்பும் இல்லார்;**
**பிறப்புஇலார்; துறக்கல் ஆகார்;**
**நாணிலார் ஐவ ரோடும்**
**இட்டுஎனை விரவ வைத்தார்;**
**ஆண்அலார்; பெண்ணும் அல்லார்;**
**அதிகைவீ ரட்ட னாரே.**

* திருவதிகை வீரட்டத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவர், தம்மைத் தரிசனம் செய்யாதவர்களின் கருத்துக்குள்

வந்து நிற்கமாட்டார்: தம் உள்ளத்தைத் திருத்தும் ஆற்றல் இல்லாதவர்கள் பொருத்திக் கொள்ள ஆகாதவர் ; முன்னைய அநுபவத்தால் துன்புற்றாலும், பழிபாவம் வருமே என்னும் நாணம் இல்லாத ஐந்து பொறிகளோடும் என்னை இட்டு வைத்து அவற்றோடு கலசி அல்லற்பட வைத்தார்; அவர் ஆண் அல்லாதவர்; பெண்ணும் அல்லாதவர்.*

[காணிலார் — தரிசிக்காதவர்கள்; காண் — காணுதல்; முதல்நிலைத் தொழிற்பெயர். திருத்தலார்—திருத்தும் செயல் இல்லாதவர்கள் ; உள்ளத்தைத் திருத்தித் தூய்மை செய்யாதவர்கள். பொருத்தல்—உள்ளத்தே பொருந்தியிருக்கச் செய்தல். பொருத்தல் ஆகார்—பொருத்த முடியாதவர். ஏண்—எல்லை. இறப்பும்: உம்மை எதிரது தழீஇய எச்சவும்மை; பிறப்பும் இலார் என்ற உம்மை தொக்கது. நாண்—முன்பு பட்ட அநுபவங்கள் துன்பத்திலே ஆழ்த்திவிட்டனவே, இனி அத்தகைய செயல்களில் ஈடுபடக்கூடாது என்ற நாணம். ஐவர்-ஐம்பொறிகள்; தொகைக் குறிப்புச் சொல். உயர்திணையாகச் சொன்னது இழிவுக் குறிப்பு. இட்டு-என் வசமின்றி என் வினைக்கு ஈடாக இட்டு வைத்து; குற்றம் செய்தவரைப் பிற குற்றவாளிகளோடு சேர்த்துச் சிறையில் இட்டு வைத்தது போல வைத்தார் என்றபடி. விரவி-விரவ; எச்சத்திரிபு. ஐவரோடும் ஈடுபட்டு நான் பொறிகளினின்றும் வேறுபட்டவன் என்பதை உணராமல் அவரோடு ஒட்டிக் கிடக்கச் செய்தார். பெண்ணும்: உம்மை, இறந்தது தழீஇய எச்சம். அதிகை வீரட்டனார்: எழுவாய்.]

இறைவரைத் தரிசித்துத் தியானம் செய்து வழிபட்டால் பஞ்சேந்திரியங்களை வென்று இறப்பும் பிறப்பும் இல்லாத பேரின்ப வாழ்வைப் பெறலாம் என்ற கருத்துக் குறிப்பாற் பெறப்பட்டது.

இது நான்காம் திருமுறையில் 27–ஆம் பதிகத்தில் உள்ள 8-ஆவது திருப்பாட்டு.

தே—8

# 21. நீறுடை அழகர்

இது திருச்செம்பொன் பள்ளி என்னும் திருத்தலம்; இப்போது செம்பொனர் கோயில் என்று வழங்கும். பள்ளி-கோயில். அங்கே எழுந்தருளியுள்ள சிவபெருமானை அப்பர் சுவாமிகளோடு சென்று தரிசிக்கலாம். அவர் எம்பெருமானை அடையாளம் காட்டி நம்மை ஆட்கொள்வார்.

நேரே வந்து பாருங்கள். எம்பெருமானுடைய திருமுடி தெரிகிறதா? அதை உற்றுப் பாருங்கள். இறைவருடைய சடாபாரத்தில் கங்காநதி இருப்பது தெரிகிறதா? பகீரதனுக்காக அதை அவர் தாங்கிப் புறத்தே போகவிட்டார். தவம் செய்பவர்களுடைய முயற்சிக்கு இரங்கி அருள் பாலிக்கும் பெருங்கருணையாளர் அவர். கங்கையாற்றைக் காணும் போது' அவர் அகங்காரத்தை அடக்கிப் பிறருக்கு உபகாரம் பண்ணும் நிலையில் நம்மை வைத்தருளுவார் என்ற எண்ணம் நமக்கு எழ வேண்டும்.

**ஆறுடைச் சடையர் போலும்.**

எல்லாருக்கும் தனுகரண புவன போகங்களை வழங்கும் வள்ளல் அவர். எல்லா உயிர்களிடத்திலும் அருள் கொண்டவர் என்றாலும் தமக்கு இவற்றைத் தந்திருக்கிறரே என்பதை நன்றியறிவுடன் நினைந்து அன்பு செய்யும் அடியவர்களிடத்தில் அவர் அதிக அன்பு பாராட்டுவார். தன்னையே சுற்றிச் சுற்றி வரும் இளங் குழந்தையை எடுத்துக் கொஞ்சி முத்தமிடும் தாய் போல நெருங்கிய அன்பர்களிடத்தில் மிகுதியான அன்பைப் பொழிவார்.

**அன்பருக்கு அன்பர் போலும்.**

அவருடைய அருளே பராசக்தியின் வடிவம். அவர் பாதி, அம்பிகை பாதியாகக் கொண்டு கோலம் காட்டும் பெருமான்

அவர். அவர் எவ்வளவு அளவுடையவரோ, அவ்வளவு அளவில் அவருடைய அருள் நிரம்பி நிற்கும் உமாதேவியை ஒரு பாதியாகப் பங்கில் வைத்த திருமேனியை உடையவர் அவர். அந்தக் கோலம் அவர் முழுக்க முழுக்க அருள்வடி வானவர் என்பதைக் காட்டும்.

**கூறுடை மெய்யர் போலும்.**

'பாம்பு என்ருல் படையும் நடுங்கும்' என்பது பழமொழி. பாம்பு என்று சொன்ஞலே நமக்கு அச்சம் உண்டாகிறது. நேரில் பார்த்தால் நடுங்குகிருேம். நம் பக்கத்தில் வந்து விட்டால் ஓடிப் போகிருேம். ஆஞல் அவரோ கொலே செய்யும் பாம்பை அணிகலஞகப் பூண்டிருக்கிருர். அரையில் அரை ஞாஞகக் கட்டியிருக்கிருர். நஞ்சு கக்கும் பாம்பு அவரிடத்தில் அடங்கி ஒடுங்கி அவருக்கு அணிகலஞக இருக்கிறது. நம் முடைய இந்திரியங்களென்னும் ஐந்து தலேகளேயுடைய பாம்பு நம் மனம். இது அவா என்னும் நஞ்சைக் கக்குகிறது. அதஞல் மேலும் மேலும் பிறந்தும் உழன்றும் இறந்தும் வருகிருேம். இந்த மனத்தையும் ஐம்பொறிகளேயும் அவரோடு இணேத்து விட்டால்; அவருடைய வழிபாட்டில் ஈடுபடச் செய்துவிட்டால், இந்த ஐந்து தலேநாகம் நம்மை ஒன்றும் செய்யாமல் நமக்கு அடங்கி ஒடுங்கி நிற்கும். இதை அச்சத்துடன் பற்றிக்கொண்டு வாழும் நிலே மாறி, நம் விருப்பம் போல இது செயற்படும்.

**கோள் அரவு அரையார் போலும்**

அவருடைய திருமேனியைப் பாருங்கள். முழுதும் திருநீறு பூசியிருக்கிருர். அவருடைய செம்பவளத் திருமேனியில் அந்த நீறு படர்ந்து அழகை மிகுதிப்படுத்துகிறது. பெண்கள் தங்கள் முகத்துக்கு மணமுடைய பொடி பூசி அழகு செய்து கொள் கிருர்கள். இறைவருக்கு இந்தத் திருநீறே அழகு செய்கிறது.

**நீறுடை அழகர் போலும்.**

இத்தகைய பெருமானேத்தான் இந்தத் திருச்செம்பொன் பள்ளியில் தரிசிக்கிருேம். இந்தத் தலமே இறைவர் அருளாட்

எங்கும் மலரும் மணமும் நிரம்பிப் பொலிகிறது. கடற்கரையை அடுத்துள்ளமையால் அங்கங்கே நெய்தல் மலர்கள் மலர்ந்து மணம் கமழ்கின்றன.

**நெய்தலே கமழும் நீர்மை.**

நிலவளம் பெற்றிருந்தால் அங்கே வயல்கள் மிகுதியாக இருக்கும். நீர் வளத்தால் உழவர்கள் உழுது பயிரிடுவார்கள். சேறு நிரம்பிய வயல்களிலிருந்துதானே நமக்குச் சோறு விளைகிறது? இந்தத் திருத்தலத்தில் வயலுக்குக் குறைவில்லை. அங்கே சேற்றுக்குக் குறைவில்லை. அதனால் சோற்றுக்கும் குறைவில்லை.

சேறுடைய வயல்களில் தாமரை மலர்கள் மலர்த்திருக்கின்றன. சேற்றிலே வளர்ந்து மலர்வதனால் தாமரைக்குப் பங்கஜம் என்ற பெயர் வந்தது. இந்தத் திருத்தலத்தில் வயல்களின் ஓரக் கால்களில் தாமரைமலர்கள் வரிசை வரிசையாகப் பூத்திருக்கின்றன. இறைவருடைய அணிமையைப் பெற்ற அன்பர்களின் முகம் போலப் பொலிகின்றன அவை.

இத்தகைய கமலங்களைப் பெற்ற வளவயல்களும், பூம்பொய்கைகளும் இந்தத் தலத்தைச் சுற்றி எல்லை காட்டிக் கொண்டு விளங்குகின்றன.

**சேறுடைக் கமல வேலித்**
**திருச்செம்பொன் பள்ளி யாரே!**

நெய்தல் நிலத்துக்குரியது நெய்தல் மலர். மருத நிலத்துக்குரியது தாமரை. இங்கே இரண்டு வகை நிலங்களும் இருப்பதனால் நெய்தலையும் தாமரையையும் ஒருங்கே பார்க்கிறோம். நெய்தல் மலர் சிறப்பான மலர் அன்று. மலர்களுக்குள் தாமரையே சிறந்தது. "பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை" என்று அப்பரே பாடுவரார். ஆனால் இங்கே இறைவர் இடத்தில் நெய்தலும் மலர்ந்து விளக்கம் பெற்று நிற்கிறது. தாமரையும் மலர்ந்து பொலிவுற நிற்கிறது. இறைவரைச் சார்ந்தால் இழிந்தவர்களாக இருந்தவர்களும் உயர்ந்தவர்

களாக இருந்தவர்களும் ஒரே நிலையைப் பெற்று விளக்கம் பெறுவார்கள். நெய்தலும் தாமரையும் ஒரே இடத்தில் மலர்ந்து விளங்கும் காட்சி இதை நினைப்பூட்டுகிறது. சாக் கடையானாலும் யமுனையானாலும் கங்கையிலே சங்கமம் ஆன பிறகு எல்லாமே கங்கையாகி விடுகின்றன அல்லவா? இறைவ டைய திரு முடியிலுள்ள கங்கைக்கே அத்தகைய சிறப்பு இருக்கும் போது கருணையே வடிவான இறைவரிடத்தில் அந்த இயல்பு இருப்பது ஒரு வியப்பா?

இப்படியெல்லாம் நினைந்து எம்பெருமானுடைய திரு வருட் சிறப்பை உணர்ந்து உருகும்படி பாடுகிறார், அப்பர் சுவாமிகள்.

**ஆறுடைச் சடையர் போலும்,**
**அன்பருக்கு அன்பர் போலும்,**
**கூறுடை மெய்யர் போலும்,**
**கோள்அரவு அரையர் போலும்,**
**நீறுடை அழகர் போலும்,**
**நெய்தலே கமழும் நீர்மைச்**
**சேறுடைக் கமல வேலித்**
**திருச்செம்பொன் பள்ளி யாரே.**

*நெய்தல் மலரே எங்கும் மணம் வீசும் இயல்பையுடைய சேற்றைத் தமக்குப் பிறப்பிடமாகக் கொண்ட தாமரைகளை யுடைய வயல்களையும் குளங்களையும் எல்லையாகப் பெற்ற திருச் செம்பொன் பள்ளியிலே எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் கங்கையாகிய ஆற்றைத் தம் சடாபாரத்தில் கொண்டவர்; மெய்யன்பர்களிடம் தனியான அன்பு காட்டுபவர்; ஒரு கூற்றை உமாதேவிக்கு அளித்து விட்டு மற்றொரு கூற்றைத் தமக்காகக் கொண்ட திருமேனியை உடையவர்; கொலை செய்யும் தன்மை யையுடைய பாம்பைத் திருவரையில் நாணாகவும் கோவண மாகவும் அணிந்தவர்; திருநீற்றைப் பூசி அதனால் அழகு மிக்குத் தோன்றும் அழகர்.*

[ஆறு- கங்கையாறு. கூறு- உமாதேவிக்கு அளித்த ஒரு கூறு ஒழிந்த மற்றைக் கூறு; வலப்பாகம். கோள்- கொலை. அரையில் நாணகவும் கோவணமாகவும் பாம்பை அணிந்தவர். இயல்பாகவே அழகர்: அவரைச் சேர்ந்து நீறும் அழகு பெறு கிறது: அந்த நீற்ருல் அவர் மேனியும் அழகு மிக்குத் தோன்று கிறது. நெய்தலே: ஏகாரம், பிரிநிலை; அசையுமாம். நீர்மை- இயல்பு. நீர்மைச் சேறு- நீரின் தன்மையோடு இணைந்த சேறு என்றும் பொருள் கொள்ளலாம். சேறுடை- சேற்றைத் தான் தோற்றும் இடமாக உடைய; இது கமலத்துக்கு அடை. வேலி -எல்லை. திருச்செம்பொன் பள்ளியை அணுகும் போதே நெய் தல் மணம் கமழும். அப்பால் கமல மலர்கள் காட்சி அளிக்கும். ஊருக்குள் சென்று திருக்கோயிலில் புகுந்தால் இறைவர் ஆறுடைச் சடையராகவும்,அன்பருக்கு அன்பராகவும், கூறுடை மெய்யராகவும், கோளரவரையராகவும், நீறுடையழகராகவும் தரிசனம் தருவார். சடை, மெய், அரை, திருமேனியழகு ஆகி யவை அவர் திருக்கோலத்தை இனம் காட்டுபவை. அன் பருக்கு அன்பு வைக்கும் திறம் அவர் கருணையைக் காட்டுவது.

போலும் என வருபவை யாவும் அசைகள். நெய்தலே, செம்பொன் பள்ளியாரே: ஏகாரங்கள் அசை. திருச் செம்பொன் பள்ளியார்: எழுவாய்.]

இது நான்காம் திரு முறையில் 29-ஆம் திருப்பதிகத்தில் ஐந்தாவது பாட்டாக அமைந்தது.

# 22. இறைவர் அமைத்துள்ள நியதி

**சி**வபெருமான் அகில லோகத்தில் உள்ளவர்களையும் பாதுகாத்தருள்பவர். விண்ணில் உள்ளவர்கள் யாவரும் தம்மை நோக்கித் தவம் செய்பவர்களுக்கு வேண்டிய வரங்களைக் கொடுப்பவர்கள். ஆனாலும் அவர்களுக்கு இறைவருடைய திருவருள் இல்லாவிட்டால் வாழ முடியாது. சிறிய வங்கியிலுள்ளார் பலருக்குப் பணம் கொடுத்தாலும் அவர்கள் பெரிய வங்கியிலிருந்து பணம் பெறுவார்கள். அதுபோலத் தேவர்கள் எம்பெருமானை விரும்பி அதனால் தம் பதவியைக் காப்பாற்றிக் கொள்வார்கள்.

**விண்ணினை விரும்ப வைத்தார்.**

தேவர்களுக்கு உலகத்தில் நடைபெறும் வேள்விகளில் அவியுணவு கிடைக்கும். அவ்வாறு அவர்கள் அவியுணவு பெறும்படி உலகில் உள்ளவர்களை வேள்வி செய்யும்படியாக அருள் செய்பவர் சிவபெருமான்.

**வேள்வியை வேட்க வைத்தார்.**

இசை வல்லுநர்கள் பண்ணையும் பாட்டையும் பாடினாலும் அவற்றால் மிக்க இன்பம் அடைபவர் அல்லர் அவர். தம்முடைய புகழைப் பாடும் பாடல்களாக இருந்தாலும் பாடுபவர் மனம் ஒன்றி அவரை எண்ணிப் பாடினால் அப்போதுதான் அவர் திருவுள்ளம் மிக்க உவப்பை அடையும். பாட்டுக்காகவும் பண்ணுக்காகவும் பாடுகிறவர்கள் வெறும் கலைஞர்கள். அத்தகைய பாடல்களைப் பக்தர்கள் பாடும் பொழுது அவர்கள் பாட்டின் பொருளாகிய இறைவருடைய நினைவோடே பாடுவார்கள்; பலகாலும் பயின்று பாடுவார்கள் அவர்கள் பாட்டைக் கேட்டுத் திருவுள்ளம் உவப்பவர் சி

பெருமான். அவர்கள் மேலும் மேலும் பாடும்படி அவர்களுக்கு வேண்டிய ஆற்றலைக் கொடுப்பார்.

**பத்தர்கள் பயில வைத்தார்.**

திருமால் சிவனடியார்களில் ஒருவர்; மகாபலியினிடம் வாமனராகச் சென்று மூன்றடி மண் வேண்டினார்; அவன் கொடுக்க இசைந்தவுடன் வாமனராக இருந்த வடிவத்தை மாற்றிக் கொண்டு நீண்டுயர்ந்த திரிவிக்கிரமாவதாரத்தை எடுத்தார்; பிறகு மண்ணினைக் காலால் தாவி அளந்தார். அவ்வாறு செய்து மாவலியின் கொடுமையை அழிக்கும்படி யாகத் திருமாலுக்கு ஆற்றலை அளித்தவர் சிவபெருமானே.

**மண்ணினைத் தாவ நீண்ட
மாலினுக்கு அருளும் வைத்தார்.**

வேறு யாருக்கும் இல்லாத அங்க அடையாளங்களை உடையவர் அவர். மற்றவர்கள் யாவரும் இரண்டு கண்களோடு இருக்க, அவர் தம் நெற்றியில் ஞானக் கண்ணை உடையவராக விளங்குகிறார்.

**கண்ணினை நெற்றி வைத்தார்.**

திருக்கழிப்பாலை என்னும் தலத்துக்குச் சென்று வழிபட்ட போது இந்த எண்ணங்களெல்லாம் அப்பர் சுவாமிகளுக்குத் தோன்றின. திருக்கழிப்பாலை கடற்கரையில் உள்ள தலம். அந்தக் கடற்கரையில் எழுந்தருளியுள்ளவராகிய சிவபெருமான் இவற்றைச் செய்தருளினார்.

**கழிப்பாலைச் சேர்ப்பனாரே.**

இறைவருடைய திருவருளினால் தேவர்கள் வாழ்கிறார்கள். அதனால் அவர்கள் இறைவரை விரும்பி வழிபடுகிறார்கள். உலகத்திலுள்ளவர்கள் வேள்விகளைச் செய்து தேவர்களுக்கு உணவு வழங்கும்படி ஒரு நியதியை அவரே வகுத்திருக்கிறார். பண்ணும் பாட்டும் உலகிலுள்ளார் பாடும்படி வைத்துப் பக்தர்

கள் தம் புகழைப் பண்ணோடு பாடும் படியான நியதியையும் அவர் அமைத்திருக்கிறார். தேவர்களுக்கு அருள்வது போலத் திருமாலுக்கும் அருள்புரிந்து அவரால் சில தீயவர்கள் அழியும் படியாகச் செய்திருக்கிறார். ஞானக் கண் படைத்த அப்பெருமான் இன்னாருக்கு இன்னபடி அருள் புரிந்து செயல்பட வைக்க வேண்டும் என்று திருவுள்ளங்கொண்டு அவ்வாறே எல்லாவற்றையும் நிகழ்த்துகிறார். இந்தக் கருத்துக்களை அப்பர் சுவாமிகள் திருப்பாட்டுத் தெரிவிக்கிறது.

**விண்ணினை விரும்ப வைத்தார்,**
**வேள்வியை வேட்க வைத்தார்,**
**பண்ணினைப் பாட வைத்தார்,**
**பத்தர்கள் பயில வைத்தார்,**
**மண்ணினைத் தாவ நீண்ட**
**மாலினுக்கு அருளும் வைத்தார்,**
**கண்ணினை நெற்றி வைத்தார்,**
**கழிப்பாலைச் சேர்ப்ப னாரே.**

*திருக்கழிப்பாலைக் கடற்கரையில் திருக் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள இறைவர், தேவலோகத்திலுள்ளவர்கள் தம்மை விரும்பி வேண்டியவற்றைப் பெறும்படி வைத்தார்; உலகத்திலுள்ள அந்தணர்கள் தேவர்களுக்கு அவியுணவு வழங்கி வேள்வியைச் செய்யும்படி வைத்தார்; பல வகையான பண்களைப் பாடும் படியாகத் தோற்றிவைத்தார்; அந்தப் பாடல்களைப் பக்தர்கள் பலகாலும் பாடும்படி வைத்தார்; உலகைத் தாவி அளப்பதற்காக நீண்ட வடிவம் எடுத்த திருமாலுக்கு அருளை வைத்தார்; தம்முடைய நெற்றியிலே ஒரு கண்ணை வைத்தார்.*

தேவர்கள், அந்தணர்கள், பக்தர்கள், திருமால் ஆகியவர்களுக்கு இன்ன இன்னபடி செய்க என்ற நியதியை இறைவர் தம் ஆணையால் அமைத்து வைத்ததைச் சொல்வது இந்தப் பாட்டு.

[விண்- வானுலகத்திலுள்ள தேவர்கள்; ஆகு பெயர். வேட்க— வேள்வி செய்யும் உரிமையுடையவர்கள் அதனைச் செய்யும்படி. பண் - இராகம். பயில - பலகாலும் சொல்லிப் புகழ. அருளும்: உம்மை, எச்சவும்மை; அவருக்கு ஒரு பதவி யைக் கொடுத்ததோடு மண்ணினைத் தாவும் ஆற்றலையும் கொடுத்தார் என்றபடி. நெற்றி - நெற்றியில். சேர்ப்பு- கடற்கரை; சேர்ப்பனுர் - கடற்கரைக்குத் தலைவர். ஏகாரம், ஈற்றசை.]

நான்காம் திருமுறையில் 30-ஆவது திருப்பதிகத்தில் உள்ள இரண்டாவது திருப்பாட்டு இது.

# 23. கண்ணிடை மணியர்

விரிந்த உலகத்தில் மனிதர்கள் உலாவுகிருர்கள். அவர்கள் வாழ்கின்ற வீடுகள் பல விதமாக இருக்கின்றன. சிலர் குடிசைகளிய் வாழ்கிருர்கள். சிலர் சற்றே பெரிய கூரை வீடுகளில் வாழ்கிருர்கள். ஓட்டுவில்லை வீட்டில் வாழ்வாரும், மாடி வீட்டில் வாழ்வாரும், பங்களாவில் வாழ்வாரும் இருக்கிருர்கள். அவரவர் செல்வ வளத்துக்கு ஏற்றபடி அவரவர் தமக்குரிய இருப்பிடத்தை அமைத்துக்கொண்டு வாழ்கிருர்கள். இந்த இடங்களெல்லாம் உடம்பு வாழும் இல்லங்கள்.

ஆனுல் உயிரே ஒரு குடிசையில்தான் வாழ்கிறது. எவ்வளவு பெரிய வள வாழ்வுடையவராலுலும், பெரிய திருமாளிகையில் வாழ்பவராலுலும் அவருடைய உயிர் என்னவோ ஒரு குடிசையில்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறது. அந்தக் குடிசையின் சுவர்கள் பார்ப்பதற்குக் கொஞ்சம் அழகாக இருக்கலாம். ஆனுல் உள்ளே எல்லாம் ஊழல். பிரித்துப் பார்த்தால் அழுக்கும் மாமிசமும் இரத்தமும் நரம்புகளுமே இருக்கும். அந்தக் குடிசைக்குத்தான் உடம்பு என்று பெயர். உடம்புக்குள்ளே உள்ளவற்றைச் சற்றே நினைத்துப் பாருங்கள். வாந்தியெடுக்கத்தான் வரும்.

இந்த உடம்பு தோலால் போர்த்திருக்கிறது. அது போதாதென்று அழகான ஆடைகளையும் அணிகலன்களையும் புனைந்து இதற்கு அழகு செய்கிருேம்.

கொஞ்சம் அழகாக இருக்கிறவர்கள் நிலைக் கண்ணுடியில் தம் உருவத்தைப் பார்த்துத் தாமே மகிழ்ந்து போவார்கள். அழகிய பெண்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதே இல்லை. அவர்களுக்காகவே கண்ணுடி படைக்கப்பட்டிருக்கிறது போலத் தோன்றுகிறது. அடிக்கடி கண்ணுடியில் தம் முகத்தைப்

பார்த்துக் கொண்டு வண்ணப் பொடி பூசித் திலகம் வைத்தும் கொண்டு மகிழ்கிறார்கள். எவ்வளவு அலங்காரம் செய்தாலும் இந்த உடம்பு ஆபாசம் நிறைந்த கொட்டில்தான்.

*"ஊற்றைச் சரீரத்தை ஆபாசக் கொட்டிலை*
*ஊன்பொதிந்த*
*காற்றுத் துருத்தியைச் சோறிடும்*
*தோற்பையை"*

என்று இதை வருணிக்கிறார் **பட்டினத்தார்.**

இந்தக் குடிசையைப் பெரிதாக எண்ணி மதித்து, உலக இன்பங்களைத் துய்த்து மகிழ்ச்சி அடைகிறோம். உடம்பிலுள்ள பஞ்சேந்திரியங்களுக்கும் இரை தேடுவதையே நம் தொழிலாகக் கொண்டு வாழ்வு முழுவதும் கழிக்கிறோம். இந்த உடம்பிலே அதிக மோகம் கொண்டு நிற்கிறோம்.

**மண்ணிடைக் குரம்பை தன்னை**
**மதித்து நீர் மையல் எய்தில்.**

இவ்வாறு உடம்பின்மேல் பற்று வைத்து மயங்கி வாழ்கிறோம். இந்த உடம்பு எப்போதும் நிலையாக இருக்குமோ? நம் கண்முன்னாலேயே இது தளர்ச்சி அடைகிறது. தசைகள் சுருங்குகின்றன. மடிப்புகள் விழுகின்றன. மயிர் நரைத்துப் போகிறது. நரை, திரை, மூப்பு என்பவை இந்த உடம்பு வளர்ந்து பிறகு தளரும்போது உண்டாகின்றவை. ஒரு நாள் இந்த உடம்பை விட்டு உயிர் பிரிந்து விடுகிறது.

உயிர் போகும்போது யமன் வந்து இதைக் கொண்டு போவான், "நான் அருமையாகப் பாதுகாத்து வைத்திருக்கிற உடம்பு இது; இன்னும் சிறிது காலம் இதில் வாழ்கிறேன். பிறகு நீ வரலாம்" என்றால் அவன் போவானோ? "கோடி பொன் கொடுக்கிறேன்; சிறிது நேரம் பொறுத்துக்கொள். நான்

இறந்து போனால் என் சொத்தைப் பற்றி என் மக்களும் பிறரும் சண்டை போட்டுக்கொள்வார்கள். அவ்வாறு செய் யாமல் அவர்களுக்கு ஏற்ற பங்குகள் இன்னவை என்று சொல்லிவிட்டு வருகிறேன். அதுவரையில் சிறிது நேரம் பொறுத்திரு'' என்றால் அவன் இருப்பானா? நாம் உயிர் விடும் காலம் இன்னதென்று நமக்குத் தெரியாது. அவனிடந்தான் அந்தக் கணக்கு இருக்கிறது. அந்தக் காலக் கணக்கில் கண நேரமும் அவன் தவறமாட்டான். பலத்தாலோ பணத்தாலோ அறிவாலோ பெரியவர் என்று தாட்சணியம் பார்க்கமாட்டான். ''உனக்குக் கோடி பொன் தருகிறேன். சற்றுப் பொறுத்திரு'' என்றால் பொறுத்திருக்கமாட்டான்.

''கோடி பொன் அளிப்பன்; இன்றே
கோடிர்: ஓர் மாத்தி ரைக்குள்
ஊடிய கிளைக்குஓர் வார்த்தை
உரைத்துஅடை குவன்என் றாலும்
தேடிய கால தூதர்
சிமிழ்த்தல் விட்டு அடைவ ரேசொல்''

என்பது **குசேலோபாக்கியானம்**.

வானத்தில் யமலோகத்தில் வாழும் எமன், அவரவர்க்கு அடைத்த வாழ்நாள் முடிந்ததை அறிந்து தன் கடமையை ஆற்ற வருவான். எதற்கும் அஞ்சாமல் எதற்கும் தடைப்படா மல் தன் கடமையை ஆற்றுவதால் அவனுக்குத் தருமராசன் என்று பெயர் வந்தது, அவன் வந்து நம் உயிரை எடுத்துச் செல்ல விரும்பினால் அவனை யாராலும் விலக்க முடியாது. ''மாற்றரும் கூற்றம்'' என்று **தொல்காப்பியம்** சொல்கிறது.

**விண்ணிடைத் தரும ராசன்**
**வேண்டினால் விலக்குவார் ஆர்?**

இப்படி யமனால் உயிர் கொண்டு போகப் பெற்றால் அது யமலோகத்தில் நின்று விடுவதன்று. சுவர்க்க நரகங்களில்

இன்பதுன்பங்களை அநுபவித்து மீட்டும் இந்த உலகத்தில் பிறக்கத்தான் வேண்டும். இப்படியே பிறப்பும் இறப்பும் அலை யலையாகத் தொடர்ந்து கொண்டே வரும்.

இப்படி உள்ள அவல நிலையை மாற்றுவது எப்படி? காலன் கைப்படாமல், இறப்பும் பிறப்பும் அற்ற இன்ப வாழ் வைப் பெறுவது எப்படி?

இறைவனுடைய திருவருள் கிடைக்குமானால் காலனுக்கு அஞ்ச வேண்டுவதில்லை. அவன் காலகாலன். அவன் அருளைப் பெறவேண்டுமானால், இந்தத் தேகத்தையும் உலக வாழ்வை யும் பெரியனவாக எண்ணி மையல் கொள்ளாமல் அவனிடம் அன்பு வைத்து வழிபட வேண்டும்.

பக்தர்கள் அப்படிச் செய்கிறார்கள். பக்திச் சுவையையுடைய பாடல்களைப் பண்ணோடு பாடுகிறார்கள். பக்தி மேலீட்டால் ஆடு கிறார்கள். 'பரமானந்தம் மேற்கொள விம்மி விம்மி' நடிக் கிறார்கள். அத்தகைய பக்தர்களை யமவாதனையினின்றும் காப்பாற்றுவான் இறைவன்.

நம் கண்ணில் மணி இருக்கிறது. அதனால்தான் பார்க் கிறோம். உலகத்தைப் பார்த்தும் நம் உடம்பைப் பார்த்தும் மகிழ்கிறோம். அந்த மணியே இறைவனாக இருந்தால் எப்படி இருக்கும்? எங்கும் இறைவனையே பார்க்கலாம். நீலக் கண்ணாடியை அணிபவர்களுக்கு எல்லாம் நீலமயமாகத் தோன்றுகிறது. கண்ணிலுள்ள மணியே இறைவன் மயமாக இருந்தால் பார்க்கும் பொருள்களில் எல்லாம் அவனுடைய தோற்றமே தோன்றும். பக்தர்களுக்குக் கண்ணினுள் மணியாக நின்று பிரபஞ்சம் முழுதும் தன் மயமாக இருப்பதை அவன் காட்டுவான்.

**பண்ணிசைச் சுவைகள் பாடி**
**ஆடிடும் பத்தர்க்கு என்றும்**
**கண்ணிடை மணியர் போலும்**
**கடவூர் வீரட்டனாரே!**

தமக்கு அருள் தந்து ஆட்கொண்ட எம்பெருமானை இவ்வாறு பாடுகிருர் அப்பர். திருக்கடவூர், காலனை இறைவன் சங்காரம் செய்ததை நினைப்பூட்டும் தலம்: அட்ட வீரட்டங்களுள் அது ஒன்று, இறைவன் செய்த வீரச் செயல்களுள் ஒன்ருகிய கால சங்கார க்ஷேத்திரம் அது என்று புராணம் சொல்கிறது.

அந்தத் தலத்தை அடைந்தவுடன் யமனுடைய நினைவு அப்பர் சுவாமிகளுக்கு வருகிறது. அவனுடைய கொடுமையினின்றும் நீங்கி இன்ப வாழ்வடைவதற்கு இறைவரையே கண்ணினுள் மணியாகக் கொண்டு வாழ்கிருர்கள் பக்தர்கள் என்ற எண்ணம் தோன்றியது. அப்பரே அப்படி வாழ்கிறவர். அதைப் படர்க்கையிலே வைத்துச் சொல்கிருர்.

**மண்ணிடைக் குரம்பை தன்னை**
**மதித்துநீர் மையல் எய்தில்**
**விண்ணிடைத் தரும ராசன்**
**வேண்டிஞல் விலக்கு வார்ஆர்?**
**பண்ணிடைச் சுவைகள் பாடி**
**ஆடிடும் பத்தர்க்கு என்றும்**
**கண்ணிடை மணியர் போலும்**
**கடவூர்வீ ரட்ட ஞரே.**

* உலக மக்களே, இந்த உலகத்தில் நாம் வாழும் குடிசை போன்ற உடம்பைப் பெரிதாக மதித்து நீங்கள் இதன்பால் மயக்கம் அடைந்து நின்ருல், வானிலிருந்து யமராசன் வந்து நம் உயிரை எடுத்துச் செல்ல விரும்பிஞல் அவனை விலக்கும் ஆற்றல் உடையவர்கள் யார்? (ஆகவே அவனுடைய கொடுமையை நீக்க வேண்டில் பக்தர்களாக வேண்டும். பக்தர்கள் எப்படி இருப்பார்கள்?) பல வகையான பண்களோடு பல வகைச் சுவைகளையுடைய இறைவர் புகழ் சொல்லும் பாடல்களைப் பாடி, தம்மை மறந்து ஆடும் பக்தர்களுக்கு அந்தப் பெருமான் என்றும் கண்ணுக்குள் இருக்கும் மணியாக இருந்து

எங்கும் தம் உருவையே காட்டுவார், திருக்கடவூர்வீரட்டத்தில் எழுந்தருளியிருக்கிறவர். (ஆகவே அவரை வழிபடுங்கள்.)*

மக்களுக்கு அறிவுரை சொல்லும் முறையில் இந்தப் பாசுரத்தைப் பாடுகிறுர் அப்பர்.

[மண்—நிலவுலகம். குரம்பை என்றது குடிசை போன்ற உடம்பை; உவம ஆகுபெயர்; ''பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை'' என்று **ஔவையார்** பாடுவார். மதித்து-உயர்ந்த பண்டமாக வைத்து எண்ணி. மையல்-மோகத்தால் உண்டான மயக்கம். விண்ணிடை-வானத்திலுள்ள யமலோகத்தில்வாழும். வேண்டிஞல்-உயிரை உடம்பினின்றும் பிரித்துக் கொண்டு போக விரும்பிஞல். ஆர்: யாரும் இல்லை என்ற எதிர்மறைப் பொருள் தரும் விஞ.

பண்-இராகங்கள். பண்ணிடை - பண்ணுக்கு இடமாகிய. சுவைகள்-சுவையுள்ள பாடல்கள்; ஆகுபெயர், பாடுவதும் பிறகு பக்தி மிகுதியிஞல் ஆடுவதும் அன்பர்களுக்கு இயல்பு.

''படபடெனு நெஞ்சம் பதைத்துள் நடுக்குறப்
பாடியா டிக்குதித்து''

என்று இந்த இயல்பைத் **தாயுமானவர்** சொல்கிறுர்.

கண்ணிடை மணி - கண்ணுக்குள் பார்ப்பதற்குரியதாக அமைந்த மணி. இறைவரே மணியாக ஆகிவிடுவாராம். அப்போது எங்கும் அவரையே காணும் நிலை வரும். போலும்: அசை. வீரட்டஞர் கண்ணிடை மணியர் என்று கூட்டுக.]

'அவ்வாறு நீங்களும் பண்ணிஞல் தருமராசனுடைய கொடுமைக்கு ஆளாக வேண்டாம்' என்பது குறிப்பு.

நான்காம் திருமுறையில் 31-ஆம் பதிகத்தில் உள்ள இரண்டாவது பாட்டு இது.

# 24. களைகண் காணேன்

மனிதன் வாழும் போது ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொன்றை அவாவுகிருன். பசிக்கும்போது உணவையும் உறக்கம் வரும்போது படுக்கையையும் தேடுகிருன். காம உணர்ச்சி வரும்போது பெண்ணையும் வறுமை வாட்டும்போது செல்வத்தையும் நோயால் நலிவுறும்போது மருந்தையும் தேடுகிருன். இவை அவ்வப்போது தேவையானவை.

வாழ்க்கையில் நெடுநாள் வைத்துப் பயன்படுத்தும் பொருள்களையும் அவன் நாடி முயன்று பெறுகிருன். வாழ்வதற்கு வீடு வேண்டும்; அதைக் கட்டிக் கொள்கிருன். உணவுப் பொருள் பெற நிலம் வேண்டும்; அதை வாங்கி உழுகிருன். பிற்கால வாழ்க்கையில் வருந்தாமல் வாழ முன் கூட்டியே வைப்பு நிதியைச் சேமித்துக் கொள்கிருன்.

நெடுநாள் பயன்படும் பொருள்களைச் சேமிப்பதற்கு அதிக முயற்சி வேண்டும். பெருந்தொகையை ஈட்டி வைத்துக் கொண்டால் அது நெடுநாளைக்குப் பயன்படும். அதற்குப் பெருமுயற்சி செய்ய வேண்டும். இந்தப் பிறவியில் எய்ப்பு வரும்போது சிரமப்படாமல் வாழ 'இன்ஷ்யூரன்ஸ்' செய்து கொள்கிரேம்.

இந்த உடம்பு வாழும் வாழ்க்கை ஒரு காலவரையறைக்கு உட்பட்டது. இந்த உடம்பு போய்விட்டால், இப்போதுள்ள வாழ்க்கை முடிவடைகிறது. ஆனல் உயிரின் வாழ்க்கை இதோடு முடிவடைவ தில்லை. உயிரின் வாழ்க்கை என்பது மிகப் பெரிய நெடுங்கதை. அதில் இந்தப் பிறப்பு ஓர் அத்தியாயம். இதற்கு முன் எத்தனை அத்தியாயங்கள் இருந்தனவோ, நாம் அறியோம். இனியும் எத்தனை அத்தி

யங்கள் இருக்கும் என்ற அறிவும் நமக்கு இல்லை. எத்தனை பிறவி எடுத்தாலும் உடம்பும் வாழ்க்கை முறையும் மாறுமே யன்றி உயிர் மாறுவதில்லை. அது நித்தியமானது. ஒவ்வோர் உடம்பாகக் குடிபுகுந்து வாழ்ந்து மறுபடி வேறுடம்புக்குப் போகிறது.

இந்த உடம்பைப் பாதுகாப்பதற்கு நாம் பல பொருள்களைப் பற்றி நிற்கிறோம். உணவு, உடை, வீடு முதலிய பலவற்றிலே பற்றுக் கொண்டு அவற்றை நாடிச் செல்கிறோம்; முயன்று பெறுகிறோம். பல காலம் பயன்படும் பொருளாகிய பெருஞ் செல்வம், வீடு, நிலம் இவற்றைச் சேர்த்துக் கொண்டு வாழ்கிறோம். மாதம் மாதம் சம்பளம் வாங்குகிறவனைவிடப் பெருந்தொகையைச் சேமித்துக் கொண்டவன் வாழ்வு சிறப்படைகிறது. அவ்வப்போது உழைத்துச் சம்பாதித்து உணவுப் பொருள்களைப் பெறுகிறவனைவிட நிலமுள்ளவன் தனக்கு வேண்டிய உணவுப் பொருள்களைப் பெற்று நன்றாக வாழ்கிறான்.

நமக்குப் பயன்படும் பொருளை நாம் காப்பாற்றி வைத்துக் கொள்கிறோம். அதில் பற்று வைத்துப் பேணி வருகிறோம். உடம்பின் சுகத்துக்காகவும் அறம் செய்யவும் மனைவியிடம் பற்று வைக்கிறோம். அவ்வப்பொழுது சந்தித்துப் பழகும் மனிதர்களிடம் வைக்கும் பற்றைவிட நெடுங்காலம் நம்முடன் வாழும் மனைவியிடமும் மைந்தரிடமும் நெருங்கிய உறவினரிடமும் பற்றுக்கொண்டு பழகுகிறோம். அறிவுடையவன் நெடுங்காலம் பயன்படும் பொருள்களில் பற்று வைத்துப் பாதுகாப்பான்.

உடம்பு வாழும் வாழ்க்கையில் நெடுங்காலத்துக்குரிய பொருள்களை ஈட்டி அவற்றைப் பற்றிக் கொண்டு பேணுபவர்கள் அறிவாளிகள் என்றால், உயிர் வாழும் நெடுவாழ்க்கைக்குப் பயன்படும் பொருளைச் சேமித்துக் கொண்டவர்கள் பின்னும் பெரிய அறிவாளிகள். அத்தகைய நீண்ட பற்றைப்

பற்றிக் கொள்வதனுல் எந்தப் பிறவி எடுத்தாலும் பயன் உண்டாகும்.

''பற்றுக பற்றற்ருன் பற்றினே; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு''

என்று **திருவள்ளுவர்** சொல்கிருர். இறைவனேப் பற்றிக் கொள்ளும் பற்று உயிருக்கே நலம் தருவது; எந்தப் பிறவி எடுத்தாலும் உடன் வந்து துணேயாக இருப்பது. அதனுல் தான்,

''புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா நின்அடி
என்மனத்தே, வழுவா திருக்க வரம்தர வேண்டும்''

என்று **திருநாவுக்கரசர்** வேண்டுகிருர்.

மற்ருெரு பாட்டில், 'அவ்வாறு பற்றைப் பற்றிக் கொள் ளாமல் வீண் வாழ்க்கை வாழ்ந்தேன். என் முயற்சிகள் யாவும் பயனற்றனவாக உள்ளன. பாழுக்கே நீர் இறைத் தேன்?' என்று சொல்கிருர். அந்தப் பாட்டை இப்போது பார்க்கலாம்.

நெடுங்காலம் பயன்படும் பொருள் இது என்று உணர்ந்து கொண்டவன் அதன்மேல் பற்று வைத்து அதைப் பெறவே முயல்வான். ஒரு கணமும் வீண் போகாமல் அதையே எண்ணி எப்படியேனும் அதை அடைந்துவிட வேண்டும் என்ற தீவிர உணர்வோடு இருப்பான். 'அத்தகைய பெரும்பற்று ஏதும் இல்லாமல் நான் வாழ்க்கையை வீண் போக்கினேன்' என்று தம்முடைய பழைய வாழ்க்கையை எண்ணி இரங்கு கிருர் அப்பர் சுவாமிகள்.

**பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து**
**பாழுக்கே நீர் இறைத்தேன்.**

சமண சமயத்தில் புகுந்து பல காலம் இருந்து பிறகு மீண்டும் சைவரானவர் நாவுக்கரசர். இறைவனைப் பற்றிக் கொள்ளும் பற்று உறுதியாக ஆரம்பத்திலே இருந்தால் இந்த மாற்றம் வந்திராது, 'அத்தகைய பற்று இல்லாமையால் என் முயற்சிகளையெல்லாம் பயனற்ற வகையில் போக்கினேன். விளையும் நிலத்துக்கு இறைத்த நீரும் நம் உழைப்பும் பயனைத் தரும். நிலத்தில் விளைச்சல் உண்டாகும். பாழ் நிலத்துக்கு இறைத்தால் நீரும் பாழாகும்; முயற்சியும் பாழாகும். அப்படித்தான் நான் வாழ்ந்தேன். கருவி கரணங்கள் நன்ருக அமைந்திருந்தாலும் அவற்றைக் கொண்டு இறைவன்மேல் பற்று வைத்துப் பக்தி செய்யாமல் போனேன்' என்று விளக்கிக்கொள்ளும்படி பாடுகிருர்.

'பல காலம் கழித்து இப்போது எனக்கு அறிவு வந்திருக்கிறது. நூல்களாலும் நல்லோர் உபதேசங்களாலும் திருத்தமான வாழ்வு வாழ்வதற்கு வழி இருக்கிறது. உத்தமர்கள் அவற்றைப் பயன்படுத்திக்கொண்டும் தாமே ஆராய்ந்தும் இதுதான் நன்னெறி என்று உணர்ந்து வாழ்வார்கள். மத்திமர்கள் தம் முயற்சி சிறிதாக இருந்தாலும் பிறர் நலம் பெறுவதைக் கண்டு அப்படியே தாமும் வாழ வேண்டும் என்று எண்ணி, அதற்குரிய வழிகளை நல்லாரை நாடிக் கேட்டு அதன்படி ஒழுகுவார்கள். அதமர்களோ நூலையும் ஓதாமல் நல்லோர் உரைகளையும் கேளாமல் வாழ்வார்கள். அவர்கள் துன்பப்படும் போதுதான், இதற்குரிய பரிகாரத்தைத் தேட வேண்டுமே என்று நினைப்பார்கள். கயவர்கள் துன்பத்தை அநுபவிக்கும்போதுதான் தம் கயமையை உணர்ந்து திருந்த முயல்வார்கள். பட்டறியும் தன்மை உடையவர்கள் அவர்கள். அவர்களைப்போல் நானும் இருந்தேன். "பட்டறி, கெட்டறி, பத்தெட்டு இறுத்தறி" என்ற பழமொழியை என்னளவில் அநுபவத்தில் இப்போது உணர்கிறேன்.'

**உற்றலால் கயவர் தேருர்**
**என்னும் கட்டுரையோடு ஒத்தேன்.**

'நான் எப்படி இருக்கிறேன்? சாக்கடையில் விழுந்து எழுந்தவனைப் போல அல்லவா இருக்கிறேன்? இதை நினைக்கும் போது எனக்கே நாணமாக இருக்கிறது. என்னால் என்ன செய்ய முடியும்?'

**ஏற்றுளேன்? என்செய்கேன் யான்?**

'இத்தனை காலம் வாழ்ந்தும் மேலும் மேலும் பல துன்பங்களை அநுபவிக்கிறேனேயன்றி அறிய வேண்டியதை அறிந்து கொள்ளவில்லை. சிறிதளவேனும் ஞானநெறியைக் கற்கவில்லை. அஞ்ஞான நெறியிலே நின்று அவதிப்படுகிறேன்'.

**இடும்பையால் ஞானம் ஏதும்**
**கற்றிலேன்.**

'இத்தகைய நிலையினின்றும் நீங்க எண்ணினாலும் அதற்குரிய உறுதி என்னிடம் இல்லை. உண்மையை உணராமல் இருக்கும் எனக்கு வேறு யாரேனும் உறுதுணையாக இருந்து இந்தத் துன்பத்தினின்றும் மீட்டால் நான் உய்வேன். அப்படி என் துன்பத்தை நீக்கும் களைகண்ணாக யாரையும் நான் அறிந்து கொள்ளவில்லை. இப்போது அதிகை வீரட்டத்தில் எழுந்தருளியிருக்கும் தேவரீரிடம் முறையிட வந்திருக்கிறேன். முறையிடுகிறேன்.'

**களைகண் காணேன்;**
**கடலூர் வீரட்டனீரே!**

'பற்றற்றான் பற்றினைப் பற்றிக் கொண்டு அவன் அருளைப் பெற முயலும் வாழ்வே பயனுள்ள வாழ்வு. அல்லாத வாழ்வில் எந்த முயற்சி செய்தாலும் அவ்வளவும் பாழுக்கு நீர் இறைத்தாற்போல வீணாகிவிடும். அநுபவத்தில் உலகியற் பற்றினால் துன்பமே விளையும் என்று உணர்ந்த பிறகாவது இறைவனைப் பற்றிக் கொள்ள வேண்டும்.

அவனுடைய அருளால் ஞானம் அடையும் வரையில் நம் துன்பங்கள் போகா. எல்லாத் துன்பங்களும் நீக்குவதற்குரிய பெருந்துணைவனாக இருப்பவன் இறைவன்தான்' என்ற கருத்துக்கள் இந்தத் திருப்பாட்டால் உணரக்கிடக்கின்றன.

**பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து**
**பாழுக்கே நீர்இ றைத்தேன்;**
**உற்றலால் கயவர் தேறார்**
**என்னும்கட் டுரையோ டொத்தேன்;**
**எற்றுளேன்! என்செய் கேன்நான்!**
**இடும்பையால் ஞானம் ஏதும்**
**கற்றிலேன்; களைகண் காணேன்;**
**கடலூர்வீ ரட்ட னீரே.**

* திருக்கடவூரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே, பற்ற வேண்டிய பொருளைப் பற்றிக் கொள்ளும் பற்று இல்லாத வாழ்க்கை வாழ்ந்து, பாழ்நிலத்துக்கு நீர் இறைப்பாரைப் போலப் பயனற்ற செயல்களிலே ஈடுபட்டேன்; இழி குணம் உடையவர்கள் அநுபவத்தில் துன்புற்றாலன்றித் தெளிவு பெற மாட்டார்கள் என்று பெரியோர் சொல்லும் நல்லுரையோடு பொருத்திப் பார்க்கும்படி உள்ளேன். நான் எப்படி இருக்கிறேன்! என்ன செய்வேன்! துன்பங்களால் நலிவுற்றுச் சிறிதளவும் மெய்யறிவைத் தெரிந்து கொள்ளவில்லையே! என் துன்பத்தைத் தீர்க்கும் துணையைக் காணவில்லை. (தேவரீரை வந்து அடைந்தேன்.)*

[பற்று என்றது உலகப்பற்றைக் குறியாமல் பேரின்ப வாழ்க்கைக்குப் பயன்படும் பற்றைக் குறித்தது. அது, 'நின் சரணல்லால் சரண் இல்லை' என்று இறைவனைப் பற்றிக் கொண்டு நிற்பது.

'பாழுக்கே நீர் இறைத்தல்' என்பது பழமொழி. முயற்சி யெல்லாம் பயனின்றி ஒழியும்படி வாழ்ந்தேன் என்பது கருத்து. 'பட்டாலன்றிக் கயவர்கள் தெளிவு பெற மாட் டார்கள்' என்பது பழமொழியின் பொருள். 'பட்டால் தெரியும் பார்ப்பானுக்கு' என்பது போன்ற பழமொழி அது. எற்று-எப்படி; எதற்காக என்று பொருள் கொள்ளலும் ஆம். களைகண்—துன்பத்தை நீக்கும் துணை.]

நான்காம் திருமுறையில் 31-ஆம் பதிகத்தில் வரும் 8–ஆவது பாட்டு இது.

# 25. சிவநெறி அனைத்தும் ஆனார்

இந்த உலகத்தில் வாழும் மக்கள் தம் ஆயுட் காலம் முடிந் தவுடன் இறந்துபோகிருர்கள். அவர்களுக்கு முன்பு பிறந்த வர்களும் இறந்து போனார்கள். இந்த மக்களுக்கு முன்பே இருந்து பின்பும் வாழ்கிறவர்கள் தேவர்கள். அவர்களுக்கும் இறுதிக்காலம் உண்டு. தோன்றுவதும் மறைவதுமாகிய இரண்டும் உலக மக்களுக்கு இருப்பது போலவே அவர்களுக் கும் உண்டு. ஆனால் கால நீட்சியில் வேறுபாடு உண்டு. நமக்கு ஓர் ஆண்டு தேவர்களுக்கு ஒரு நாள். அவர்கள் தங்கள் காலம் முடிந்தவுடன் மறைவார்கள், அவர்களில் இந்திரன் நெடுநாள் வாழ்வான். பிரமன் அவனைவிட நீண்ட காலம் வாழ்பவன். தேவர்கள் தோன்றுவதற்கு முந்தியே பிரமன் தோன்றி யிருப்பவன். தேவர்களுக்கு முந்தியவன் பிரமன். அவனுக்கு முந்தியவர் திருமால். இவ்வாறு முந்தியுள்ள அனைவருக்கும் முந்தி உள்ளவர் சிவபெருமான்.

**முந்தையார் முந்தி உள்ளார்.**

பிரமன் தோன்றியபோது தனக்கு முன்பே திருமால் தோன்றியிருப்பதை அறிவான். இப்படியே ஒவ்வொருவருக் கும் முன்பே தோன்றியவர் இருப்பார். தமக்குமுன் தோன் றியவர் யாரும் இல்லாமல், முன்பு தோன்றியவர்கள் யாவருக் கும் முற்பட்டு ஆதி மூர்த்தியாக இருப்பவர் இறைவர்.

பிரமா, விஷ்ணு, ருத்திரன் என்று சொல்லும் மூன்று மூர்த் திகளுக்கும் முன்பே இருந்து அவர்களுக்கு முதல்வராக இருப் பவர் அவர்.

**மூவர்க்கும் முதல்வர் ஆனார்.**

பல தெருக்கள் கூடும் சந்திகளில் அவர் இருக்கிறார். "சதுக்கமும் சந்தியும்" முருகன் உறையும் இடங்களிற் சில என்று **திருமுருகாற்றுப்படையில்** வருகிறது.

அந்தி மாலையில் அவர் தோற்றம் அளிப்பார். பிரதோஷ காலமாகிய அந்த நேரத்தில் ஆடல் புரிபவர் அவர்.

**சந்தியார்; அந்தி உள்ளார்.**

எம்பெருமான் தவக் கோலத்தோடு எழுந்தருளியிருக்கிறார். தோலாடையும் சடை முடியும் தவம் செய்பவர்களுக்குரிய சின்னங்கள். சிவபிரானிடம் அந்தச் சின்னங்களைக் காணுகிறோம். அவர் தவநெறிக்குரிய கோலத்தைத் தரித்து நிற்கிறார்.

**தவநெறி தரித்து நின்றார்.**

தம்மையே மனத்தில் வைத்துத் தியானிப்பவர்கள் உள்ளத்தில் அவர் தம் காட்சியைக் காட்டி எழுந்தருளியிருப்பார். எல்லாருடைய உள்ளத்திலும் அவர் இருந்தாலும் அவ்வாறு இருப்பது அவர்களுக்கே தெரியாது. தம்மை நினைப்பவர்கள் உள்ளத்திலே விளக்கமாக அவர்களுக்குக் காட்சி அளிப்பதனால் அவ்விடத்தில் மட்டும் உள்ளவரைப் போலத் தோன்றுவார். நிலத்துக்கு அடியில் எங்கும் நீர் இருந்தாலும் நமக்குத் தெரிவதில்லை. கிணறு வெட்டினால் அந்தக் கிணற்றிலிருந்து நீரை எடுக்கலாம். அதைக் கிணற்றுநீர் என்று சொல்கிறோம். பூமிக்கடியில் உள்ள நீரேயானாலும் கிணற்றிலே நாம் காணும்படி இருக்கிறது. அதுபோல எல்லார் உள்ளங்களிலும் இருக்கும் இறைவன் தம்மைத் தியானிப்பவர் உள்ளத்தில் காட்சி தருவதனால் அங்கு மட்டும் உள்ளவரைப் போலத் தோன்றுவார்.

**சிந்தையார் சிந்தை உள்ளார்.**

எம்பெருமானை அடைவதற்குரிய மார்க்கங்கள் பல. அவையெல்லாம் அவரை அடையும் நெறிகள்; சிவநெறிகள். மற்றவை யாவும் அவநெறிகள். இறைவரை அடைவதையே

லட்சியமாகக் கொண்டு கடைப்பிடிக்கும் நெறி எதுவாக இருந்தாலும் அந்த நெறியிலே அவர் நின்று துணை செய்வார். அவரே அந்த நெறிகள் அனைத்துமாக இருப்பார். மவுண்ட் ரோடு என்பது நீண்டிருக்கிறது. சென்னையை அடையும் வரையில் அது சென்னைக்குப் புறம்பானது. அது ரோடாக இருந்தாலும் சென்னையை அடைந்த பிறகு அது சென்னையின் பகுதியாகவே ஆகிவிடுகிறது. அது போலச் சிவநெறிகள் யாவும் ஒரு நிலையில் அவராகவே ஆகிவிடுகின்றன.

**சிவநெறி அனைத்தும் ஆனார்.**

அவரே நமக்கெல்லாம் தந்தையார். தந்தை தன் மகனை நல்வழிக்குக் கொண்டு வரவேண்டுமென்று எண்ணி வேண்டியவற்றை அளித்தும், சிறிய தவறு செய்தால் பொறுத்தும், பெரிய தவறு செய்தால் ஒறுத்தும் வழிப்படுத்துவது போல எம்பெருமானும் செய்கிறார்.

**எந்தையார்.**

அவரே உயிருக்குத் தந்தை.

அடியார்களுக்கு வேண்டியவற்றை வழங்கியருளும் பரமோபகாரி அவர். வேறு யாராலும் கொடுப்பதற்கரிய முத்திச் செல்வத்தையே அடியார்களுக்குத் தருவார்.

**எம்பிரானார்.**

இத்தகைய எம்பிரான் சோழ நாட்டிலுள்ள திருவிடைமருதூரில் கோயில் கொண்டு நித்திய வாசம் செய்கிறார்.

**இடைமருது இடம் கொண்டாரே.**

அன்பர்களின் உள்ளத்திலே வெளிப்பட்டு நிற்கும் அவர் மற்றவர்களும் புறக்கண்ணால் தரிசித்து அன்பராகும்படி திருக்கோயிலில் கோலம் காட்டிக் கொண்டு எழுந்தருளியிருக்கிறார்.

இடைமருதாகிய குறிப்பிட்ட ஓரிடத்தில் எழுந்தருளியிருந்தாலும் அவர் எல்லோருக்கும் முந்தியுள்ளவர்; திரிமூர்த்திகளுக்கும் முதல்வர்; சந்தியிலும் அந்தியிலும் உள்ளவர்; சிவநெறியாய் நிற்பவர்; அடியார்களுக்குத் தந்தையாகவும் சிறந்த உபகாரியாகவும் விளங்குபவர்.

**முந்தையார் முந்தி உள்ளார், மூவர்க்கும் முதல்வர் ஆனார்**
**சந்தியார்; சந்தி உள்ளார்; தவநெறி தரித்து நின்றார்;**
**சிந்தையார் சிந்தை உள்ளார்; சிவநெறி அனைத்தும் ஆனார்;**
**எந்தையார், எம்பிரானார், இடைமருது இடங்கொண்டாரே;**

* எல்லோருக்கும் முற்பட்டவர்கள் என்று சிறப்பிக்கும் யாவர்க்கும் முற்பட்டிருப்பவர், திரிமூர்த்திகளுக்கும் முன் உள்ள முதல்வரானவர், சந்திகளில் இருப்பவர், அந்தி மாலையில் கோலம் காட்டி ஆடுபவர், தவக் கோலத்தைத் தாங்கி நின்றவர், தம்முடைய சிந்தையில் எண்ணுவாருடைய உள்ளத்தில் விளக்கமாக உள்ளவர், சிவநெறிகள் அனைத்துமானவர், எமக்குத் தந்தையாராக உள்ளவர், எம்முடைய பரமோபகாரியாக உள்ளவர்; அத்தகைய சிவபெருமான் திருவிடைமருதூர்த் திருக்கோயிலைத் தமக்கு இடமாகக் கொண்டு எழுந்தருளியுள்ளார்.*

[முந்தையார்-முன்பு உள்ளவர்கள். மூவர்க்கும்: உம்மை, முற்றும்மை. மூவர்க்கும் மேற்பட்டு முதல்வராக இருப்பவர். சந்தி-தெருக்கள் கூடும் இடம். அந்தி—அந்தி மாலை. தவநெறி-தவவழியிற் செல்வோர் கொள்ளும் கோலம்; ஆகுபெயர். சிந்தையார்—தம்மைத் தியானிக்கும் சிந்தையை உடைய அன்பர்களுடைய. சிவநெறிகள் பல; அவை அனைத்துமாக உள்ளவர் அவர். பிரான்-உபகாரி; தலைவன் எனலும் ஆம்.

முந்தியுள்ளாரும், முதல்வரானாரும், சந்தியாரும், அந்தியுள்ளாரும், தவநெறி தரித்து நின்றாரும், சிந்தையுள்ளாரும், சிவநெறி ஆனாரும், எந்தையாரும், எம்பிரானாருமாகிய சிவபெருமான் இடங்கொண்டார் என்க. முந்தியுள்ளார் முதலிய அனைத்தும் ஒருவரையே குறித்து அடுக்கி வந்த எழுவாய்கள்.]

இந்தத் திருப்பாட்டு நான்காம் திருமுறையில் 35-ஆம் பதிகத்தில் இரண்டாவதாக உள்ளது.

# 26. ஆவி வாழும் குடில்

ஒரு தகப்பனர் தம்முடைய மகனுக்கு ஒரு வீட்டைக் கட்டிக் கொடுத்து அதில் அவனை வாழும்படி வைத்தார். அந்த வீடு சிறிய கூரை வீடு. அதற்கு இரண்டு தூண்களை நட்டு அவற்றின்மேல் அமைத்தார். இரண்டு பக்கங்களில் இரண்டு சார்புகளை அமைத்தார். பல கழிகளை வரிசையாகப் பரப்பி வைத்துக் கட்டினர். அவற்றின் மேல் வைக்கோலை வேய்ந்தார். சுற்றிச் சூழ நீரால் குழைத்த சுவரை வைத்தார். அதற்கு உள்ளே புகுவதற்கு ஒரு வாசலும் புறக்கடையில் ஒரு வாசலும் வைத்தார். அவை அந்தக் குடிசைக்கு ஏற்றவை யாக அமைந்தன.

அந்தக் குடிலுக்கு ஏழ சாளரங்களை அமைத்தார். அதன் எழிலைப் பார்த்துத் தன் மகன், 'இது நன்ருயிருக்கிறது' என்று அதனிடம் விருப்பம் உண்டாகும்படி செய்தார். பிறகு அந்தக் குடிலில் தம் மகனைக் குடிபுகும்படி செய்தார்.

இப்படிச் சொன்ஞல் யாரோ ஒருவருடைய கதை போலத் தோற்றுகிறது. உண்மையில் ஒவ்வொரு மனிதனையும் இப்படி அமைத்திருக்கிருர், திருமறைக்காட்டில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்.

அவர் கட்டிக்கொடுத்த வீடு உடம்புதான். இந்த உடம்பு நடக்கும் குடிசையாக இருக்கிறது. அது ஓர் அதிசயம். ரெயில்வேக்களில் எல்லா வசதிகளும் பொருத்திப் பல காலம் தங்கும்படி சில வண்டிகளை அமைப்பார்கள். அவ்வாறே இந்தக் குடிசை இருக்கிறது.

உலாவும் குடிசையாகிய இதற்கு இரண்டு கால்கள் இருக்கின்றன. அவையே ஓரிடத்தில் இருக்கவும் பிறகு வேண்டும் போது நகர்ந்து செல்லவும் அமைந்த சக்கரங்களைப் போலப் பயன்படுகின்றன.

**கால் கொடுத்து.**

இந்தக் குடிசையில் இரண்டு பக்கமும் இரண்டு சார்பு களைப் போலக் கைகள் இருக்கின்றன. குடிசை இயங்குவது ஆச்சரியம். இந்தக் கைகளை வேண்டும்போது மேலே தூக்க லாம்; வேண்டாதபோது தாழ்த்திக் கொள்ளலாம். சில வீடு களில் பக்கவாட்டில் சில அமைப்புகள் இருக்கும். அவற்றை வேண்டும்போது மேலே சென்று விரிந்து நிற்பதற்கும் வேண் டாதபோது மடக்கிக் கொள்வதற்கும் ஏற்றபடி பொறிகளை அமைத்திருப்பார்கள். குடையை விரிப்பது போலவும் சுருக்கு வது போலவும் அவற்றின் செயல்முறை இருக்கும். மறைக் காடனூர் அமைத்த குடிலில் இருபக்கத்திலும் உள்ள அமைப் பும் இப்படியே இருக்கும். வேண்டும்போது உயர்த்தலாம்; நீட்டலாம்; வேண்டாதபோது இறக்கித் தாழ்த்திக் கொள்ள லாம்.

**இரு கை ஏற்றி.**

இந்தக் குடிசையில் பல கழிகள் இருக்கின்றன. அவற் றுக்கு எலும்புகள் என்று பெயர். குடிசையில் எல்லாப் பாகங் களிலும் இந்தக் கழிகள் இருக்கும். கூரையில் இருக்கும்; வாசலில் இருக்கும்; படலில் இருக்கும்.

**கழி நிரைத்து.**

இந்தக் குடிசையின் சுவர்களில் தண்ணீரை விட்டுக் குழைத்த மண்ணை அப்பியிருக்கிறார். அதன் மேலே மெல்லிய தாக அழகிய பூச்சைப் பூசிப் பளபளக்கச் செய்திருக்கிறார். இறைச்சி என்பதே மேய்ந்த பொருள்; குருதியே நீர்; தோலே மேல் பூச்சு.

**இறைச்சி மேய்ந்து**
**தோல் படுத்து உதிர நீரால்**
**சுவர் எடுத்து.**

இந்தக் குடிசையில் உணவை உட்செலுத்தும் வாய் ஒரு வாசல். கழிக்க வேண்டியதைப் புறத்தே கழிக்கும் எருவாய் மற்ெருரு வாசல். இந்த இரண்டையும் எப்படி வைக்க வேண் டுமோ அப்படிப் பொருத்தமாக வைத்திருக்கிருர்.

**இரண்டு வாசல்**
**ஏல்வுடைத்தா அமைத்து.**

இந்தக் குடிசையில் இரண்டு வாசல்களையல்லாமல் ஏழு சாளரங்கள் உண்டு. அவை கண்கள் இரண்டு, காதுகள் இரண்டு, நாசித் துவாரங்கள் இரண்டு, கருவாய் ஒன்று. இவை எல்லாம் சேர்ந்து நவத்துவாரங்கள் உள்ள குடிசை இது.

இத்தகைய குடிசையைக் கட்டித் தந்து இதிலே வாழ வேண்டும் என்ற ஆசையை மக்களுக்குக் கொடுத்திருக்கிருர். 'இது இத்தனை சிறியதாக இருக்கிறதே! நன்ருக இல்லையே! இந்த அழுக்கு நிறைந்த இடத்தில் இனிமையாக வாழ முடியுமா?' என்று எண்ணுமல், இது ஏதோ கிடைத்தற்கரிய அருமையான மாளிகை என்று எண்ணி இதில் வாழ்கிருேம். ஆவியாகிய நாம் இதில் வாழும்படி மறைக்காடனுர் வைத் திருக்கிருர்.

**மால் கொடுத்து ஆவி வைத்தார்,**
**மாமறைக்காடனுரே.**

இது குறையுடையதென்றும், அழுக்கு நிறைந்ததென்றும், நிலையாததென்றும் நாம் நினைப்பதில்லை. மரணம் என்னும் பெருங்காற்று வீசினுல் இந்தக் குடிசை நிலைகெட்டுச் சிதறி வீழும்; உள்ளே இருப்பவராகிய உயிர் வேறு குடிசையைத் தேடிப் போய் விடுவார். இவற்றை எண்ணுமல் இந்த உடம்பே சதம் என்று எண்ணி இதைப் பேணிப் பாதுகாத்து வைத்துக் கொள்கிருேம். உயிர் என்றும் புகுந்து இன்புற்று

வாழும் நிலையான வீடு ஒன்று உண்டு என்பதை அறிந்து கொள்வதில்லை. அப்படி ஒன்று இருக்கிறதென்று பெரிய வர்கள் சொன்னால் அதை நம்புவதில்லை.

ஞானம் பெற்றவர்கள் இந்த உடம்பாகிய வீடு நிலையாதது என்பதை உணர்ந்து நிலையான வீடாகிய முத்தியைப் பெற முயல்வார்கள். இறைவன் திருவருளால் அத்தகைய நெறியில் நிற்கும் நல்லறிவு அவர்களுக்கு உண்டாகும்.

"ஒருபூ தரும்அறி யாத்தனி வீட்டில்உரை
உணர்வுஅற்று
இருபூத வீட்டில் இராமல்என்றான்"

என்று **அருணகிரியார்** பாடுகிறார். அந்தத் தனி வீட்டிலே புகும் முயற்சியே பக்தியோகம், கர்மயோகம், ஞானயோகம் என்று வெவ்வேறு வகையாக இருக்கும்.

மெய்யறிவுடையவர்கள், 'இந்த ஆபாசக் கொட்டிலில் இருக்க வேண்டியிருக்கிறதே!' என்ற அருவருப்போடிருப் பார்கள். "அருவருக்கும் உலக வாழ்வு" என்று **குமரகுருபரர்** பாடுகிறார். ஆனால் பெரும்பாலோர் இந்த உடம்பிலே மோகம் கொண்டு, இதனால் பெறும் சிற்றின் பமே இன்பம் எனக் கொண்டு வாழ்கிறார்கள். முன் வினைக்கு ஏற்றபடி இந்த உடம்பைக் கொடுத்த மறைக்காடனாருக்கு இதில் வாழ்ந்து, இதன் குறைபாடுகளை நன்கு அறிந்து, நிலை யான வீட்டில் வாழ வேண்டும் என்று முயன்று, அதை அடை யச் செய்ய வேண்டும் என்பதே திருவுள்ளம். ஆனால் இந்த உடம்பாகிய குடிசையின் இழிவை எண்ணாமல் உயிரானது இதிலே ஆசை வைத்து மயங்கி வாழ்கிறது. இறைவர் செய் யும் திருவிளையாடல் இது.

**கால்கொடுத்து இருகை ஏற்றிக்**
**கழிநிரைத்து இறைச்சி மேய்ந்து**
**தோல்படுத்து உதிர நீரால்**
**சுவர்எடுத்து இரண்டு வாசல்**
**ஏல்வுடைத் தாஅமைத்துஅங்கு**
**ஏழுசா லேகம் பண்ணி**
**மால்கொடுத்து ஆவி வைத்தார்**
**மாமறைக் காட னாரே.**

*பெருமையையுடைய திருமறைக்காட்டில் எழுந்தருளிய சிவபெருமான், குடிசையைத் தாங்கும் தூண்களைப் போல இரண்டு கால்களைக் கொடுத்து, இருபக்கத்திலும் இரண்டு சார்புகளைப் போல இரண்டு கைகளை மேலே ஏற்றி வைத்து, எங்கும் கழிகளைப் போல எலும்புகளை வரிசை வரிசையாகப் பொருத்தி, ஊனென்னும் கீற்றால் வேய்ந்து, மேலே தோல் பூச்சைப் பூசி, இரத்தம் என்னும் நீரினால் குழைத்துச் சுவர்களாகிய உடம்பின் உறுப்புக்களை அமைத்து, வாய், மலங் கழிக்கும் இடமாகிய இரண்டு வாசல்களைப் பொருத்தமுடையனவாக அமைத்து, அந்தக் குடிசையில் கண் இரண்டு, காதுகள் இரண்டு, நாசித்துளை இரண்டு, சிறுநீர் கழிக்கும் உறுப்பு ஒன்று ஆகிய ஏழு சாளரங்களை வைத்து, இந்தக் குடிசையில் வாழவேண்டுமென்ற ஆசையைக் கொடுத்து இதனுள் உயிரை வைத்தார்.*

[குடிசையைக் கட்டும் முறையில் சொல்லாமல் முன் பின்னாக வைத்தார் செய்யுளாதலின். பொருள் தொடர்பு அமையும்படி, 'உதிர நீரால் சுவர் எடுத்து, கால் கொடுத்து, இரு கை ஏற்றி, இரண்டு வாசல் ஏல்வுடைத்தா அமைத்து, ஏழு சாலேகம் பண்ணி, இறைச்சி மேய்ந்து ஆவி வைத்தார், என்று அந்வயம் செய்து கொள்ளவேண்டும்.

கால்-உடம்பிலுள்ள கால், கம்பம். கை-கரம், வீட்டில் இரு பக்கங்களிலுள்ள சார்பு. கழி-எலும்பு, குச்சிகள். நிரைத்து-வரிசையாக வைத்து. இறைச்சியாகிய கூரை. வேய்ந்து என்பது

மேய்ந்து என்று மருவியது; வழக்குச் சொல். தோல் படுத்து-தோலை விரித்தமைந்து. இரண்டு வாசல்-முன்வாசல் பின் வாசல்; வாயும் குதமும். ஏல்வு-பொருத்தம். உடைத்தா:ஒருமை பன்மை மயக்கம். அமைத்தலுக்கு அடையாக்கினால் அம் மயக்கம் இல்லை. சாலேகம்-சாளரம். மால்-ஆசை, விருப்பம். ஆவி-உயிர். ஏகாரம், ஈற்றசை. முற்றும் உருவகமாக இல்லாமல் ஏகதேச உருவகமாக அமைந்த பாட்டு இது.]

நான்காம் திருமுறையில் 33-ஆம் பதிகத்தில் உள்ள நான்காவது திருப்பாட்டு இது.

# 27. நீதியார்

சிவபெருமான் தம் சடையில் மற்றவர் சூடாதவற்றைச் சூடியிருக்கிருர். அழகும் சிறப்பும் உள்ள பொருள்களைப் பிறர் அணியும்படி வழங்கிவிட்டு மற்றவர் அணியக் கூசுகின்ற வற்றை அவர் அணிந்திருக்கிருர். தியாகிகள் இப்படித்தான் செய்வார்கள். சுயநலக்காரர்கள் நல்லவற்றையெல்லாம் தாங்கள் எடுத்துக் கொண்டு அல்லாதவற்றை மற்றவர் களுக்குத் தாராளமாகக் கொடுக்க வருவார்கள். "அழுகல் பழம் ஐயருக்கு" என்ற பழமொழி இந்தக் கருத்தைத் தெரிவிக் கிறது.

இறைவர் கார்காலத்தில் மலரும் கொன்றை மாலையைச் சூடியிருக்கிருர், அதோடு கதிர் வீசும் பிறையையும் அணிந் துள்ளார். அரவுகளையும் புனைந்திருக்கிருர். அரவும் மதியும் ஒன் றற்கு ஒன்று பகையாக உள்ளவை. அவை இறைவருடைய சடையில் பகை உணர்ச்சி இன்றிச் சேர்ந்திருக்கின்றன. இறை வரிடம் ஈடுபட்டவர்கள் பகைத்தன்மை இல்லாமல் ஒன்றி யிருப்பார்கள் என்ற உண்மையை அந்தச் சேர்த்தி புலப்படுத்து கிறது. அங்கே கங்கையையும் வைத்திருக்கிருர். இவ்வாறு பல வற்றையும் ஒன்றுபடுத்தி வைக்கும் நீதியை உடையவர் எம் பெருமான்.

**காருடைக் கொன்றை மாலை**
**கதிர் மதி அரவினேடு**
**நீருடைச் சடையுள் வைத்த**
**நீதியார்.**

அவர் இடபவாகனத்தை உடையவர். தருமமே விடையாக நின்று அவரைத் தாங்குகிறது. அது யாரையேனும் எதிர்த்துப்

பொருமானால் அந்தப் போர் நியாயத்தை நிலைநாட்டும் போராகவே இருக்கும்.

**நீதி ஆய**
**போருடை விடை ஒன்று ஏற**
**வல்லவர்.**

இத்தகைய எம்பெருமான் திருவிடைமருதூரைத் தம்முடைய வாசத்தலமாகக் கொண்டு எழுந்தருளியிருக்கிறார். அந்தத் தலம் காவிரியாற்றின் தென்கரையில் அமைந்திருக்கிறது. அங்கே நிலவளமும் நீர்வளமும் சிறந்திருப்பதால் அங்கங்கே பொய்கைகளில்,தாமரை மலர்கள் நன்றாக மலர்ந்து அழகு தோன்ற ஓங்கி நிற்கும். இறைவர் எழுந்தளியிருக்கும் திருத்தலத்தில் வளர்கிறோம் என்ற உணர்ச்சியினால் அப்படி மலர்கின்றனவோ? அடியார்கள் இறைவரைத் தரிசித்து முகம் மலர நிற்பார்கள். அந்தக் காட்சியை இந்தத் தாமரை மலர்கள் நினைவுறுத்துகின்றன.

**ஏருடைக் கமலம் ஓங்கும்**
**இடைமருது இடம் கொண்டாரே.**

இறைவருடைய திருவருள் இருந்தால் நீதியும் நேர்மையும் நிலவும். நீதியுடனும் நேர்மையுடனும் உள்ள அன்பர்கள் வாழும் ஊரில் நல்ல மழை பொழியும்,பொய்கைகள் நிரம்பிப் பொலியும், அவற்றில் தாமரை மலர்கள் பூத்துத் தலை நிமிர்ந்து விளங்கும். இந்த எண்ணங்களைத் தோற்றுவிக்கும்படி, திருவிடைமருதூரில் எழுந்தருளியிருக்கும் மகாலிங்கத்தைப் பாடுகிறார் அப்பர் சுவாமிகள்.

**காருடைக் கொன்றை மாலை**
**கதிர்மதி அரவி னோடு**
**நீருடைச் சடையுள் வைத்த**
**நீதியார், நீதி ஆய**

**போருடை விடைஒன்று ஏற**
**வல்லவர், பொன்னித் தென்பால்**
**ஏருடைக் கமலம் ஓங்கும்**
**இடைமருது இடம்கொண் டாரே.**

*கார் காலத்தைத் தான் மலரும் பருவமாக உடைய கொன்றை மலர்களால் ஆன மாலையையும், கதிர் வீசும் மதியையும், பாம்போடு சேர்த்து, கங்கை நீரை உடைய தம் சடையுள் வைத்த நீதி வடிவமாக உள்ளவர், நியாயமான போர் செய்தலை உடைய இடப வாகனம் ஒன்றின்மீது ஏறும் வன்மையை உடையவர், காவிரியாற்றின் தென்கரையில், அழகையுடைய தாமரை மலர்கள் மலர்ந்து உயர்ந்து விளங்கும் திருவிடைமருதூரைத் தம் இடமாகக் கொண்டு நித்தியவாசம் செய்கிறார்.*

[கார் காலத்தில் கொன்றை மலரும்; "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த், தாரன், மாலையன், மலைந்த கண்ணியன்" (**அகநானூறு**, கடவுள் வாழ்த்து). 'கொன்றை மாலைக் கதிர்மதி' என்பது ஒரு பாடம். அதற்கு, 'கொன்றையையும் மாலையிலே தோன்றும் கதிரையுடைய பிறையையும்' என்று பொருள் கொள்ளவேண்டும், நீர் என்றது கங்கையை. நீதி-நியதியுமாம். தருமதேவதை தீயவை செய்தாரை ஒறுக்கும், ஆகவே, 'நீதியாய போருடை விடை' என்றார். அறப்போர் என்று இதைச் சொல்வார்கள். எல்லோரும் தருமத்தை வாகனமாகக் கொள்ள இயலாது. தருமத்தை இறைவர் பாது காத்துத் தாங்குகிறார். அதனால் அது அவருக்கு வாகனமாக இருந்து தாங்குகிறது.

திருமாலே இடபமாக இருப்பதுண்டு. திருமால் உலகில் திருவவதாரம் செய்து பொல்லாதவர்களை அழித்து நியாயத்தை நிலைநாட்டினார். ஆதலின் இங்கே விடையென்றது திருமாலாகிய இடபத்தை என்றும் கொள்ளலாம். ஏர்-அழகு; எழுச்சியும் ஆம். "பூவினுக்கு அருங்கலம் பொங்கு தாமரை"

என்பது அப்பர் திருவாக்கு, இறைவர் பிறர் அணியாத சாதாரண மலராகிய கொன்றையை அணிந்திருந்தாலும் அவர் இருக்கும் இடத்தில் பூவினுட் சிறந்த தாமரைகள் மலர்ந்து விளங்குகின்றன. ஏ: ஈற்றசை.

நீதியார், வல்லவர். இடைமருது இடம் கொண்டார் என்று ஆற்ரெழுக்காக முடித்துப் பொருள் செய்க.]

நான்காம் திருமுறையில் 35-ஆம் பதிகத்தில் மூன்ருவது பாட்டாக உள்ளது இது.

# 28. நினைக்குமாறு நினைத்தல்

திருநாவுக்கரசர் அறியாமையால் சமண சமயத்தைச் சார்ந்து அங்கே ஆசார்ய புருஷராக அமர்ந்திருந்தார். பிறகு இறைவன் திருவருளால் மீட்டும் சைவ சமயத்தை வந்து அடைந்தார். பரம்பரையாக வந்த சிவநெறியை விட்டுப் புறச் சமயத்திற்குச் சென்ற பிழையை நினைந்து நினைந்து வருந்தினார். அந்த எண்ணம் அவர் உள்ளத்தில் உறுத்திக் கொண்டேயிருந்தது. சிவபெருமானுக்கு அடிமை என்ற முத்திரையை மாருத வகையில் பெறவேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று. ''எம்பெருமானே, என்மேல் உன் இலச்சினையையும் சூலக் குறியையும் பொறித்தல் வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். இறைவன் அப்படியே செய்தான். அதன் பின்னும் அவருக்கு மனநிறைவு உண்டாகவில்லை. ''காலன் வந்து என் உயிரைப் பிரித்துக்கொண்டு போவதற்கு முன் உன் திருவடி தீட்சையை நான் பெறும்படி அருள்புரிய வேண்டும். இல்லையெனின் தன்னை நம்பினவனை நட்டாற்றில் விட்டுவிட்டான் என்ற பழி உன்னை வந்து சேரும்'' என்று முறையிட்டார்.

''கோவாய் முடுகி அடுதிறற் கூற்றம் குமைப்பதன்முன்
பூவார் அடிச்சுவடு என்மேற் பொறித்துவை; போகவிடில்
மூவா முழுப்பழி மூளும்கண் டாய்; முழங் கும்தழற்கைத்
தேவா, திருச்சத்தி முற்றத் துறையும் சிவக்கொழுந்தே''

என்று விண்ணப்பித்தார். மெய்யடியாருக்கு இரங்கியருளும் சிவபெருமான் நல்லூர் என்னும் தலத்தில் அவர் தலைமேல் திருவடி வைத்துத் திருவடி தீட்சை செய்தருளினன். அதனல் பேருவகை அடைந்தார்.

"நினைந்தனைய திருவடிஎன் தலைமேல் வைத்தார்
நல்லூர்எம் பெருமானார் நல்ல வாறே"

என்று பாடினார். 'இனி எம்பெருமான் என்னைக் கைவிடமாட்டான். நான் தவறினாலும் என்னைப் புறம்போகாமல் ஈர்த்து ஆட்கொள்வான். அவனுடைய திருவருள் உறைப்பினால் காலனால் உண்டாகும் துன்பமும் என்னை அணுகாது' என்ற உறுதி அவருக்கு உண்டாயிற்று. அதனால் அவர் ஒரு வகையான பெருமிதத்தை அடைந்தார்.

திருநெய்த்தானம் என்ற திருத்தலத்துக்குச் சென்று இறைவனைப் பாடினார். அப்போது இந்தப் பெருமித உணர்ச்சி அந்தப் பாடலில் வெளிப்பட்டது. 'இறைவன் தன் திருவடியை என்மேல் வைத்து ஆட்கொண்டான். அந்தத் திருவடி காலனை வீழும்படி உதைத்த பேராற்றலை உடையது. அதன் துணை எனக்கு இருப்பதனால் எனக்கு இனி யாதோர் அச்சமும் இல்லை' என்று பாடுகிறார்.

"எனக்குக் கிடைத்த பேறு எத்தகையது தெரியுமா? காலனை வீழும்படி மோதிய திருவடி அது; அந்த வீரச் செயலுக்கு அடையாளமாகக் கழலை அணிந்தது. எம்பெருமான் அந்தத் திருவடியை மட்டும் என்மேல் வைக்கவில்லை. தன் திருவடிகள் இரண்டையும் என்மேலே வைத்தான். கழலடி இரண்டும் வந்து மேலனவாக இருக்கும் பெரும் பேற்றை யான் பெற்றேன்."

**காலனை வீழச் செற்ற**
**கழல் அடி இரண்டும் வந்து என்**
**மேலவாய் இருக்கப்பெற்றேன்.**

"இதற்கு முன்பெல்லாம் என் மனம் எங்கெங்கோ ஓடித் திரிந்தது. எதை எதையோ நினைந்துக் கொண்டிருந்தேன். என்னுடைய பொல்லாங்கையும் புறச் சமயப் படுகுழியில்

விழுந்து ஏறமாட்டாமல் தவித்த தவிப்பையும், அதனால் உண்டான கவலைகளையும் எண்ணி எண்ணி ஏங்கினேன். இப்பொழுது அந்த எண்ணங்கள் இருக்குமிடம் தெரியாமல் ஓடி மறைந்தன. இறைவன் திருவடியை நான் முடியாகச் சூட்டிக் கொண்ட பிறகு பிரபஞ்சத்தையே ஆளும் மன்னனுக்குள்ள பெருமிதத்தோடு இருக்கிறேன்.''

இவ்வாறு எண்ணமிட்ட அப்பர் சுவாமிகள் இறைவனை நோக்கியே சொல்கிறார். ''நீலமணியைப் பதித்து வைத்தாற் போல, ஆலகால நஞ்சைக் கண்டத்தில் வைத்திருக்கும் திருக் கழுத்தையுடைய பெருமானே, மேன்மையுடன் தோன்றுகின்ற அழகையுடையது திருநெய்த்தானம் என்னும் தலம். அங்கே மரங்கள் அடர்ந்து தழைகள் செறிந்து குளிர்ந்திருக்கும் பொழில்கள் உள்ளன. அவற்றினிடையே உள்ள திருக் கோயிலில் நீ எழுந்தருளியிருக்கிறாய். பிறர் கண்டாலே அஞ்சுகின்ற நஞ்சை நீ அழகு பெற்ற நீலமணியைப் போலக் கண்டத்தில் தரித்திருக்கிறாய். உன்னை நான் எப்படி நினைக்க வேண்டுமோ அப்படி இடைவிடாமல் நினைத்துக் கொண்டிருக்கிறேன்.''

**மேதகத் தோன்றுகின்ற**
**கோல நெய்த்தானம் என்னும்**
**குளிர் பொழிற் கோயில் மேய**
**நீலம் வைத்தனைய கண்ட,**
**நினைக்குமா நினைக்கின்றேனே.**

''முன்பு உன்னை நினைக்கும் போதெல்லாம் வேறு நினைவுகள் வந்து குறுக்கிடும். மனம் சலனம் உள்ளதாக இருந்தமையால் உன் திருவுருவத்தைத் தெளிவாக உள்ளத்தே நிறுத்த முடியவில்லை. உன் திருவடி தீட்சை பெற்ற பிறகு என் மனம் எங்கும் அலைவதில்லை. ஓடும் வண்டிக்குப் 'பிரேக்' போட்டது மாதிரி நின்றுவிட்டது. அங்கே உன்னுடைய வடிவமே தெரிகின்றது. ஒரு குளத்தில் அலைகள் இல்லாமல் இருந்தால்

தரையில் யானை இருந்தாலும் அதன் பிரதி பிம்பம் தெளிவாகத் தெரியும். வானம் தெரியும். கதிரவன் தெரிவான். அருகில் நிற்கும் மரங்களெல்லாம் தெளிவாகத் தெரியும். என் மனம் உன்னுடைய திருவடி தீட்சைக்குப் பிறகு அலையடங்கிய குளம்போல இருக்கிறது. இதில் எங்கும் உன்னுடைய காட்சியே தெரிகின்றது. உன்னை ஒரு முகமாக நினைக்கும் ஆற்றல் எனக்கு உண்டாகிவிட்டது'' என்று சொல்கிறார் அப்பர்.

**காலனை வீழச் செற்ற**
**கழல்அடி இரண்டும் வந்துஎன்**
**மேலவாய் இருக்கப் பெற்றேன்;**
**மேதகத் தோன்று கின்ற**
**கோலநெய்த் தானம் என்னும்**
**குளிர்பொழிற் கோயில் மேய**
**நீலம்வைத் தனைய கண்ட,**
**நினைக்குமா நினைக்கின் றேனே.**

* மேன்மை உண்டாகத் தோற்றப் பொலிவுடன் இருக்கின்ற அழகையுடைய திருநெய்த்தானம் என்னும், குளிர்ந்த பொழில்களையுடைய திருக்கோயிலில் நித்தியவாசம் செய்யும், நீலமணியைப் பதித்து வைத்தாற் போன்ற திருக்கழுத்தையுடைய எம்பெருமானே, காலனை வீழும்படி அடர்த்த நின்னுடைய கழலை அணிந்த திருவடிகள் இரண்டும் நின் அருளால் தாமே வந்து என்மேல் உள்ளனவாக இருப்பதற்குரிய பெரும்பேற்றை அடியேன் பெற்றேன். (இனி எனக்கு எந்தக் கவலையும் இல்லை.)*

[கழல்-வீரகண்டை, அதை ஒரு காலில் அணிவது வழக்கம். இறைவன் திருவடிகள் இரண்டும் பல பராக்கிரமச் செயல்களைச் செய்தன வாதலின் கழல்களை அணிந்தன. வந்து-அடியேன் முயன்று தம்மை அடையாவண்ணம் அவை தாமே வந்து. என் மேலவாய்-என்தலைமேல் உள்ளனவாக. இருக்கப்

பெற்றேன்-இருக்கும் பேற்றை அடைந்தேன். மேதக-மேன்மை தக; மேன்மை உண்டாகும்படி. தோன்றுகின்றகோலத்தையுடைய கோயில், பொழிற்கோயில். கோலம்-அழகு. நெய்த்தானம் என்பது தலத்துக்கும் பெயர்; கோயிலுக்கும் பெயர். சில இடங்களில் இரண்டும் வெவ்வேருக இருக்கும். மேய-விரும்பித்தங்கிய, நீலம்-நீலமணி; கருங்குவளை மலர் என்பதுமாம்; ''குவளைக் களத்தம்பலவன்'' (33) என்பது **திருக்கோவையார்.** வைத்தனைய - வைத்தாலனைய. நினைக்குமா - நினைக்குமாறு; ஈறு கெட்டது.]

இது நான்காம் திருமுறையில் 37-ஆம் திருப்பதிகத்தில் வரும் முதற்செய்யுள்.